உ

கடவுள் துணை.

பதினெண்சித்தர்களில்

மகாமகுத்துவம்பொருந்திய

# தேரையர்வயித்தியம்

# சூரு(ஙூ)ா.

இவை,

மதுரை-புதுவை-சென்னை இச்சங்களில்

தமிழ்த் தலைமைப்புலமை நடாத்திய

களத்தூர்

வேதகிரி முதலியார் குமாரர்

**ஆறுமுக முதலியார்**

ஆயுள்வேத பாஸ்கரன்

**கந்தசாமி முதலியார்**

இவ்விருவர்களால்

பற்பல ஏட்டுப்பிரதிகளைக்கொண் டாராய்ச்சிசெய்து


சென்னை

**T. சாரதாபுத்தகசாலையார்**

அவர்களால்,

நெ 1/34, நயினியப்பநாய்க்கன்வீதி

பார்க்டவுன் போஸ்டு சென்னை.

ஸ்ரீ சுப்ரமணிய விலாசம் பிரஸ், சென்னை.

இதன் விலை 1933 ரூபா 1-8-0.





# தேரையர் சரித்திரம்

---*---

தெய்வீகத்தன்மை பொருந்திய அதஸ்திய முனிவர் தன்னருள் ஞானோப தேசங்களைத் தனக்குத்தக்க சிஷனொருவனுக்குப் போதிக்கவேண்டுமென்று கருதி யிருந்ததால் அவரொற்றவொருநாளில் அக்கருதியை நினைந்து ஊமைப் பிள்ளையாயிருந்தால் மெத்த நலமென்றெண்ணி பொதியை விட்டிறங்கி ஊருக் குட் பிரவேசமானார் அப்போது அருள் தங்கிய ஔவையென்பவள் இவர்வருஞ் செய்தி யறிந்து முற்பிறப்பில் இராமதேவரென்றும், யாக்கோட என்றும் பெயர்தங்கிய இருவரையும் அழைத்து அப்பா மைந்தர்களே அகஸ்திய மகா முனிவர் தன்னுடைய ஞானோப தேசங்களை ஓர் நற்சிஷனுக்கு போதிக்க வேண்டுமென்று நினைத்து வருகின்றார் ஆனதால் அவரிஷ்டப்படி முடிக்க வுபாய தந்திரங்கள் கூறுகிறேன் அதென்னெனில் அவர் ஊமைப்பிள்ளை வேண்டுமென்று விரும்புவதால் உங்களிருவரில் மூத்தவனாகிய இராமதேவ னென்பவனே உன்னை மந்திரோபதேசத்தால் ஊமையாக்கி வைப்பேன் நீயு மவுனமுற்றிரு அவர் வந்தழைப்பார் உன்னைக் கொடுத்துவிட்டுப் பொன்னைப் பெற்றுக்கொள்ளுகிறேன் நீ அவர்பின் சென்று அவருக்குத் தொண்டு செய்து சகலகலையுமறிந்து சிலகாலங்கழித்து வருகவென்று வரங்கொடுத்தாள் அப் படியே அகஸ்தியரும் உடனே அழைத்துக்கொண்டு சென்றனர் பின்னிருவ ரும் அவர்சொற்படி பொதியையில் அவர் செய்யும் கிரியைகள் சகலமுமறிந்து இவரும் தெரியாதவர்போலிருந்தார் இப்படி யிருக்குங்காலத்தில் சங்கப்புலவர் களில் நக்கீரரென்டவருக்கு பத்து வருஷகாலமாய் தலை நோக்காடுகண்டு மெத்தவும் துன்பப்படுகிறதை அவரது சிஷர் நச்சினார்க்கினியார் அகஸ்தியரை யழைத்துக்கொண்டு சங்கத்திற்குச் சென்றனர் இவர் மருந்துப்பையும் கத்தி ரிக்குறடா சிமிட்டாக்களுடன் அவ்விடஞ்சென்றனர் அச்செய்தி சிஷனாகிய இராமதேவனும் தெரிந்துகொண்டு அவரும் பின் தொடர்ந்தனர் உடனே அகஸ்தியரும் தலை நோக்காடுடைய நக்கீரருக்குத் தலைகீறி மூளையைப் பற்றிக் கொண்டிருக்கிற தேரையை சிமிட்டாகொண்டு தூக்கப்போனார் அது மோசம் வருமென்றெண்ணி அப்போது சிஷனாகிய இராமதேவர் தடுத்தனர் அப் போது அகஸ்தியரும் கையசைந்தனர் உடனே ஊமையாகிய இராமதேவர் கைசாடை கண்சாடையாய் ஓர் பெரிய தாம்பாளத்தில் சலங்கொண்டு வரச் சொல்லி பக்குவமாய்த் தாம்பாளத்தைக் காண்பிக்க தேரையானது மூளையை விட்டுத் தண்ணீரில் குதித்தது அப்போது இராமதேவர் குருவுக்கு முந்தின சிஷனானார் இவ்வல்லமையைப் புத்திகளை அகஸ்தியர்கண்டு மெத்தவுஞ் சந்தோ ஷித்து இன்னம் தெரிந்தும் தெரியாத விஷயங்களையும் போதித்தார் உடனே தேரைவயித்தடைஞ்செய்ததால் இராமதேவர் என்றபெயரை நீக்க தேரையர் என்றுபெயர் கொடுத்தனர் இப்படியிருக்க இவர் இருமாப்புகொண்டு அநேக

சரக்குகளையும் நாகமலை பொன்மலை பித்தளைமலை வெள்ளிமலை கந்தகமலை தாளகமலை இப்படியாக்கொத்த அற்புதங்களை மானிடர் பிழைக்கவென்று உண்டாக்கினர் பின்னும் ஆயிரத்தெட்டு மாற்றுடைய தங்கமலை நிர்மிக்க வேண்டுமென்று நினைத்து அனேக தபோதனர்கள் சித்தர்கள் முனிவர்கள் வாசஞ்செய்யும்படியான நாகலாவரமலை யென்று சொல்லப்பட்ட மலைமுழுதும் மூளிகைகளினுல் சாற்பிழிந்து மலைமுழுதும் பூசி இரட்டைத் துருத்திகொண்டு ஊதத்தொடங்கினுர் அந்த தீபாக்கினியானது சித்தர் முனிவர்கட்குந் தகிக்க முடியாமல் அகஸ்தியருக்கு முறையமிட்டனர் என்னையா என்குருவே தேறையனென்பவனுக்கு தாங்கள் ஞானுபதேசமும் சர்வவித்தைகளும் போதித்தால் லோகமெல்லாம் சித்தாய்ப்போய்விடும் மலைமேற் சிகரம்வரையில் இவன் மீட்டுந் தீபாக்கினியானது நிர்வகிக்ககூடாதென்று கூறினுர்கள் உடனே அகஸ்தியருங் கோபங்கொண்டு இவரை இரண்டாக் கிழித்தெறிந்து பொதியைக்குப்போயினர் உடனே இவரதுவிசுவாசம்பெற்ற இரண்டு சிஷர்களங்கிருந்தனர் முன் தேறையரென்பவர் தன் குருவால் தனக்கிடையூறு வருமென்றெண்ணி சஞ்சீவியாகிய உயிர் மூலிகையை அவ்விருவருக்கு மருளிச்செய்திருந்தார் உடனே அச்சிஷர்களிருவரும் இருபாதியாயிருந்த தேறையரென்பவரை யொன்ருய்ச் சேர்த்து மூலிகை பிழிந்தனர் அவரும் உயிர்த்தெழுந்தனர் பின்னும் அனேக அற்புதங்களை லோகத்து மானிடர்களுக்கு விளைவித்தனரென்று பெரும்பாலும் பெரியோர்களால் கேள்வியுற்ரேம் மேற்கூறிய இராமதேவர் யாக்கோபு என்பவருடைய சரித்திரவரலாறை அவரவர்கள் செய்த நூலின் முகவுரையில் பார்த்தால் தெரியவரும் இச்சரித்திரத்தை இந்நூல் திருத்திய ஆயுள்வேத பாஸ்கரன் கந்தசாமி முதலியாரால் கேள்வியுற்றவரையில் அச்சிடத்துணிந்தனர்.

தேறையர் சரித்திர வரலாறு

முற்றுப்பெற்றது.

---



உ

கடவுள் துணை.

பதினெண்சித்தர்களில் மகாமகத்துவம்பொருந்திய

## தேரைய ரென்பவர்

திருவாய்மலர்ந்தருளிய

பெருநூலாகிய

# வயித்திய காவியம்

## ௲௫௱.

---

### காப்பு.

அண்டரண்டமாகிநின்றவையர்காப்பு
வானந்தக்கடலிலுள்ள வுமையேகாப்பு
கண்டமெனும்சரஸ்வதியின்தாயேகாப்பு
தனிவேலர்தாள்பாத மடியேன்காப்பு
தண்டரிகமானதிரு குமரவேள்தன்
சற்குருவின்திருமாலு மிடையேகாப்பு
கண்டமெனுந்தேரையன் வயித்தியகோர்வை
கருத்துடனேசாற்றுகிறேன் றெளிந்துபாரே 1

பாரேநீநிறைந்தபராபரனேபோற்றிப்
பாடுகிறேன்வயித்தியகாவியத்தை
வாரமுடனாயிரத்து அன்னூற்றுக்குள்
வாகானசெந்தூரம் லேகியபற்பம்
காரேநீதயிலமொடுகிருதமெண்ணெய்
கருவானவாக்கிராணக்குளிக்கமாத்திரை
சூரேதாங்கமெழுகோடு தபதங்கப்போக்கும்
சுளுவாகரசாயனமுஞ் சூட்டினேனே 2

(நூலாரம்பம்)

சுரத்திற்குக்குளிகை.

காப்பாமேகசுரத்துமருந்துகேள்
சேப்பாமிளகுசிறந்தவுள்ளுந்துடன்
வேப்பாமெருக்கன் விரும்பும்பாலாட்டியே
பாப்பான்கெவுரியும்பாங்காகக்கூட்டிடே 3

கூட்டுமெழுகாய்க்குலாவியரைத்துமே
நீட்டுமாத்திரைகிழலி லுலர்த்தியே
காட்டுதேனிற் கலந்துவருந்தவே
பூட்டுமேகசுர மோடிப்போகுமே 4

போகும்பத்தியம்பொன்னுக்கண்ணிக்கீரை
ஆகுங்கத்திரியானமுருங்கையும்
ஏகும்பச்சைப்பயறுடன்வுள்ளியும்
பாகுமிஞ்சியின்பச்சடியுண்டிடே 5

சன்னிக்கு மேற்பூசும் தயிலம்.

உண்டிடேசன்னிதிக்குத்தயிலமொன்று
விண்டிடேதேறையன் சொல்லுருதிமெய்
அண்டிடுவேப்பெண்ணெய்பரைப்படிவீதம்
கண்டிடுங்கலப்பைக்கிழங்கூட்டிடே 6

கூட்டுகாபிக்குலவும்வசம்புடன்
நீட்டும்வெள்ளுள்ளிக்காயம்விராகனற்
ஆட்டுவோமமஞ்சானசதகுப்பை
மூட்டும்வெந்தயமூன்றுவிரான்சேரே 7

சேர்த்துச்சாதிக்காய்சிறந்தபழச்சாற்றில்
பார்த்துமைபோல்பதமாயரைத்தெடு
நீர்த்துமெண்ணெய்யில்கரைய்க்கலக்கியே
பார்த்துமேகடும்பதத்திலிறக்கிடே 8

இறங்கியெண்ணெயை யிசைந்தமேனிற்பூசு
முறக்குஞ்சன்னியுமுயன்றவலியிசைப்

பிறக்கும்வாதப் பெருங்குடைச்சல்நோயும்
பறக்குமென்றல்லோபாடினேன்தேறனே 9

தேறன்சொல்மொழி திசையெட்டுக்குஞ்சரி
கூறநாவுகிடையாதுசித்தர்க்கு
வேறவாகடம்வேண்டுமோவேந்தர்க்கு
தீறயேங்கித்திரியாதேமாந்தரே 10

சூதகக்கட்டுக்கு-உப்பு.

மாந்தரேகேளுமங்கையர்சூதகம்
போந்துடையபவபூட்டுநேறனுப்பொன்று
சாந்துமெரந்திச்சாற்றினாலாட்டியே-
மேந்துபில்லையாய்மேவிடத்தட்டியே. 11

தட்டியேரவிதாக்குடன்காயவை-
எட்டெருவினிலிசைவாய்ப்புடம்போட
கட்டுவுப்புக்கலங்கியேபற்பமாம்
துட்டடையுப்புத்தேனிலருந்திடே 12

அருந்திடவின்னம் அறியவொருபாகம்
செருந்திடுப்பைச் செருபடைச்சாற்றினில்
பொருந்துபத்துமேசாமமரைத்திடு
குருந்தபில்லையுங்குடோரிநிறமாமே 13

நிறமாம்பில்லையைநிழலிலுர்த்திடு
உறமாய்க்குக்குடம்வுற்றபுடம்போடு
திறமாய்வெந்துமேதேர்ந்தவளம்போல்
பறமாய்நீறியேபற்பமுமாகுமே 14

ஆகும்பற்பத்தையாவின்நெய்யிற்கொடு
ஏகும்சூதகம் றத்தம்வெளிப்படும்
நீகும்வாதக்குடைச்சலும்நீங்கிடும்
போகும்பத்தியம்பூணுமுப்பாகாதே 15

ஆகாதப்பா அடவானவெள்ளுள்ளிச்
சாகத்தபிலஞ்சடுதிபில்த்தான்வடி

வாகாத்துட்டெடைவாங்கிடுமூன்றுநாள்
பாகாயுப்பினைப்பார்த்துவருந்திடே 16

அருந்துபத்தியமானபருப்பொடு
திருந்துபச்சையரிசிசமனதாய்
பொறுந்துமேபுனற்பாகமாய்க்காய்ச்சியே
தெரிந்துவைத்துத்தாள்தேர்ந்துமேயுண்டிடே 17.

பெருபாடுக்குதூர்மருந்து.

கண்டிடும்பெரும்பாடுவந்தோர்கட்கு
பிண்டிடுநாவற்பட்டைபிழிந்துமே
கண்டிடுந்தேவதாரம் விராகனெற்
கொண்டிடும்புளிமோரில்கொடுத்திடே 18

கொடுத்திடப்பாகுறைபாமல்மூன்றுநாள்
எடுத்திடும்பெரும்பாடுவெக்கேபோச்சு
கடுத்திடுங்காலேக்கடிகையருந்திட
படுத்திடும்பத்தியமுந்தானில்லையே 19

அஷ்டகுன்மத்திற்கு உப்பு.

இல்லையேவஷ்டக்குன்மவியாதிக்கு
தில்லைபாடுஞ்சிவன்பதஞ்சாட்சியாய்
வெல்லுந்தேறையன் வேந்தற்குரைக்கிறேன்
நல்லவுப்புமேநாழியெடுத்திடே 20

எடுத்திடப்பையெருமைமோர்தன்னுடன்
வடுத்திடுவரிக்குமட்டிச்சாறெண்பலம்
தொடுத்திடும்வெடியுப்புமேயாற்பலம்
வடுத்திடும்வளையலுப்புநாலதே 21

நாலதாய்ச்சவுட்டுப்புமேநாற்பலம்
மேலதானயிந்துப்புமே வெண்பலம்
கோலமாயிதைக்குறித்திடும்பாண்டத்தில்
காலமோருங்கலந்துகடுப்பேற்றே 22

ஏற்றியக்கினிறித்தி யெடுமோற்சாமம்
சாற்றுமுப்பது சர்க்கரைபோலாகும்
போற்றியீசனே பொருந்தத்துதித்துமே
ஆற்றிச்சிமிழி லடைக்கங்கள்செய்திடே. (23)

செய்துகாலே சிறந்தவுதயாதி
ஐய்துமன்னரீ ரிளநீரில்தன்னிலே
கொய்துமுப்பைக் கொடுத்திடுவிராகன்கால்
தொய்துமண்டலந் துணிவாயருந்திடே. (24)

அருந்திடக்கட்டி யாம்பல்பொருமலும்
செரிந்திடும்சோகை செனித்திடுகிரிச்சியும்
கெரிந்திடுங்கவுசைக் கெண்டைவாயுவும்
செரிந்திடுமகுலைக் கட்டிநீங்குமே. (25)

நீரடைப்புக்கு வாழைக்கிழங்கின்நீர்

நீங்குமுப்பினல் நீரடைப்புபோகும்
பாங்குங்கதலிப் பரிவாங்கிழங்கையும்
ஓங்கிவெட்டிட வுச்சிதநீர்வரும்
ஆங்குநீரி லரைப்படிதானெடே. (26)

எடுத்திடும்வெடியுப்பு விராகன்கால்
கொடுத்திடும்பத்தியம் பசமோரன்னம்
தடுத்திடாதேறையன் வாக்குபொய்யாது
அடுத்திடும்நீ ரடைப்புதானேடுமே. (27)

அண்டவியாதிக்கு எண்ணெய்

ஓடும்அண்டவியாதிக்கு எண்ணெய்கேள்
தேடுந்தேறையன் தெளிவாயுரைக்கிறேன்
ஆடுமாமணக் கெண்ணெய்படியரை
தாடுமிளகு தக்காளிசேர்த்திடே. (28)

சேர்த்துவெந்தயஞ் சிறந்தபலமொன்று
பார்த்துயெண்ணெயில் பதமாய்க்கலந்துமே

தூர்த்தடுப்பினில் துய்யவெடுத்திடு
ஏர்த்துமேகடு கோடேபிறக்கிடே. (29)

இறக்கிகாலையி லேந்திழையேசேரும்
முறைப்படிப்பல மூன்றுநாள்தான்கொடு
கறைக்குமேபுளிக் காட்டாதேயுப்பையும்
சிறக்குமெண்ணெயைத் தேரனுரைத்தேனே. (30)

உரைக்கும்பத்திய முண்டிடுவாறுநாள்
இரைக்குமேயறு சுவைபதார்த்தங்களு
பரைக்குமேழுநாள் பத்தியந்தான்முறி
முரைப்படிதேரன் முனிவற்குரைத்தேனே. (31)

ஒருதலைவியாதிக் கெண்ணெய்.

உரத்துமெத்தலை வியாதிப்பிணிநீங்க
காத்துமெள்ளெண்ணெய் கணக்குடனுழிதான்
சிறக்குமாவின்பால் சோரைகாலதாய்
நிறக்குங்கம்பஞ் சோற்நீரையுங்கூட்டிடே. (32)

கூட்டுமாதொண்டைக் கோவைத்துளிர்ச்சாறும்
நீட்டுமிளகு சேர்ந்தபெருங்காயம்
போட்டுமெண்ணெயில் பொடித்துக்கலக்கியே
வாட்டடுப்பினில் வைத்துயெரித்திடே. (33)

எரித்துக்காலையி லேழுநாள்தானஞ்செய்
தெரித்துமண்டைநோய் தேர்ந்தகண்ணுக்குத்து
கரித்துக்காலையில் கணக்காய்முழுகிட
குரித்துவோடும் வியாதிகைகண்டதே. (34)

ஒருதலைநோய்க்கு நசியாக்கிராணம்.

கண்டபோது கண்டத்தின்வியாதிக்கு
அண்டமேபெருங் காயஞ்சமுத்திரா
பெண்டுமேமுலைப் பாலினலாட்டியே
உண்டும்நாசியில் வுறையப்பிழிந்திடே. (35)

பீசினத்திற்கு நசியப்போக்கு.

பிழிந்திடுமின்னம் பெருத்தநசியங்கேள்
கழிந்திடுங்காரங் கருதுமெருக்கனும்
விழிந்திடுமாதளம் பூகொழுந்துடன்
தழுந்திடுங்குங்குமப் பூவுந்தூக்கிடே. (36)

தூக்குங்கன்னியின் துய்யமுலைப்பாலில்
தாக்குங்கல்வத்தில் தாழவரைத்துமே
பாக்கும்நாசியில் பாங்காய்ப்பிழிந்திட
நீக்கும்பீனசம் நீங்கியேயோடுமே. (37)

செவிநோய்க்கு எண்ணெய்.

ஓடுங்காதி லுறைத்தபிணிகட்கு
தேடும்வெள்ளுள்ளி தேர்ந்தமரமஞ்சள்
காடுஞ்சுக்கொடுக் கடியவலம்புரி
நீடுஞ்சீரகம் நத்தையிறைச்சியே (38)

இறைச்சிமுட்டை யிசைந்தமுசரண்டம்
கரைச்சிமேகருங் கோழியினண்டமும்
துறைச்சிடும்நண் டிறைச்சிசமனதாய்
முறைச்சிடுங்கள்ளி முருங்கைச்சாற்சேர்த்திடே (39)

சேர்த்துமேசாறு சிறக்கவொருநாழி
பார்த்துமேபசும் பால்படிகாலதாய்
நார்த்தும்வேப்பெண்ணெய் நாழிசமனதாய்
கோர்த்துகலந்து கொதிக்களரித்திடே (40)

எரித்திடுமெண்ணெ யிசைந்தசெவியினில்
வரித்திடும்பிணி வாசாய்சொரிந்திட்டு
கிரித்திடும்பஞ்சில் நேராய்ப்பொதிந்திட
குரித்தநோயுங் குடியோடிபோகுமே (41)

## கண்படலத்திற்கு நேத்திராஞ்சனக் குளிகை

போகும்படலம் பூணியேபோவதற்
காருமிளகு கடியதோர்திப்பிலி
ஏகுஞ்சுக்கு விசைத்தமால்தாரமும்
ஆகுஞ்சங்கு வதிமதுரங்கூட்டே (42)

கூட்டுதுத்தங் கொடியபுங்கன்விரை
காட்டுச்சீரகங் கடுகுரோகணியும்
நீட்டும்பன் றியின் றேர்ந்தகொம்புப்பொடி
மாட்டுச்சிலையு மாமையெடுத்திடே (43)

எடுத்திடும்புலி ஏககமுடன்
கடுத்திடும்வெள்ளி கற்சாவல்தன்மலம்
சடுத்திடுமிந்துப்புச் சரியேசமன்
உடுத்திடுங்கல்வத்தி லுறவாடுமே (44)

ஆடுமேகந்திப் பத்திரியாவட்டம்
சூடும்பூச்சாறு சுண்டவரைத்துமே
கூடுமேமணிக்கயர் போலுருட்டியே
நீடுமாத்திரை நிழலிலுலர்த்திடே (45)

உரைத்துதேனி லுரைத்திடப்படலம்போம்
கரைத்துமேகன்னிப் பாலிலுரைத்திடு
விரைத்தநேத்திரம் விழியினிற்பூசிட
திரைத்தப்படலந் தேர்ந்துதானேடுமே (46)

## மாலைக்கண்ணுக்குமை

ஓடுமாலையின் கண்ணுக்குகந்தமை
நீடும்நீர்ச்சுழல் நேர்ந்தசாம்பலுடன்
கூடுங்கல்வத்தில் கூட்டுறவாகவே
தேடுமெள்ளெண்ணை தேர்ந்தபூண்டுச்சாறே (47)

சாறும்பத்திரிச் சார்ந்தவெள்ளுளியும்
நீறுமிளகு நேர்ந்தமைபோலாக

ஆறுவேளையந்தி சந்திபோட்டிடு
கூறுமேவிளக் கெண்ணெயில்மூழ்கிடே (48)

முழுகிடமாலைக் கண்ணுமுறிந்திடும்
நழுகிடப்பார்வை நட்சத்திரங்காணும் (49)
கழுகிடப்பார்வை கண்டுரூகப்பாயும்
பழுதிடதேறன் பாடியதுண்மையே (50)

நேத்திர நீர்வடிதலுக்குமை

உண்மையாக வுரைகிறேன்மையொன்று
வண்மையான வரப்பூலாபச்சிலை
கண்மையானக் கடுக்காய்மாசிக்காயும்
தண்மையானதோர் தான்றியுஞ்சேர்த்திடே (51)

சேர்த்திடுகாசு சிறந்ததோர்கட்டியும்
பார்த்திடும்படிப் பாங்காய்விராகனுற்
தூர்த்திடும்படித் துய்யவகித்துமே
ஆர்த்திடும்படி அரைப்பிழிந்திடே (52)

பிழிந்துமே கறண்டியில்புனிதமாய்
செழிந்துசினமாம் சேர்ந்தபொரியதும்
குழிந்தும்காரம் குறிக்குவிராகன்கால்
சுழிந்துமைபோல் சுறுக்காய்அரைத்தெடே (53)

எடுத்துமையை யிருகண்பொருந்தவே
அடுத்துவைந்து நாளன்பாஜப்பூசிடு
தொடுக்கும்புளியன் தேர்ந்தகஷாயத்தால்
கடுக்குங்கண்ணை கழுவிநீபார்த்திடே (54)

பார்க்கும்போது பாவுங்கண்ணீரெங்கே
ஆர்க்கும்போது அடர்ந்தசிவப்பேகும்
பூர்க்கும்பூளை பொருந்தவேயோடிடும்
தீர்க்கும்தேரையன் தெளிந்தமுறையிதே (55)

### நேத்திராஞ்சனம் தொண்ணூற்றுருக்கும் மருந்து

தேறன்வாக்கு திசையிலும்பொய்யாது
வேறமருந்து வெளியாயுரைக்கிறேன்
கூறுந்துளசி கொடியபுண்ணுக்கிலை
விறமேபுளி யிலையையெடுத்திடே (56)

எடுத்திடுங்கோள மிசைந்தகட்டியுடன்
கடுத்திடுந்தூளு கடிகையிரண்டதாய்
படுத்திடும்பழம் புளியையிசைந்துமே
தொடுத்திடுஞ்சீலை துணியுடன்கட்டிடே (57)

கட்டுமேகன்னிப் பாலினிலூறவை
எட்டுநாள்ரவி யெழிலாகக்காய்ந்தபின்
முட்டுங்கண்ணில் முயன்றவலிக்கிதை
செட்டுப்பட்சஞ் சிறக்கப்பிழிந்திடே (58)

சிறக்கும்வாரஞ் சிறந்ததலைநீர்வார்
முறக்குந்தொண்ணூற் முயன்றவலிநோயும்
இறக்குங்கபால மிசைந்தசூலைகள்போம்
பறக்குந்தேறன் பகர்வாக்குபொய்யாதே (59)

### தந்தவியாதிக்கு பஞ்சபூஷிதப்பொடி.

பொய்யாதய்யா புகலுங்குருமொழி
அய்யாமாந்தர்க் கறைவன்பொடியொன்று
செய்யாராவடம் சிறந்தபீங்காந்தனில்
கைய்யதான்றி கடுக்காயுந்தூக்கிடே (60)

தூக்குமாசக் கடுக்காய்துடிபலம்
நீக்கும்கார மிகழும்காசுக்கட்டி.
பாக்கும்பீங்கான பழரசந்தான்பிழி
காக்குங்கல்வங் கடியம்வைபோட்டிடே (61)

போட்டுமேயரை பொருந்தபூஷிதத்தை
ஆட்டுமேஜாமம் அறுபது சென்றபின்
கூட்டுமேயெடு குறித்துக்கணைசனை
நீட்டுமேகல்வம் நிழலிலுலர்த்திடே (62)

உலர்த்திடும்பொடி யுற்றபல்ரோகத்தை
கலர்த்திடும்பொடி காலையில்தேய்த்திட
பெலர்த்திடுந்தந்தம் பெரியபல்நோய்களும்
அலர்த்திடாம லலைந்துதானோடுமே (63)

பல்புழுவுக்கு

ஓடும்பல்லி லுறைந்தபுழுநீங்க
காடும்பல்லுக்குக் கன்னியினால்வாங்கி
நீடுங்கீழ்க்காயி னேர்ந்தநெல்லிவிரை
ஆடுங்காப்புக் கதிகந்தான்கட்டிடே (64)

கட்டிடேபின்னுங் கனமசியென்றோது
திட்டமாயுரு தேர்ந்ததோராயிரம்
சட்டமாய்ச்சொல்லிச் சாற்றிடுவவன்பேரை
விட்டுவோடும் விரைந்தபுழுக்களே (65)

வாய்ப்புண்ணுக்கு ரத்தசஞ்சித வெண்ணெய்.

விரைந்தவாயினில் வெல்லும்பிணிநேரில்
கரைந்தமாமணக் கெண்ணெய்யறுபலம்
அரைந்தசங்கஞ்சா றவற்குச்சரியிடை
பரைந்தவெள்ளுள்ளி பத்துப்பலமெடே (66)

எடுத்துமஞ்ச ளெழிலானகஸ்தூரி
கடுத்துகற்சீரங் கரியசீரகமும்
தொடுத்துமூன்றுந் துவளப்பொடித்துமே
அடுத்துவெண்ணெயி லன்பாகக்காய்ச்சிடே (67)

காச்சும்போது கடியகடுகுறும்
நீச்சுமேனி நெடியபுண்ணிற்பூச
ஆச்சமூன்றுநா ளாற்வேளைதான்கொள்ளு
போச்சுவாய்ப்புண்ணு பொருந்தவேயுண்டிடே (68)

உண்டிடும்போது வோடும்பிணிகேளு
அண்டிடுமரையாப்பு பிணிநீங்கும்

கண்டிடுமேகங் கருதியவெள்ளையும்
துண்டிடுஞ்சூலை சிறங்குவகைநீக்கும் (69)

நீக்கும்பத்திய நேர்ந்தபத்துநாளாம்
பாக்கும்வெந்நீரும் பச்சரிசியுண்ணு
ஏங்குமேழாநா ளெண்ணெகடுகுசேர்
தேங்கும்வாய்ப்புண்ணு தேறஞ்சொ லுண்மையே (70)

உண்மையாக வுரைக்கிறேன்சூரணம்
தன்மையான தாரம்பறங்கிச்சக்கை
வெண்மையான வெடியுப்புகல்லுப்பு
நுண்மையாக நறுக்கிப்பலமெடே (71)

எடுத்திடுமோவி னெண்ணெயாமணக்கு
கடுத்திடுமுறை கற்றாழைச்சாற்படி
முடித்திடும்படி மூன்றுசாமமெரி
அடுத்துமூன் றுநா ளாற்வேளையுண்டிடே (72)

உண்டிடும்போ துறையுங்கொ றுக்குபுண்
அண்டிடுமரை யாப்புதடிப்புகள்
மிண்டிடுஞ்சூலை கிரந்திபறங்கியும்
ஓண்டிடாம லுலகில்விட்டோடுமே (73)

சகலரணங்களுக்கும் சம்பூரணக்களிம்பு.

ஓடுங்களிம்பு வுரைப்பேனுஞ்சித்தர்க்கு
தேடுமிருதாறு தேர்ந்தகற்பூரமும்
கூடும்வெள்ளை குலவுகுங்கிலியம்
தாடலிங்கந் தயவாகச்சேர்த்திடே (74)

சேர்த்திடப்பா சிறந்தமாசிக்காயும்
தார்த்துமேகடு தான்றிகாசிக்கட்டி
பார்த்துவோரடை பாங்காகக்கல்வத்தில்
கோர்த்துமேவெண்ணெய் குலாவியரைத்திடே (75)

அரைத்திடப்பா வறுபதுசாமந்தான்
நிரைத்துதண்ணீரில் ேநாயமிதக்கவே

கரைத்துத்தண்ணீரில் கசடுகளதாறை
சிரைத்தசிமிழில் சிறப்பாயெடுத்திடே (76)

எடுத்திடுமெழிலா னகளிமபிதை
கடுத்திடுஞ்சூலை கடியரணங்கட்கு
அடுத்திடும்படி யரனதோர்மூன்றுநாள்
தொடுத்திடும்படித் தேறனுரைத்தனே (77)

தேறன்குருமொழி திசையிலும்பொய்யாது
வேறவாகடம் வேண்டுமோசித்தர்க்கு
கூறநாவு கிடையாதின்னூலுக்கு
தீறயேங்கித் திரியாதேசித்தரே (78)

சித்தர்கோர்வைகள் செப்பினானந்தம்
முத்தரானவர் முயன்றதனந்தமாம்
ஒத்தசாஸ்திரம் ஓங்கும்பெருநூல்கள்
பத்தர்மாமுனி பகர்ந்ததிதுவாமே (79)

தீராத விக்கலுக்கு

பகரும்விக்கல் பறக்கும்வழிகேளு
நிகருஞ்சந்தனம் நேருஞ்சாம்பிராணியும்
தகருமதுரந் தாக்குமகிலுடன்
முகருந்தூளாய் முடிந்துஎடுத்திடே (80)

எடுத்திடும்புகை யேகவிக்கலுக்கு
பிடித்திடும்படி மூன்றிருபோழ்தினில்
கெடுத்திடும்விக்கல் கெதிகெட்டுவோடிடும்
வடுத்திடுந்தேறன் வாக்குபொய்யாதிதே (81)

ஜன்னிமயக்க பித்தகியாழம்

பொய்யாதையா புகலுங்குருமொழி
அய்யாபித்தம் அகலும்படியாக
மெய்யாய்கோஷ்டம் விரும்புமபற்பாடகம்
துய்யாசிரந் துடிசேர்பலமெடே (82)

எடுத்திடும்பச்சை எழிலானநெற்பொரி
தொடுத்திடும்வில்வம் தொடரீந்தரிலவேம்பு
கடுத்திடுஞ்சுக்கு கடியகிலவிளா
அடுத்திடுமாறு தண்ணீர்படிசேறே (83)

சேர்த்திடும்காழி சிறந்தபடிபால்சேர்
பார்த்திடுஞ்சீனி பகரும்மறுபலம்
கோர்த்திடும்பாண்டங் குலாவிகலக்கியே
வேர்த்திடும்தீயில் லெழிலாயிறக்கிடே (84)

எறக்கும்போதெழி லானகணேசனை
சிறக்கப்போற்றி சிரமணிதாள்பணி
முறக்கமண்டல முயன்றகியாழிமுண்
பறக்கும்ஜன்னி பயந்தோடிப்போகுமே (85)

பித்தகாசத்துக்கு குக்கிலாதி

போகுங்காசம் புகலுக்கிலாதி
யேகுமாமணக் கெண்ணெயறுபலம்
ஆகும்பொன்னுங் கண்ணிச்சாறிருநாழி
பாங்கையாங் தகரைச்சாற்கூட்டிடே (86)

கூட்டும்மாசிக் குலாவுகடுக்காயும்
நாட்டுசீரம் நவிலும்கருஞ்சீரம்
நீட்டுதான்றி நிகழும்லவங்கமும்
கூட்டும்பத்திரி கூறும்வசம்பெடே (87)

எடுத்திடும்பட்டை எழிலாமகரம்பூ
கடுத்திடுஞ்சக்கை காசிக்கட்டியுடன்
அடுத்திடும்வால் மிளகுகசகசா
தொடுத்திடும்ஜாதிக் காயுடன் தூக்கிடே (88)

தூக்கியொன்று துவளவிடித்துமே
தாக்கிப்பாண்டங் தனியவேரத்திடு

நோக்கும்நாளருடோ தொருமண்டலம்
தேக்கும்பித்தகாசற் றெறித்தோடுமே (89)

ஓடும்பத்தியமுறையும் பொன்னாங்கண்ணி
சாடுத்துவரை சாற்றும்முருங்கிலை
நீடும்பிஞ்சி நிகலும்புளியாரை
கூடும்பத்தியங் குறையாமலுண்டிடே (90)

கபாலவலி ஜன்னிக்கி ரத்தினகோடாரித்தயிலம்

வண்டிடுங்கபால வலிபோவதற்
கண்டிடுங்கண்டங் கத்திரிவேர்சமன்
அண்டிடுமெண்ணெய் யாவின்படிபால்சேர்
தூண்டிடுமுசுக்கைச் சாற்படிபெடே (91)

எடுத்திடும்நொச்சி மெழிலாமாவிலிங்கை
அடுத்திடுமாலின் பட்டைபிடித்துமே
தொடுத்திடுமெண்ணெய் தோன்றகலக்கிடு
விடுத்திடுங்காயம் விராகன்சரிசேரே (92)

கசர்த்திடுங்குப்பை சிறந்தவசம்புள்ளி
கார்த்திடுமோமம் கடியசக்ராஷ்டம்
தூர்த்திடுங்கோஷ்டங் துடியாய்ப்பலமெடு
கார்த்திடுமெண்ணெய் முறைப்படிக்காய்ச்சிடே (93)

காய்ச்சுமெண்ணெய் கருதியமண்டலம்
மூச்சுடாமல் குழுகுமுறைவிடா
தோச்சமேகபால வலிசன்னியும்
போச்சுதென்று புகன்றனர்தேறனே (94)

சன்னி.13.க்கும்-எண்ணெய்

தேறன்சொல்மொழி திசையிலும்பொய்யாது
வேறயெண்ணெய் விளம்புவேன் கன்னிக்கி
கூறநோவம்பினெய் குறித்திடுபாண்டத்தில்
தூறமயிர்பீலித் தூடியாய்கறக்கிடே (95)

நறுக்கிவெண்ணெய் கழுகாமல்த்தான்போடு
குறுக்குஞ்சுக்குடன் குறித்திடுஞ்சாம்பிராணி
முறுக்குககால முதிர்ந்ததிப்பிலியும்
வறக்குமோமம் வகையாய்க்கிராம்பெடே (96)

எடுத்திடுமெழி லானமரத்தையும்
தொடுத்திடுங்குப்பை தொடர்ந்தமிளகுடன்
சடுத்திடும்ரச கற்பூரஞ்சமனெடை
பொடுத்திடுந்தேசா வரம்பொடித்திடே (97)

பொடித்துவெண்ணெய் பொருந்தபுகட்டியே
கடித்துமேபதம் நன்றுயிரக்கியே
படித்துப்பூசை பகர்ந்துகணேசற்கு
குடித்துமண்டல முறைப்படியுரைத்தேனே (98)

கசகசா லேகியம்

உரைக்குமலேகி யின்னமிதுமுறை
கறைக்கும்வாலு மிளகுகசகசா
திரைக்குநன்றி தேர்ந்ததண்ணிமிட்டான்
முரைக்கச்சூரண முற்றும்பொடிசெய்யே (99)

செய்துசர்க்கரை தெளிந்திடும்பாகினில்
எய்துஞ்சூரண மெழிலாகத்தூவியே
பெய்துநெய்யைப் பிசகாமற்கிண்டிடு
கொய்துபாகம் குறுகவெறக்கிடே (100)

எறக்கிமெல்ல வெழிலாய்க்கணேசனை
சிறக்கப்போற்றி சிறப்பா யிருவேளை
உறக்கமண்டல முற்றுமருந்திட
பிறக்கும்வியாதி போகும்வகைசொல்வேன் (101)

சொல்லுமினை சயகாசரோகம்போம்
வெல்லுந்தாது விரைந்தகூடுகள்போம்

அல்லூர்தாது வதிகவிர்த்தியுமாய்க்
கல்லுபோல மேனிக்கடுக்கவிறகுமே (102)

சோகை காமாலை வீக்கத்திற்கு கியாழம்

இறகுஞ்சோகை யிசைந்தகாமாலைக்கு
குறுகும்நெல்லி குறித்திடுமுள்ளியும்
அறுகும்வீழி வேரானவரசனும்
நிறுகுங்கையான் சேர்ந்ததொட்டிவேரே (103)

வேருடன்சிறு பூனைவேறினொடு
தூறுடன்சம் புடையதுளிருடன்
நாறுடன்சிறு கீரைநொஞ்சின்வேர்
ஊருடன்வாகை யூஞ்சல்பட்டைதூக்கே (104)

தூக்குஞ்சரக்குத் துய்யவொருபலம்
தாக்குங்கடுக்காய் தான்றிரோகணியும்
சீக்குஞ்சீரம் சிறந்தகாட்டுச்சீரம்
பாக்குந்திப்பிலி பகரும்விராணுறே (105)

ஆறுடனிவை யறியவிடித்துமே
கூறுபாண்டங் குலாவிசலமிட்டு
நீடுமெட்டொன்றாய் நோய்குறுக்கியே
பாருமேபதம் பாங்காகக்காய்ச்சிடே (106)

காய்ச்சியாறுநாள் கடுகவருந்திடு
போச்சுபத்தியம் பொருந்துமுப்பாகாது
நீச்சுசோகை நிகலும்நீர்க்கோர்வையும்
மூச்சிடாமல் முடுகியேயோடுமே (107)

(பித்த வெடிப்புக்கு)

ஓடுபித்த வெடிப்புவந்தோர்கட்கு
நாடுமருந்து நவிலுந்துளிர்தனை

நீடுமொன்றன் சேர்ந்தபாலினிலுண்
டுடும்பித்த முயன்றேடிப்போகுமே (108)

நீரிலுதிரங்கண்டால்.

போகும்நீரில் பொங்குமுதிரங்கண்டால்
ஏகும்பச்சை யெழிலாமரிசியை
வாகும்கிராவி வனமூலிதன்னிலே
பாகுமூன்றுநாள் பாங்காகவுண்டிடே (109)

உண்டபோது வுறையுமிரத்தமும்
அண்டிடாம லவனிவிட்டோடிடும்
தொண்டரான தொகுப்புள்ளமாந்தற்கு
கண்டுதேறையன் கடியவுரைத்ததே (110)

முழங்கால் வாதப்பிடிப்புக்கு

உறைக்கும்வாத முழங்கால்வியாதிக்கு
திரைக்கும்வீழியின் தேர்ந்தபுண்ணாக்கிலே
கரைக்குமாவாரை கடியவெள்ளுள்ளியும்
விரைக்குமாமணக் கெண்ணெய்யில்கூட்டிடே (111)

கூட்டுந்தீயில் கொதிக்களறக்கியே
தீட்டுவாதத் திமிர்முழங்கால்கட்கு
வீட்டிடாமலே வேதிட்டுகட்டிட
மீட்டுமேமுழங் கால்வாதமோடுமே (112)

தீராதரணங்கட்குப்புகை

ஓடும்ரணங்க ளுற்றபிணிகட்கு
நீடுங்கொழுஞ்சி சேர்ந்தபட்டாவாரை
பாடுமோரிலேப் பாகுடனுறவை
சூடும்லிங்கமுஞ் சுங்கானில்பூட்டிடே (113)

பூட்டுஞ்சுங்கான் புகைதாளிதம்பெற
நீட்டும்வாசியை நிறுத்திட்டடக்கியே

மூட்டுஞ்சுவாசு முடுகிப்பிடித்திட
நீட்டுமேகாணக் தெறித்தேகுமே (114)

தேங்கும்பத்தியர் தெளிந்தபாலுண்டிடு
ஆங்குமாறுநா ளன்னம்பருப்போடுண்
நீங்குஞ்சூலை நெருங்குமரையாப்பு
வாங்குங்கண்ணு வலிபறந்தோடுமே (115)

ஓடும்லிங்க முறுதிபிளவைபாம்
நீடுவேகண்டம் நேரும்விற்புருதி
கூடுங்கண்ணோசை குறிக்குங்கரப்பனும்
வாடும்பீனிசம் வரைந்தோடிப்போகுமே (116)

வாயுவுக்குக் கியாழம்

போகும்வாய்வுக்கு புகலுங்கியாழங்கேள்
ஆகும்சுக்கு அடர்ந்தகொடிவேலி
நீகும்பரங்கி நேர்க்தபட்டையுடன்
போகும்பிரமின் பொருந்துங்கிழங்கெடே (117)

எடுத்துமேசம னெழிலாயிடித்துமே
தொடுத்துமேசலங் தொடர்ந்தபடிநாலு
கடுத்துதீயில் கடுகளறக்கியே
அடுத்துவாறுநா ளன்பாகவுண்டிடே (118)

உண்டபோது முறுதியாமேகம்போம்
திண்டுமேவாதக் தீராப்பிணியறும்
கண்டுபத்தியங் கத்திரிக்காயுண்ணு
பண்டுவாயு பறந்தோடிப்போகுமே (119)

சகலகிரந்தி சிகிட்சாசார எண்ணெய்

ஏகுங்கிரந்தி எழிலாம்பரங்கிக்கு
பாகும்பூசினி பாக்காம்படிச்சாறு

அரும்கற்றாழை யானகுமுழிவேர்
நீரும்கையான் சாற்கோரகத்தூக்கிடே (120)

தூக்கும்வல்லாரை துடியானவில்வமும்
தாக்கும்வீழியின் தாங்குமாதொண்டையும்
காக்கும்கொடுப்பை கடியநீர்ப்பூலாவும்
பாக்கும்பாச்சாணை பாங்காய்கிறுத்திடே (121)

கிறுத்தியேதென்னை சேர்ந்தபொரிபாளை
கறுத்திடும்பானை கடியநெருஞ்சியும்
தருத்திடுந்தக்காளி யிலைச்சாற்நாழி
மறுத்திடுமறுகன் வேருமாட்டிடே (122)

மாட்டிச்சாறு மதிப்பாய்ப்பிழிந்துமே
கூட்டும்பாண்டங் குலாவிகலக்கியே
நீட்டித்தீயினில் சேரவெறித்துமே
சூட்டிக்கியாழும் சுருக்காயெறக்கிடே (123)

எறக்கியாமணக் கெண்ணெயிருநாழி
உறக்கிக்காடி யுகந்தபசும்பாலும்
சிறக்கச்சாறு சிறந்தயிளநீரும்
கறக்கவேருங் கணக்காயெடுத்திடே (124)

எடுத்திடப்பா யெழிலாகிலப்பனை
அடுத்திடுமாசுவ கெந்தியார்பலம்
கடுத்திடுங்கரு வானசீரர்பலம்
முடுத்திடுகிலக் குமிழிவேர்சேர்த்திடே (125)

சேர்த்துதுத்தியின் சிறந்தசித்திரமூலம்
பார்த்துப்பூமி பகருஞ்சர்க்கரையும்
நீர்த்துசாதி நெருங்குபத்திரியும்
கோர்த்துமதாங் குறிப்பாய்கிறுத்திடே (126)

கிறுத்துமாஞ்சில் கெடியலவங்கமும்
பொறித்துமேலம் பொருந்தியசோம்புடன்

திறத்தூந்திரிவலை திரிகடுவெந்தயம்
கறுத்தசீரமுங் கஸ்தூரிகூட்டிடே 127

கூட்டும்வாலு குலவுங்கசகசா
நீட்டுமிளகு நேர்ந்தகடுக்காயும்
தீட்டுதாளிசந் தேர்ந்தகார்போகமும்
காட்டுச்சீரங் கடுசீனிதூக்கியே 128

தூக்குமேழுத்தக் காசுதுடிபலம்
தாக்குங்கோரைத் தனிலவங்கப்பட்டை
பாக்குமேபசும் பாலிருநாழியாய்
போக்கிலாமற் பொதிந்தடுப்பேற்றியே 129

ஏற்றிமெழுகு வெண்ணெய்பதத்தினில்
காற்றிலாமல் கடுந்தீயில்தாணெறி,
போற்றிவீசனை பொருந்தவேதாள்பணி
ஆற்றிநாண்டி யன்பாகக்கொண்டிடே 130

கொண்டபோதுமே கூறியபத்தியம்
கண்டபதார்த்தங் காரிழையாகுங்காண்
அண்டகுலைக ளறையுந்தடிப்புண்கள்
துண்டமேகந் துடித்தோடிப்போகுமே 131

போகுங்கிரந்தி பொருந்தும்புள்ளிமேகம்
ஏகுஞ்சிறங்கு வெழிலாத்தடிப்புகள்
நீகுப்வாய்ப்புண் நெருங்கியரோகமும்
போகும்புண்புரை பொருந்தாமலோடுமே 132

ஓடுமேக முறுதிபிணிநீங்க
நாடுமாமணக் கெண்ணெயிருநாழி
நீடுமிளநீர் சேர்ந்தபசும்பாலும்
கூடும்பொன்னாங் குமரிச்சாற்சேர்த்திடே 13

சேர்த்துவாதொண்டை சிறந்தவில்வயிலை
கார்த்துவறுகன் கள்ளிபுடைப்பட்டை
நீர்த்துப்பூண்டுடன் நெருங்கும்பெருங்காயம்
பார்த்துசமனெடைப் பாங்காகத்தூக்கிடே 134

தூகஞ்சீரந் துடியானவெந்தயம்
தாக்குங்கிராம்பு தனியானயேலமும்
காக்குஞ்சாதிக்காய் கடியகொத்தமல்லி
பூர்க்கும்நாகப்பூ பொருந்துஞ்சீனமெடே 135

எடுத்துக்கல்வ மெழிலாப்பொடித்துமே
அடுத்துச்சீனி யறுபலஞ்சேர்த்துமே
தொடுத்துப்பாகமாய் துவளவிறக்கியே
முடுத்துக்கணேசனே முன்னின்றுபோற்றிடே 136

போற்றுமண்டலம் பொருந்துமெண்ணெயுண்ணு
தோற்றுமேகந் தொடராதொருநாளும்
காற்றுமேமதான் கல்போலிருக்கிடும்
தூற்றும்வாய்ப்புண்ணு தூரியேயோடுமே 137

எலிவிஷத்துக்கு சிகிட்சை.

ஓடுமேபதி னெட்டுகலிகடி
காடுமேகரும் பூனைமலத்தைதான்
நீடுங்கழஞ்சி நேர்ந்தவளவதாய்
கூடுங்கருப்பன் கட்டி யிலுண்டிடே 138

உண்டபோது முறுதியாம்பத்தியம்
கண்டவாறுநாள் சடிபவுப்புமாகா
கொண்டவேழாநாள் கூறுந்தலைமுழு
விண்டபத்தியம் விட்டுலருந்திடே 139

காய்நரிகடிக்கு மருந்து.

அருந்தும்போது வலறிவிஷமோடும்
திருந்தும்நாய்நரி தீராவிஷங்கட்கு

பொருந்துமருந்து பூட்டுரேன்மாந்தற்கு
குருந்தக்காள கூறுமருந்தெடே. 140

எடுத்துமூன்றுநா ளெழிலாயருந்திட
கடுத்துமேவருங் கடியவிஷங்களும்
அடுத்துமேவுட லவனிவிட்டோடிடும்
தொடுத்துபத்தியந் தோன்றமுப்பாகாதே 141

ஆகாதாறுநா ளன்புடன்பத்தியம்
சாகாத்தயிலஞ் சுடுநீரில்தான்முழு
போகாவிஷமும் பொருந்தாமலேர்டிடும்
வாகாத்தேரையன் வலுவாயுரைத்ததே 142

பூனைகடிக்கு சஞ்சீவி மூலிகை.

உரைத்துமேபூனை யுற்றவிஷம்நீங்க
கரைத்துஎட்டியின் காயின்பழத்தையும்
பரைத்துமேபசும் பாலிலரைத்துமே
திரைத்துமூன்றுநாள் தீரமாய்குடித்திடே 143

வண்டுகடிக்கு மருந்து.

குடித்தபோதுமே கூறும்விஷமறும்
கடித்தவண்டு கடிக்குமருந்துகேள்
நடித்தவெள்ளாட்டு நாழிபால்தானெடு
வடித்தமோரினில் வாகாய்கொடுத்திடே 144

கொடுத்தபோதுமே கூறும்விஷமறும்
கடுத்தவண்டு கடிவிஷந்தானறும்
தொடுத்தசில்விஷம் தோன்றுதொருநாளும
வடுத்ததேரையன் வாக்குபொய்யாதிதே 145

இதுவுமது

பொய்யாதையா புங்கனுகுருமொழி
அய்யாமருந் தனைமேலெனுமுறை

மெய்யாய்ரசத்தின் மேவும்பதங்நத்தை
துய்யாமூன்றுநாள் துடியாய்வருந்திடே 146

பூரான் செய்யான் கடிக்கு.

அருந்துபத்திய மாகாபுளிபுகை
பொருந்துமேபூரான் புகலுஞ்செய்யானுக்கு
குருந்துமெருக்கன் கொடியவசம்புடன்
வருந்தராய்மலம் வாகாகப்பூட்டிடே 147

பூட்டியொன்றுய்ப் புகலுக்கலுவத்தில்
மாட்டிரேகித்து மாத்திரைசெய்திடு
தீட்டியாறுநாள் தீரமாயுண்டிடு
வாட்டிபூரான் வலிவிஷம்நீங்குமே 148

பெருச்சாளிகடிக்கு

நீங்குமேபெருச் சாளிவிஷங்கட்கு
தாங்குங்கொல்லன் தனிப்பட்டைதானிடி
பாங்கும்வெண்ணெயில் பாக்களவுண்டிட
வாங்குமேவிஷம் வலிபறந்தோடுமே 149

பெருச்சாளிகடிக்கு ஆக்கிராணப்புகை.

ஓடும்நாசியி லுற்றவாக்கிராணஞ்செய்
தேடுமயிற்பீலி தெளியப்புகைபிடி
காடுறையுங் கடிவிஷத்தன்வலி
வீடுவிட்டு வெளிப்புறமேகுமே 150

தேள்விஷந்தீர சஞ்சீவி மூலிகை.

ஏகுந்தேள்விஷ மெழிலுடன் தீர்வதற்
காக்கும்பெரிய கருநங்கைவேரை
பாகுந்நீரினில் பாக்காயுரைத்துமே
ஆகுமட்டிப்பா லன்பாய்ப்புகைகொடே 151

கொடுத்திடவிஷங் குடியேகிப்போய்விடும்
தடுத்துரசியர் தாக்குகலிக்கமும்
அடுத்துமூன்றுநா ளன்பாகத்தான்கொடு
கடுத்தவிஷங்கள் கழன்றோடிப்போகுமே 152

போகும்பத்தியம் பொன்னாங்கண்ணிக்கீரை
ஆகுமுருங்கை யானபருப்புநெய்
ஊகும்வெள்ளாட்டிறச்சி யுப்புக்கண்டம்
பாகும்வெல்லமும் பாங்காகத்தள்ளிடே 153

## சிறுபாம்புகடிக்கு மருந்து.

தள்ளுமேசிறு பாம்புகடிகட்கு
விள்ளுங்குறிஞ்சு வேரின்சமூலமாம்
கொள்ளும்வெந்நீர் குலாவியரைத்துமே
அள்ளுமூன்றுநா ளந்திசந்திபுண்ணே 154

உண்ணும்போதிடி லூதுகடிபாம்பு
வெண்ணுமேயுடல் விட்டுமேநீங்கிடும்
உண்ணும்பத்திய முற்றபுளியாகா
எண்ணுதேரைய னெழிலாயுரைத்தே 155

## குஷ்டம் 18-க்கும் மருந்து.

உரைத்தக்குஷ்ட முடலைவிட்டேகுதற்
கரைத்தமருந்து கருதியுரைப்பேன்யான்
தரைத்தவலரித் தயிலமிறக்கியே
பரைத்தப்பாணியில் பாங்காயருந்திடே 156

அருந்திடப்பா வறுபதுநாள்முறை
பொருந்துப்பத்தியம் போற்றிப்புளியாகா
திருந்தமுழுகித் தீரப்புளியுண்ணு
வருந்துங்குஷ்டம் வரைந்தோடிப்போகுமே 157

மருந்திட்டுக்கு சிட்சை.

போகுமாந்தர் பொருந்துமருந்திடு
ஆகுந்தேங் காய்ப்பா லன்னமுடனுண்ண
வேகுமருந்து வேகமுடனேவிட்
டேகுமென்று தெளிந்தனர்சித்தரே 158

இதுவுமது.

சித்தர்சொல்மொழி திசையிலும்பொய்யாது
ஒத்தமுருங்கை யோங்கியேசார்பிழி
கத்தசர்க்கரைக் கலந்துகுடித்திடில்
வைத்தமருந்து வூகாய்முறியுமே 159

கெற்பநாசன மருந்து.

முறியுங்கெற்ப முறிகெட்டுவேபுதற்
கறியுநீலிவேர் காடியில்தானரை
அறியுங்கெற்பம் மழிந்துமுடனேவிட்
டெறியும்பார்தனில் சேரவிழுகுமே 160

விழுந்தபோது விலாநரம்புநோம்
அழுந்தபூமியி லாறிவளர்த்திடும்
கொழுந்துபூநீரைக் குலாவிஎடுத்துமே
முழுந்துநீரினில் மூன்றுநாளுண்டிடே 161

உண்டபோது முறுதிபத்தியங்கேள்
கண்டுமேபொரிக் கருப்புக்கட்டியுடன்
அண்டக்காய்த் தளவாகவேயுண்டிடில்
திண்டுகெற்பநோய் தெறித்துதானோடுமே 162

விதவையைக்கூட பிள்ளையில்லாதிருக்க.

ஓடுமங்கை யுறுதியாய்சேர்வதற்
காடுமேதலைக் கன்னிமுழுதையில்
கூடுமேபுணர்ந்தார் குழவனிக்லை
நீடுமேவிதம் நினைவாயறிந்திடே 163

## மூலரோகத்திற்குச் சூரணம்.

அறிந்துமூல மலறியேயோடதற்
கறிந்துதூதுவளை கரிசமூலமும்
தெறிந்துமெருகன் தேர்ந்தகருணையும்
குறிந்துவறுகன் கூடப்பலனெடே 164

எடுத்துநீர்ப்பூண் டெழிலாங்கிழங்கையும்
விடுத்துவுரலிலொன் றுய்ப்பொடிசெய்து
கொடுத்துதேனிலே குன்றியளவுண்ண
கடுத்துமூலங் கதறியேஎக்குமே 165

## அரையாப்பு கிரந்திக்கு எண்ணெய்.

எங்குமெண்ணெ யெழிலாமரையாப்புக்
காங்குசங்கோடக் கருநொச்சிவீழியும்
பாங்குகுப்பி பகருஞ்சிறுசின்னி
பூங்குபூவரசன் பட்டைசேர்த்திடே 166

சேர்த்திடுமே சிறந்தகிரந்தியும்
கோர்த்துபூண்டு குறிப்பாயெடுத்திடு
பார்த்துமாமணக் கெண்ணெய்படி நாழி
தீர்த்துஎண்ணெய் திறமாயளந்திடே 167

அளந்துதீயினி லன்பாயெரித்துமே
வளந்துமெழுகு வாகாய்ப்பதமுடன்
தளந்துவீசனை தாளடிதான்பணி
களந்துமண்டலங் கால்மண்டலங்கொள்ளே 168

கொள்ளுப்போது கொடிதானசூலைபோம்
துள்ளுரோகந் துடிப்புடனேகுங்காண்
புள்ளுமேகண்ட மாலையிணிநீக்கும்
தெள்ளுமாமுனி தெளியவுரைத்ததே 169

## ஸ்ரீவசியம்.

உரைத்தமங்கைய ருறவுபிரியாமல்
கரைத்தமருந்து காரிழைசொல்லுவேன்
விரைத்தபேசுழல் மேவுமனோசிலை
திரைத்தரோசனை தீரப்பலமெடே 170

எடுத்துப்பட்டு மெழிலானபூச்சியை
அடுத்துநாக மழகாம்புனுகுடன்
தொடுத்துமேகருங் கோழியின்பிச்சுடன்
விடுத்துநீரினில் விட்டுஅரைத்திடே 171

## அனுபானம்.

அரைத்துக்குன்றிபோ லானமாத்திரையை
திரைத்தவெள்ளிலை தேர்ந்தசுன்னத்திலும்
உரைத்தபாலும் பழம்பலவஸ்திலும்
நிரைத்தப்பாமல் நெறியுடன்தான்கொடே 172

கொடுத்தபோது குமரிப்பெண்கன்னியும்
அடுத்தமூன்றுநா ளன்புடனேகுவாள்
படுத்தபடுக்கை பாவைபிரிபாள்காண்
முடுத்தப்பாமல் முறைப்படிசெய்திடே 173

## பீனசயத்திற்கு மருந்து.

செய்யுமீனை சயகாசரோகத்திற்
குய்யுமருந்து குறிப்பாயுரைக்கிறேன்
கையும்பாகற் பட்டையெடுத்துமே
துய்யப்பாலினில் துவளசுத்திசெய்யே 174

செய்துபட்டை சிறப்பாயொருபலம்
கொய்துமேனிக் குறிப்பாயிருபலம்
தொய்துநாகப்பூ தோன்றவறுபலம்
உய்துகோஷ்டமு முற்றப்பலமெடே 175

எடுத்துமதுர மெழிலான்லவங்கமும்
அடுத்துபத்திரி யானகிராம்புடன்
தொடுத்துசாதிக்காய் துய்யபலமெடு
தடுத்திடாமலே தான்றியுஞ்சேர்த்திடே 176

சேர்த்திடப்பா சிறந்தபற்பாடகம்
கோர்த்துரோசனை குலாவுவிளாம்பிசின்
வார்த்துவோமம் வசம்புடன்வெள்ளுள்ளி
பார்த்துப்பதமாய் பாங்காயிடித்திடே 177

இடித்துச்சூரண மெழிலாயெடுத்துமே
வடித்துசக்கரை வாகாய்கலந்துமே
மடித்துமண்டல மதிப்பாயருந்திடே
துடித்துக்காசந் துடித்தோடிப்போகுமே 178

சூலை பதினெட்டுக்கு மருந்து.

போகுஞ்சூலை பொருந்தும்பதினெட்டுக்
காகுஞ்சங்கனின் கருதியவேரெடுத்
தாக்குங்காடியில் தனிபவரைத்துமே
வாகுமண்டலம் வருந்தியேயுண்டிடே 179

உண்டபோது வுறையும்பத்தியங்கேள்
அண்டவாயு வபானனிறுகலும்
கெண்டைவாதங் கெடியானசூலையும்
ஓண்டிடாம லுடலைவிட்டோடுமே 180

கற்ப எண்ணெய்.

ஓடுங்கற்ப முறையுமுறுதிகேள்
நாடுவ்வீழியி னத்தையிலைச்சூரி
காடுந்தைவேளை கருதுகிலவாகை
பாடும்பிரமி பாங்காங்கிரந்தையே 181

இரந்தைநாரி கெடியானபாலுடன்
காந்தைபுன்னைக் கஸ்தூரிமருந்துடன்
நிரந்தைவெள்ளுள்ளி நேர்ந்தவசம்புசேர்
மரந்தகடுகு மாசக்காய்தூக்கிடே 182

தூக்குஞ்சுக்குத் துடியாமொருபலம்
தாக்குந்திரிபலை தாளிசமறுபலம்
பூர்க்குக்காரம் புடமிட்டிருபலம்
கார்க்குமெடையை கடுகளடுத்திடே 183

எடுத்திடப்பா யெழிலாமணக்கெண்ணெய்
கொடுத்துளண்ணெயில் குறிப்பாய்க்கலக்கியே
அடுத்துவீசனை யன்பாகப்போற்றியே
கெடுத்திடாமல் கிளறிஎறக்கிடே 184

எறக்கிமாதவிடை காலந்தன்னிலே
முறைப்படிநிறை மூன்றுநாள்கொண்டிட
திறக்கமாகவே தெளிந்திடுங்கற்பமும்
சிறக்கவேழாநாள் தெரிந்துதலைவாரே 185

துவளை.

வார்த்துதுவளை வாகாகப்பூசிட
கோர்த்துக்கஸ்தூரி கூறியமஞ்சளை
பார்த்துமேசலம் பதமாயரைத்துமே
தீர்த்துமேனியில் திறமாகப்பூசிடே 186

புகை.

பூசியேபுகை பொருந்தவேதான்பிடி
ஆசியேசலமப்பா சிரசில்வார்
கூசிடாமல் குறித்திடுமகிற்புகை
மாசிடாமல் மதிப்பாகக்காட்டிடே 187

இருமலுக்கு லேகியம்.

காட்டுலேகியங் கடியவிருமலுக்
கூட்டுஞ்சாறு குறிப்பாங்காணிச்சாறு

நீட்டுஞ்சங்கஞ்சாற் நேர்ந்தநறுநெய்யும்
பூட்டுந்தேனுடன் புதுகலசஞ்சேரே 188

சேருசுக்குச் சிறக்கவறுபலம்
தேருவசம்பு திறமாயிருபலம்
கூருதிப்பிலி குறித்திடுமுப்பலம்
நீருமிளகு நோய்ப்பலமெடே 189

எடுத்திடுபல மெழிலாய்கடுக்காயும்
தொடுத்திடும்பொரி தோன்றுசித்தரத்தை
முடுத்திடும்படி முற்றிலுக்குளதாய்
வடுத்திடுநெய்யில் வாகாகக்கிண்டிடே 190

கிண்டமெழுகு கெடியாம்பதமுடன்
அண்டிநெல்லி யளவுப்பிரமாணம்
கண்டுமண்டலங் கணக்காயருந்திடில்
மிண்டுயிருமல் மிரண்டோடிப்போகுமே 191

போகும்பத்தியம் பொன்னுங்கண்ணியாகும்
ஆகுங்குத்திரி யானவமுதலை
வாகுபச்சைப் பயறுவல்லாரையும்
பாகுவெல்லமும் பச்சடிதள்ளிடே 192

## சூலைவாயு மேகத்திற்குத் தயிலம்.

தள்ளுசூலை தயிலமுரைக்கிறேன்
விள்ளுமேகொடி வேலிப்பருத்தியும்
எள்ளுமாலின்ற னிசைந்தசங்கம்வேரும்
கொள்ளுக்காவேளை கொடிடகாயகஞ்சேரே 193

சேர்த்துநாழிநீர் சிறக்கவேயெட்டொன்றாய்
பார்த்துக்குறுக்கிப் பதமாயிறக்கியே
நேத்துஎள்ளெண்ணெய் நோய்க்கலக்கியே
ஆர்த்துச்சரக்கு அளவாயெடுத்திடே 194

எடுத்துமிளகு வெழிலாயொருபலம்
தொடுத்தச்சீரக் துடியாமிருபலல்
வடுத்துவாலு மிளகுவறுபலம்
கொடுத்துக்கோஷ்டங் குறிப்பாகத்தூக்கிடே 195

தூக்கிச்சூரணம் துவளப்பொடித்துமே
தாக்கியெண்ணெயில் தயவாய்க்கலந்துமே
போக்கிலாமல் பொருந்தவிடித்துமே
நீக்குமண்டலம் நினைவாய்முழுகிடே 196

முழுகும்போது முறியுஞ்சூலைநோவு
அழுகுங்கிரந்தி வாராச்சிலந்திபோம்
ஒழுகும்வெள்ளை யுறையுமரையாப்பு
தழுகுமுடலை காடாதுவோடுமே 197

சகல பிரமியத்திற்கு எண்ணெய்.

ஓடுமேக முடலைவிட்டேகுதற்
காடுந்தேங்காய்க் கருதியபாலுடன்
நீடும்பொடுதலை சேர்ந்தநாயகமும்
கூடும்பிரமிக் குறிப்பாயளந்திடே 198

அளந்துமாமணக் கெண்ணெயறுபலம்
வளந்துவாவின்பால் வாகாயெழுபலம்
குளந்துயெண்ணெயில் கூராய்க்கலக்கியே
பளந்துமண்டலம் பாங்காயருந்திடே 199

அருந்தும்போது வலறியேமேகம்போம்
திருந்தூரத்தமும் திகைத்துமேயோடிடும்
உருந்தும்வாயுவு வுடலைவிட்டேகிடும்
பொருந்துமாமுனி புகழ்ந்துவுரைத்ததே 200

### சட்சித சுகபேதி சூரணம்.

உரைக்கும்பேதி யுறுதியாய்ப்பூட்டுவேன்
கரைக்குஞ்சிவதை கடியபசுப்பாலில்
வரைக்குஞ்சீரமும் வாகாகக்காய்ச்சியே
குரைக்கும்வெயிலினில் குறிப்பாயுலர்த்திடே 201

உலர்த்திச்சீனி யுயர்ந்தசர்க்கரையும்
நிலர்த்தியேலமும் கோய்க்கலந்துமே
குலத்துகாலையில் குணமாயருந்திடில்
பெலர்த்தசீதம் பிரண்டோடிப்போகுமே 202

### சகல விற்பிருதிக்கு சுகட்சித மருந்து.

போகும்பிருதி பொருமல்வந்தோர்கட்கு
ஏகுஞ்சல்லி யெழிலானவேறுடன்
பாகும்பற்படம் பாங்காயெடுத்துமே
ஆகுஞ்சூரண மன்பாகவுண்டிடே 203

உண்டுபத்திய முற்றபுளியாகா
கண்டுவென்னீர் கலந்தன்னமுண்டிடு
திண்டுபுருதி தெறித்துமேயோடிடும்
கொண்டுதேரையன் குறிப்பாயுரைத்ததே 204

உரைக்குமார்த ருறையுமருந்திடு
கரைக்குங்கரிப்பான் கரிசாலைதானெடு
திரைக்குமெலுமிச்சம் சேரப்பழமெடு
அரைக்குமயச்சட்டி அன்பாகவிண்டிடே 205

இண்டிமூன்று கெடியாமிருவேளை
அண்டிமாலை யதிகாலைதன்னிலே
கொண்டுமண்டலங் குலாவியருந்திடில்
இண்டிமருந்து இசைத்தோடிப்போகுமே 206

போகும்பத்தியம் பொருந்தும்பருப்புடன்
ஏகுங்கஞ்சி யிருவேளை தானுண்ணு
ஆகுமிஞ்சி யரியதுவயல்கள்
பாகுவெல்லமும் பற்றுதலாகாதே 207

இலிங்கக்கட்டு.

ஆகாதையா வவனியில்மாந்தற்கு
சாகாலிங்கஞ் சடுதியில்பூட்டுறேன்
வேகாத்தங்கம் விரும்பியேசுத்தியே
வாகாக்காரம் வகையுடன்பூட்டிடே 208

பூட்டிசேரன் பொருந்தவிடித்துமே
மாட்டியாவிநெய் மறையப்பொதிந்துமே
வாட்டித்தீயினில் வாகாயெறித்துமே
மூட்டுக்கலைத்து முனையாயெடுத்திடே 209

எடுத்திடலிங்க மெழிலாயிறுகியே
கொடுத்திடநோய் குடியேகிப்போய்விடும்
அடுத்துமூன்றுநா ளாற்வேளையுண்டிடு
தொடுத்தபத்தியத் தோன்றுமுப்பாகாதே 210

சூலைக்கு கியாழம்.

தோன்றுசூலை தொடுத்திடும்வாய்வுக்கு
கான்றுசங்கன் கரியசிவன்வேம்பு
ஆன்றுகெந்தி யழகியவீரமும்
தீன்றில்லாவெள் ளறுகுமெடுத்திடே 211

எடுத்துமேசம னெழிலாயிருபலம்
அடுத்துமிளகு வழகியசுக்குடன்
தொடுத்துசீரந் துடியாமறுபலம்
வடுத்தகோஷ்ட்டம் வலுவாயிடித்திடே 212

இடித்தசல்லி யெழையபொடித்துமே
பொடித்துகியாழம் பொருந்தகலக்கியே

அடுத்துதீப மழகாயிறங்கியே
முடித்துமண்டல முறைப்படியுண்டிடே 213

உண்டபோது வுதரியசூலேபோம்
கண்டமாலை கதரியேயோடிடும்
அண்டவர்புவு மடானனிறுகலும்
உண்டிடாம லுதறியேயோடுமே 214

கிரந்தி அரையாப்புத் தடிப்புக்கு.

ஓடுங்கிரந்தி யுற்றதடிப்புக்கு
நாடுங்கள்ளி நவிலுந்துளிர்பலம்
கூடுமிளகு கொடியவசம்புடன்
தேடுஞ்சுக்கு தெளிவாயரைத்துண்ணே 215

உண்ணும்போது வுறையுங்கிறந்திபோம்
கண்ணுந்தடிப்பு நாடாதொருநாளும்
பண்ணுமருந்து பண்பாயருந்திடில்
எண்ணுமேனி திளேக்காதிறுகுமே 216

காதடைப்புக்குத் தயிலம்.

இறுகுங்காதி லெழிலாமடைப்புக்கு
உறுகுமிளகா யுற்றபலமெடு
மறுகும்பாண்ட மதிப்பாயிடித்ததில்
குறுகும்நாழிநீர் குறிப்பாகக்காய்ச்சிடே 217

காய்ச்சியெண்ணெய் கருதுமொருபலம்
ஆச்சுமிளகு, யன்பாய்ப்பலமெடு
மூச்சிடாமல் முடுகியேகுத்திடில்
போச்சுமேசெவி புகலுந்தயிலமே 218

தயிலந்தன்னில் தரியாதிமிர்வாதம்
தயிலேசூலை கழற்சூலைவாயும்

வயிலேமேகமும் வாங்காச்சூலைகளும்
ஓயிலேமேல்வலி பொழிந்தோடிப்போகுமே 219

போகுமாந்தர் பொருமல்வயிற்வலி
ஆகுஞ்சுக்கு வரைப்பலந்தானெடு
மேகுமரசு வெள்ளிலைதான்பொதி
பாருமோரினிற் பாங்காயெறித்திடே 220

எரித்தசத்த மெழிலாமிதுமுறை
தரித்துமேதயிர் தன்னிலருந்திட
வரித்திரைச்சல் வலிகடுப்புமுதல்
தெரித்துப்போமெனச் செப்பினர்தேறனே 221

தேறன்சொன்மொழி திசையிலும்பொய்யாது
கூறவாமணக் கெண்ணெயொருபலம்
திரக்காசுமே கட்டிசமனெடை
சேரவாவின்பால் சிறக்கவரைத்திடே 222

அரைத்துத்துவரை யன்பாயுருட்டியே
கரைத்துவென்னீரிற் காலையில்தானுண்ண
வரைத்தபேதி வருகுமேமாந்தற்த
முறைதப்பாமல் மொழிந்தனர்சித்தரே 223

தலைவலிசன்னிக்கு நசியாக்கிராணபுகை.

சித்தர்வாக்கு திசையிலும்பொய்யாது
கத்தசன்னி யுறுதிதலைவலிக்
ஓத்தவோமம் கரியபெருங்காயம்
சுத்தசுக்குடன் துய்யமிளகெடே 224

எடுத்துசார பெழிலானசாம்பிராணி
அடுத்துசீர மழகியலிங்கமும்
கடுத்துமேகழல் கடியவரத்தையும்
தொடுத்துசாரமுந் தோன்றவரைத்திடே 225

அரைத்துபெருக்கன் பாலினிலூட்டிடு
திரைத்துசிலையில் நீர்த்திதிரித்துமே
உரைத்தவாக்கிராண முருதியாய்த்தான்பிடி
பரைத்தசன்னிப் பறந்தோடிப்போகுமே 226

கற்பூராதிக்குளிகை.

போகுங்கற்பூரக் குளிகைபுகலுவேன்
ஏகுஞ்சாதிக்கா யெழிலானபத்திரி
ஆகுந்தக்கோல மானலவங்கமும்
பாகுமிளகு பாங்காகத்தூக்கிடே 227

தூக்கும்வாலு மிளகுதுடிபலம்
தாக்குங்கோஷ்டந் தனியானகஸ்தூரி
பூர்க்குஞ்சந்தனம் புகலும்பச்சைபூரம்
ஆர்க்குங்குங்கும மடவாய்விராவனே 228

எடுத்துமேயிள நீரிலரைத்துமே
குடுத்துக்குன்றி மணிபோலுருட்டியே
தடுத்துத்தாம்பூலந் தன்னிலருந்திடில்
கடுத்துப்பல்நோய் கடந்தோடியேகுமே 229

ஏக்குங்காந்தி யெழிலாம்வசியமாம்
தூக்குமந்தந் தொடர்ந்தசன்னிமேகம்
பாங்குசூலை பதின்மூன்றுசன்னியும்
நீங்குமேனி யுடலைவிட்டோடுமே 230

இதுவுமது.

சதுர்முகச் சூரணம்.

ஓடும்வேலி யுயர்ந்தகிலப்பனை
நீடுஞ்சேங்கொட்டை நிகழுந்தசமதாய்
காடுந்தண்ணீர் கிழங்குசமனெடை
சாடுஞ்சீனி சரியாகச்சேர்த்திடே 231

சேர்த்துச்சூரணஞ் சிராய்கலந்துமே
பார்த்துத்தனிற்பத மாகறுசெய்யிற்
கார்த்துமண்டலம் நன்றுயருந்திடு
கார்த்துபத்தியங் கருதுபசும்பாலே 232

பாலுமன்னம் பகர்ந்துவருந்திடில்
சூலைகுஷ்டஞ் சொறிவிஷமேகங்கள்
காலுங்குன்மங் கருதியவாயுவும்
ஏலும்பாண்டு மிறந்தோடிப்போகுமே 233

பல்லுப்பொடி.

போகுந்தந்த வியாதிக்கொருமுறை
ஆகுஞ்சின மரக்குடன்துத்தமும்
தாகுந்தான்றி தனிக்கடுக்காயுடன்
வாகுமாசிக்காய் வாகாய்விராவெடே 234

எடுத்துகும்ப மெழிலாயரைத்துமே
கடுத்துமண்டலங் கருதியேதேய்த்திட
அடுத்ததந்த மசையும்பல்லுக்குத்து
மூடுத்தப்பாமல் முடுகியேயோடுமே 235

வாயுவிக்கல் சோகைக்கு மருந்து.

ஓடும்வாயு முறையும்விக்கலுக்கு
காடுஞ்சுக்கு நவிலுமிளகுடன்
தேடும்ரோசனை சேர்ந்தகடுக்காயும்
கூடியொன்றாய் குலாவிபிடித்திடே 236

இடித்துச்சூரண மெழிலாய்ப்பனவெல்லம்
அடுத்துவாவின்பா லன்பாகக்காய்ச்சியே
கடுத்ததேனெய்யில் களிப்புடனுண்ட
தொடுத்தவயிர்வலி தொடர்ந்துதானீங்குமே 237

நீங்குஞ்சோகை நிகழும்பொருமலும்
தீங்குவிக்கல் திமிர்கிருமிதோஷம்
பாங்குசூலை பகருமேகசலம்
வீங்குரோகம் வெளிவிட்டேகுமே 238

திரிகடு கெண்ணெய்.

ஏகுமேதிரி யெழிலாங்கடுகெண்ணெய்
பாகுசுக்குப் பகருமொருபலம்
வாகுதிப்பிலி வாகாயிருபலம்
தாகுமிளகுத் தனிப்பலமேயிடே 239

எடுத்துக்காய மெழிலானவெள்ளுள்ளி
கடுத்துவசம்பு கருதுமொருபலம்
தொடுத்துவோமந் துடியாமறுபலம்
அடுத்துச்சாம்பிராணி யாறுபலமிடே 240

எடுத்துமேனிச்சா றெழிலாயழைத்துமே
தொடுத்தக்கடுகு தோன்றும்பதத்தினில்
அடுத்தவிசனை யன்பாகப்போற்றியே
வடுத்துமேபதம் வாகாயிறக்கிடே 241

எறக்கியெண்ணெ யெழிலாகப்பூசிடில்
குறக்குங்கைகால் குடைச்சல்வலிதீரும்
நிறக்குமேவதி நேர்ந்தகாதிரைச்சல்
பறக்குமென்றல்லே பாடினன்தேறனே 242

மகாபஞ்சீகரண செந்தூரம்.

தேறன்கூர்மொழி திசையிலும்பொய்யாது
வேறசெந்தூரம் விரும்பியுரைக்கிறேன்
கூறதங்கம் குறிப்பாயொருபலம
தீறவங்கந் திறமாயெடுத்திட்டே 243

எடுத்திடொவி யெழிலாயொருபலம்
தொடுத்திடுமேதி தோன்றவளாப்பலம்

அடுத்திடுநாக மன்பாயிருபலம்
கடுத்திடுந்தாரங் கடியப்பலர்தூக்கே 244

தூக்குகெந்தந் துடியாம்விராகனுற்
தாக்குபொற்றலைச் சாற்றலரைத்துமே
நீக்குகுப்பியில் கெழுப்பொடித்துமே
போக்கிலாமல் பொங்கவெரித்திடே 245

எரித்துஞ்செந்தூர மெழிலானதேனிலீ
கரிந்தமேனி கரியநிறமாறும்
முரித்தாத்த முறித்துசிவந்துமே
தரித்ததங்கம்போல் தானிறமாகுமே 246

ஆகும்வெள்ளியி லன்பாகயீந்திட
ஏகுமாற்றுற எழிலானவாணிக்கு
பாகுதங்கம் பகர்ந்துசரியெடை
வாகுசிவனம் வாகச்செய்திடே 247

காமாலை சோகைக்கு லேகியம்,

செய்துசோகை சிறந்தகாமாலைக்கு
எய்துஞ்சுக்கு மெழிலாமிளகுடன்
கைதுசீரம் நவிலுஞ்சாதிக்காயும்
கொய்துதிப்பிலி கூடக்கிராம்பெடே 248

எடுத்துச்சோம்பு மெழிலானவஞ்சியும்
கடுத்தரோகணி கடுக்காயரத்தையும்
அடுத்ததேங்கு அரத்தைசமனெடை
தொடுத்துச்சூரணந் துவளப்பொடியாக்கே 249

ஆக்கிச்செம்மறி யானபசும்பாலும்
தாக்கிநெய்யில் தனியாங்கருப்பஞ்சாற்
போக்கிலாமல் பொருந்தும்பனவெல்லம்
வாக்குப்பொய்யாமல் வாகாக்கிளரிடே 250

இளறிமலகம் கெடியாமளவுண்ண
அளறும்சோகை யறுவகைபாண்டுவும்
முளறுமந்தம் முனையானகுன்மமும்
தளர்வில்லாமலே தரணிவிட்டோடுமே 251

ஓடும்பத்திய முறையுமுருங்கையும்
நாடும்வெள்ளாடு நவிலுமிறைச்சியுண்
தேடுமேபசுந் துய்யநறுநெய்யும்
தோடில்லாமல் தொகுப்பாயருந்திடே 252

மகா பஞ்சீகரண மாத்திரை.

அருந்துமாத்திரை வரியபஞ்சீகாணம்
பொருந்தும்வீரமும் போற்றுங்கெவுரியும்
இருந்தும்லிங்கமும் சேரவெள்ளையுடன்
குருந்துப்பூரமும் குறிப்பாய்சமனெடே 253

எடுத்துமேதிரி யெழிலானசூரணம்
படுத்துதேனிலே பணவிடையுண்டிட
அடுத்தவாயுவு வறுபத்துநாற்சுரம்
கடுத்தகுன்மங் கதறியேயோடுமே 254

ஓடுமூர்ச்சை யுதரும்பிரமையும்
நீடுரோகமும் நேரும்விஷபாகம்
கோடுவேப்பங் கொடியதொண்டைக்கம்மல்
வாடுசன்னி வலிபறந்தேகுமே 255

ஏதும்பத்திய மெழிலானகாடையும்
பாகுமுயலுடன் பச்சைசுராவுமாம்
வாகும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
ஆகுநெய்யுட னன்பாகவுண்டிடே 256

பஞ்சமுகச் செந்தூரம்,

உண்டிடும்பஞ்ச முறைமைசெந்தூரம்பார்
கண்டிடுஞ்சாதி கடியரசங்கெந்தி

அண்டிடும்வீர மரியதாரமுடன்
கொண்டுமேசமன் குறிப்பாய்நிறுத்திடே 257

நிறுத்துக்காட்டா மணக்கின்பாலாட்டியே
மறுத்துப்பில்லையாய் வாகாகத்தட்டியே
குறுத்துரவியில் குறிப்பாயுலரவை
வறுத்துமேகோழி வாகாய்ப்புடம்போடே 258

போட்டுசெந்தூரம் பொற்பணமாமிடை
காட்டுதேனில் நறுநெய்வெண்ணெய்தனில்
கூட்டுவிச்சன் கூறுங்கருப்பக்கட்டி
நீட்டுமண்டலம் நேரவருந்திடே 259

அருந்தும்போது மறையும்வெடிசூலை
குருந்தும்வெள்ளைக் குறித்திடுங்குஷ்டமும்
வருந்துமேகமும் வாகானகுன்மமும்
செரிந்துபோமெனச் செப்பினர்தேறனே 260

பாலரசச் செந்தூரம்.

தேறன்குருமொழி திசைபிலும்பொய்யாது
வேறசெந்தூரம் விரும்பியுரைக்கிறேன்
கூறகெந்திக் குறித்திடுமரப்பலம்
நீறதாரந் திரிபலந்தூக்கிடே 261

தூக்குமோசந் துகளவிருபலம்
தாக்குவம்மியில் தகிக்கப்பொடித்துமே
பாக்குவண்டத்தில் பதியப்பொதிந்துமே
வாக்குதப்பாமல் வாகாய்ப்புடப்போடே 262

போடசெந்தூரம் பொருந்தும்பணவிடை
நீடவெண்ணெயில் நேர்மையாயுண்டிட
கூடரோகங் குஷ்டரோகங்கிரந்தி
ஓடசூலை யொழிந்துதானேடுமே 263

ஓடும்நவ்ட முறையும்லிங்கப்புற்று
தேடுமாலே தெறிக்குமறையாப்பு
நீடுங்காசம் நெகிழும்விற்பிருதி
மூடுஞ்சன்னி முறையமிட்டோங்குமே 264

சகலரணங்கட்கு ரஞ்சிதத்தயிலம்.

எங்குமெர்ச்சி யெழிலாமழிஞ்சிவேர்
நீங்கில்லாத திரிகடுவிழிதியும்
தாங்குபாண்டர் தனிபவிடித்துமே
பாங்குதயிலம் பாங்காயிறக்கிடே 265

இறக்கித்தயில மெழுச்சிவிற்புருதி
கறக்குமாலே கடியவரையாப்புக்
உறக்கு வாழை வுறையுங்குழிவாழை
பறக்குமென்றல்லோ பாடினேன்தேறனே 266

நீரில் எரிச்சல்கண்டால்.

தேறன்வாக்குத் திசையிலும்பொய்யாது
வேறநீரிலா வெகுளுமெரிச்சலுக்
கூறமருந்து குறிக்குங்கட்டுக்கொடி
நீறாசகன்னிப் பிரமாணமெடே 267

எடுத்துமோரில வில்பதர்தன்னுடன்
கடுத்தசீரங் கடியவேலமுடன்
பொடித்தூரண்டு பொருந்தவிராணடை
கடித்தச்சீனிக் கலந்துவருந்திடே 268

அருந்தும்போது வருகும்நீரெறிவு
பொருந்துமேனி புடைத்துமேரோடிடும்
வருந்துஞ்சுறுக்கு வாகானவெள்ளையும்
முருந்தாத்தமு முனைகெட்டுவோடுமே 269

மகா பரங்கிப்பட்டை பதங்கம்.

ஓடும்பரங்கி யுற்றபதங்கமுற்
றுடுஞ்சூரணந் தாக்கிடுமாற்பலம்

நீடுஞ்கையா னிகழும்பொற்றலைச்சாற்
பேடுங்குப்பிச்சாற் போற்றும்பசும்பாலே 270

பாலில்சாறில் பதமாயவித்துமே
நாலில்கெந்தகம் நவிலுமொருபலம்
மூலிலிங்க முனையாமிருபலம்
சோலில்லாமல் சொருசாயவித்தெடே 271

எடுத்துரவியி லெழிலாயுலர்த்தியே
அடுத்துகணேசனை யன்பாகப்போற்றியே
கொடுத்துமண்டலங் குணமாயருந்திடில்
நடுத்தமேகம் நவின்றோடிப்போகுமே 272

தீரும் வியாதி.

போகுங்கறுப்பு பொருந்தும்வெள்ளைசூலை
ஏகும்ரணங்கள் எதிர்க்கும்சிரங்குகள்
வாகுங்குஷ்டம் வரையுஞ்செர்தாவழயும்
நோகுமரணங்கள் நொருங்கியேவோடுமே 273

ஓடும்பத்திய முப்புபுளியாகா
நீடுமண்டலம் நேர்மையாயுண்டிடில்
மூடிவியாதி முறைகெட்டுவோடிடும்
வீடுவிட்டு வெளிப்படும்வேந்தரே 274

மகாவல்லாதி தயிலம்.

வேந்தரேகேளும் விரும்பும்வல்லாதியை
காந்தழிஞ்சிக் கருதுபூங்கொட்டையும்
தீந்தவேம்பின் திகழுமெட்டியுடன்
போந்துபுண்ணாக் கிலைசமன் தூக்கிடே 275

தூக்குமேசிவன் வேம்புஞ்சமனெடை
தாக்குமேசலந் தன்னிலேயூறவை
போக்குதயிலம் பொருந்தயிறக்கியே
வாக்குதப்பாமல் மண்டலம்கொண்டிடே 276

கொண்டபோது கொடிதானசூலையும்
அண்டவாயு வபானனிறுகளும்

ரெண்டைவாத கிரந்திபரையாப்பு
ஒண்டிடாம லுடலைவிட்டோடுமே 277

ஓடுகுன்ம முறையுமிருமலும்
நீடுவாதம் நெருங்கியகாசமும்
கூடுவிக்கல் குறித்திடுரோகமும்
வீடுவிட்டு வெளிப்பட்டுநீங்குமே 278

இடி வல்லாதி.

நீங்குமேயிடி நிகழும்வல்லாதியை
பாங்குசேங்கொட்டை பதியப்பலமெடு
தீங்குமாவின் றிரளுஞ்சாணத்தினில்
வாங்குமூன்றுநாள் வாகாயூறவையே 279

வைத்துமேகல்லில் வாகாயிடித்துமே
நைத்துமெள்ள கவிலப்பொடித்திடு
கத்துக்கொப்பரைக் கருதுந்தேங்காயுடன்
சத்துப்போகாமல் தனியவிடித்தெடே 280

இடுத்துபட்டை யொழிலாமமுக்குரா
கடுத்தமூலக் கஸ்தூரிகருஞ்சீரம்
வடுத்தவாலுழு வாங்குங்குராசானி
எடுத்தவெற்றிலை யேந்துங்கடுக்காயே 281

காயுந்திப்பிலி கடியகோஷ்டமுடன்
தோயுஞ்சரக்குத் துளசமனெடை
காயுஞ்சூரண கங்கலிலூட்டுமே
பாயுமயனம் பாங்காயிடித்திடே 282

இடித்துமேரச செந்திகற்பூரமும்
வடுத்துமேசமன் வாகாயெடுத்திடு
முடித்துவெல்லா முனையாய்க்கலந்திடு
கடித்துமண்டலங் கடியவருந்திடே 283

அருந்தும்போதுமே வாராக்கிரந்தியும்
திருந்துக்குஷ்டமும் தெறிந்திடுசூலியும்
வருந்துமேகம் வரையுமறைபாப்புக்
குருந்துகுன்மமுங் குடியேகிப்போகுமே 284

போகும்பத்தியம் பொருந்துமிறைச்சியும்
ஆகுமோரு மருளைமகறுசெய்யும்
பாகுவல்லாரை பசும்பொன்னாங்கிணியும்
ஏகும்பச்சை யெடுத்துப்பொகித்திடே 285

சகலமேகங்களுக்கு கெந்திரச மெழுகு.

பொசித்தமேகம் பொருந்துபறப்பதற்
கசித்ததாரங் கடுங்காரகாந்தமும்
வசித்ததுத்தம் கவிலுமிர்தாருடன்
வசித்தபூரமும் வாகாயத்துரிகெடே 286

எடுத்துச்சுக்கு பெழிலானவோமமும்
கடுத்தமஞ்சள் கடியவரத்தையும்
தொடுத்தகோஷ்டம் துவளும்வாலுளுவை
அடுத்தசாதிக்கா யன்பாயேலமெடே 287

ஏலம்சோம்பு எடுத்திடுசீரகம்
கோலக்கார்போகங் கொடியமிளகுடன்
வாலம்வசம்பு வகுக்குமாசக்காயும்
தாலலவங்கந் தனிவாய்விளங்கமே 288

விளங்குந்தேசா வரந்தசேங்கொட்டையும்
களக்குஞ்சீரங் கருஞ்சீரங்கந்தமும்
யுளங்குந்தேக்கு புகலுந்தாளிசமும்
அளங்கும்பத்திரி யன்பாயெட்டியெடே 289

எட்டிமுருங்கிரி யேகுந்தேற்றான்விரை
கட்டிப்பூண்டு கடியகொள்ளெள்ளுடன்
வெட்டிதேங்காய் விரையுஞ்சங்கனுடன்
கெட்டிவேலி குறிப்பாய்சமன்தூக்கே 290

தூக்கியண்டர் துடியாம்வெண்கருவை
தாக்குமூரலில் தனியவிடித்துமே
போக்கில்லாமல் பொருந்தசிமிழில்வை
வாக்கிலீசனை வந்தித்தேயுண்டிடே 291

## தீரும் வியாதி.

உண்டபோது முறையும்வெடிசூலை
துண்டமேகந் துடியாமிடிசூலை
அண்டசூலை யழுந்தும்வாதசூலை
கண்டமாலை கதிகெட்டுவோடுமே 292

ஓடுமேக முறையுங்குடைச்சலும்
நீடுமேகாம் நெருங்கும்குஷ்டங்களும்
கோடுநோயுங் குரைநோய்சிரக்குகள்
ஆடுகுன்ம மலரியேநீங்குமே 293

தீங்குலிங்கம் நெருங்கியயோனிநோய்
பாங்குசிலந்தி பருத்தகிரந்தியும்
தீங்குபுண்ணூர் திமிர்தடிப்புமாறும்
வாக்குமூலமு, வரைந்தோடிப்போகுமே 294

போகும்பத்தியம் பொருந்தும்பச்சைப்பயிர்
ஆகுநெய்யு மரும்பசும்பால்தயிர்
ஊகும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
காகுங்கத்திரி கவிலவருந்திடே 295

## சூத செந்தூரம்.

அருந்தசெந்தூர மறையுரேன்மாந்தற்கு
திருந்துகெந்தம் திராட்டிரசமுடன்
பொருந்துசமனெடை போற்றுங்கலுவத்தில்
வருந்துசித்தா மணக்கெண்ணெயாட்டிடே 296

ஆட்டிமெழுகு யன்பாய்த்திரட்டியே
கூட்டிப்பட்டுக் குலாவிப்பொதிந்துமே

காட்டுவேலி நவிலுங்கொடிவேலி
போட்டுமூடிப் பொதியப்புடமிடே 297

இட்டுசெந்தூர மிறக்கியெடுத்துமே
கட்டுதேனில் கலந்துவருந்திட
ஓட்டுநோயு முடலையுட்டேகியே
விட்டுப்போமென வென்குருசெப்பினர் 298

மகா கெந்தக ரசாயனம்.

செப்புமார்தர் சிறந்தரசாயனம்
ஒப்புங்கெந்த முரைக்குமாறுபலம்
தப்பில்லாமல்த் தனிப்பசும்பாலிலும்
வெப்பில்லாமல் விரைந்துசீலைசெய்யே 299

செய்துசெம்பி சிறந்தமணல்தனில்
எய்துமேபுட மெழிலாய்ப்பொதிந்துமே
கொய்துமேகும ரேசனைப்போற்றியே
வெய்துமண்டலம் விரும்பியருந்திடே 300

அருந்தும்போது மரையுமறையாப்புக்
குருந்துரோகங் குறிப்பானவெள்ளையும்
திருந்துவெட்டைச் சிறந்தரணங்களும்
பொருந்துகுஷ்டம் புறப்பட்டுவோடுமே 301

ஓடும்பத்திய முற்றபுளியாகா
நீடுபாலும்நறு நெய்மோருமுண்ணு
ஏடுதயிரு மெழிலாகயுண்டிடு
கோடுமண்டலங் குறிப்பாகவுண்டிடே 302

வேது தண்ணீர்.

உண்டுமேனி யுறும்பும்வலிநீங்க
கண்டுநொச்சி கடியதோர்தாழையும்
மீண்டுநீரில் மிதக்கவேகாய்ந்தபின்
இண்டுவாயு திகைத்தோடிப்போகுமே 303

சகல சுரங்களுக்கு கியாழம்.

போகுமேசுரம் பொருந்துமுடலைவிட்
டாகுந்தூதுவளை கண்டங்கத்திரி
நீகுவேம்பு நிலவேம்புதோடையும்
வாகுபடகம் வகுத்தக்கோடையெடே 304

எடுத்துச்சீந்தி லெழிலானமுட்டியும்
கடுத்தக்காந்தங் கருவேம்பின்மூலமும்
தொடுத்தசெர்தொட்டி தோன்றுமுசுக்கையும்
கொடுத்துபேய்ப்புடல் கூறுந்தும்பைக்கூட்டே 305

கூட்டுந்துளசி குறிப்பாய்சமனெடை
நீட்டுமூரலில் கோரயிடித்துமே
காட்டுஞ்சாக்கு கருதியேசேர்ப்பதற்
கோட்டங்தேக்கு குறிப்பாகத்தூக்கிடே 306

தூக்குதாளிசங் தோன்றுபத்திரியும்
தாக்குசங்குடன் தனியலவங்கமும்
நீக்கித்தோலை நெருங்குஞ்சதாவேலி
போக்குமாத்தை பொருந்தநிறுத்திடே 307

நிறுத்துதிப்பிலி நேருந்தேசாவரம்
அறுத்துவொன்று யழகாயிடித்துமே
வறுத்துப்பாண்ட மறுபடிநீரினில்
கறுத்துக்கியாழவ் கடியவிறக்கிடே 308

இறக்கிமூன்று யிருவேளைதான்குடி
உறைக்குமுப்பு புளிபுகைதள்ளிடு
திறக்கமாகவே தீரவருந்திடில்
பறக்குமேசுரம் பகர்ந்தனர்தேறனே 309

வேறு மருந்து.

தேறங்வாக்குத் திசையிலும்பொய்யாது
கூறக்கியாழங் கொடிதாயுரைக்கிறேன்

காறதேக்கு கடியமதாமும்
தாறசிரங் தனிவாய்விளங்கவே 310

விளங்குமாஞ்சில் விரும்புங்கிராம்புடன்
களங்குபத்திரி கரியதாளிசமும்
வளங்குமிளகு வாகாய்விடையமும்
துளங்குமேயிவை தோன்றச்சமனெடே 311

எடுத்துச்சூரண மெழுலாமிஞ்சிரசம்
அடுத்துச்சுரச மன்பாகமண்டலம்
கொடுத்துமேயிரு வேளையருந்திடில்
மிடுத்தவுடசுர மிரண்டோடிப்போகுமே 312

கண்டாவிழ்தம்.

போகுங்கண்டா வவிழ்தம்புகட்டுதற்
காகும்வெள்ளிக் கருதுபவளமும்
ஆகுஞ்சின்னியு மாமையோட்டுடனே
வாகும்வில்வமும் வாசிவிளாவெடே 313

எடுத்திடுஞ்சுக்கு மேலங்கிராம்புடன்
கொடுத்திடுவால் மிளகுவரத்தையும்
கெடுத்திடுஞ்சாதி பத்திரிகோஷ்டமும்
வடுத்திடுந்தேகா வாமுந்தூக்கிடே 314

தூக்குத்திப்பிலி துய்யருத்திராட்சமும்
தாக்குமேமுலைப் பாலிலுரைத்திடு
தேக்குமேயிரு வேளைதளமிடில்
போக்குமேசலம் பொருந்தவேயூறுமே 315

ஊறுமேசல முற்றநாவுதனிற்
காறுந்துமட்டிக் கடியவேரைத்தட்டி
தீறும்வாயில் தெளியவடக்கிடில்
கோறுந்தாகங் குடியேகிப்போகுமே 316

## தாகத்திற்கு லேகியம்.

போகுமாந்தர் பொருந்தும்தாகவிடாய்
பாகும்வெள்ளிலை பச்சைவிளாவிலை
நாகுமரசன் நவிலுமாடாதோடை
வாகுஞ்சாறு வழியாய்ப்பிழிந்திடே 317

பிழிந்துமணலில் பிரட்டிஎடுத்துமே
தெரிந்துமதுரந் தேர்ந்தமுந்திரிகை
பொருந்துலேகியம் போட்டுவருந்திடில்
முழிந்துதாக முறையிட்டுவோடுமே 318

ஓடுந்தாகம்போ முஷ்ணதாகமும்போம்
நீடுமேகத்தி னெருங்கியதாகமும்
வாகுதாகமும் வந்திரதாகமும்
மூடுருத்திர தாகமும்நீங்குமே 319

## சகல வாய்வுகளுக்கு.

நீங்கும்வாயுவு நிசமுங்கியாழங்கேள்
பாங்குசங்கம் பசருங்கொழுஞ்சியும்
ஓங்குவேலி யுறையுங்கொத்தமல்லி
தீங்கில்லாசிறு தேக்குமெடுத்திடே 320

எடுத்தசுக்கு விளங்கஞ்சிறுதேக்கு
தொடுத்தபாண்டம் துகளவிடித்துமே
படுத்தமேசலம் பாங்காயொருபடி
கடுத்ததீமூட்டிக் கடுகவிறக்கிடே 321

எறக்குங்கியாழ மெழிலாமிளகுடன்
திறக்குமாமணக் கெண்ணெய்யொருபடி
முறக்குங்கியாழ முற்றுங்கலந்துமே
உறக்குமூன்றுநா ளார்வேளையுண்டிடே 322

உண்டபோது முறையுமேகவாயுவு
அண்டிடாம லவனிவிட்டோடிடும்

கெண்டைவாதம் கெடியானசூலைபோம்
கொண்டவாயு குதித்தோடிப்போகுமே 323

சூட்டுக்கு ரஞ்சிதக்குடிநீர்

போகுஞ்சூடு பொருந்தாமலோடுதற்
காகுமேபழங் கருதுமிளநீரும்
வாகுசுண்ணம் வரையுங்குமரிச்சாற்
நீடுசேரகம் நோய்ப்பலந்தூக்கே 324

தூக்கிச்சீனந் துடியாமொருபலம்
தாக்குமொன்றும் தனியக்கலந்துமே
போக்கில்லாமல் பொருந்துமண்டலமுண்
நீக்குச்சூடு நிகழ்ந்தோடிப்போகுமே 325

இரும்பலுக்கு லேகியம்.

போகுமாந்தர் புகலுமிரும்பலுக்
காகும்பரங்கி சக்கரையறுபலம்
நீகுமேபசும் பாலிலவித்துமே
பாகுசூரணம் பாங்காகச்செய்திடே 326

செய்தசீனி சிறக்கவறுபலம்
கொய்தவெண்ணெய் குறிக்கிமெழுபலம்
கைய்துதேனும் நறுநெய்சமபலம்
வைய்துலேகியம் வாகாகக்கிண்டிடே 327

கிண்டியே கழற்சிக்காயளவுடன்
அண்டிமண்டல மன்பாயருந்திடில்
வுண்டிமேக முடலிலிரும்பலும்
அண்டிடாமலவனிவிட்டோடுமே 328

ஓடும்பத்திய முற்றவிரும்பலுக்
காடுவெள்ளாட் டிறைச்சியும்புத்தண்டம்
நாடுமுருங்கை நனிலுதூதுவளை
தேடிமண்டலம் சிறப்பாயருந்திடே 329

## ஒருதலைவலிக்கி தயிலம்.

அருந்தும்போது மரையுமொருதலை
குருந்துமோற்தலை குறிக்குவெள்ளுள்ளியும்
செரிந்துசந்தனம் தேவதாரமுடன்
தெரிந்துசாம்பிறுணி தெளிவாகதூக்கிடே 330

தூக்குஞ்சரக்கு துடியாஞ்சமபலம்
தாக்குமெள்ளெண்ணெய் தனியலர்சேர்பலம்
போக்கில்லாமல் பொருந்தும்பாண்டந்தன்னில்
வாக்குதப்பாமல் வாகாயிறக்கிடே 331

இறக்கிமாயனை யெழிலாகப்போற்றியே
உறக்குமண்டல மோங்குஞ்சகிலாரம்
திறக்கமாகவே தேய்த்துமுழுகிடில்
பறக்குஞ்சன்னி பகருநோய்போகுமே 332

## குமட்டிக்காய்ப் பதங்கம்.

போகும்வேதை பொருந்துங்குமட்டிக்காய்
ஆகும்வேலி யமுக்குராதூதுளை
நீகும்பாவட்டை நேர்ந்தமாவிலிங்கம்
வேகுஞ்சாரணை விரும்பும்வேளையெடே 333

எடுத்துமேமுடக் கற்றூன்தழுதாழை
அடுத்துக்குப்பை யரியசிவன்வேம்பு
தொடுத்துவில்வந் துடர்ந்தவவரியும்
கடுத்துப்பிரம்பின் கருதுசமன்தூக்கே 334

தூக்கிச்சூரணந் துகளம்பொடித்துமே
தாக்குஞ்சுக்குத் தனியலவங்கமும்
போக்குப்பத்திரி பொருந்துங்கிராம்புடன்
வாக்குப்பொய்யாமல் வால்மிளகுசேரே 335

சேர்த்துவோமஞ் சிறந்ததேசாவரம்
பார்த்துதாளிசை பகருஞ்சிறுநாகம்

கார்த்துதிப்பிலி கருதுஞ்சதகுப்பை
கோர்த்துவிடையக் குறிப்பாய்சேரக்கூட்டே 336

கூட்டிச்சூரணங் குறிப்பாயெடுத்திடு
நாட்டிக்கல்வம் நவிலுங்கள்ளிப்பாலால்
ஆட்டிமாத்திரை யளவாகச்செய்திடு
நீட்டிக்காயினில் நெருக்கப்பொதிந்திடே 337

பொதிந்துசீலைப் புகட்டிப்புடமிடு
அதிந்துசூரண மன்பாகச்செய்திடு
சதிந்துசீனியில் சதாராயருந்திடில்
வதிந்துவாதம் வகைகெட்டுவோடுமே 338

ஓடுஞ்சூலை யுளையும்பட்சவாதம்
நீடுகுன்மம் நெருக்கும்வயிற்வலி
கூடுரோகங் குறிக்குங்கழல்வாதம்
வீடுவிட்டு வெளிப்படுமுண்மையே 339

## சூதச் செந்தூரம்.

உண்மையாக வுரைக்கிறேன்செந்தூரம்
தண்மைகெந்தி தனியாமிரதமும்
திண்மையாக வருக்குங்கலுவத்தில்
வண்மையாகச் சிறக்கப்பொடித்திடே 340

பொடித்துமாமணக் கெண்ணெயிலாட்டியே
மூடித்துநாற்பட் டுறையுஞ்சீலையுடன்
வடித்துச்சாணும் வாகாய்ப்புடமிட
நடித்துமோதம் நவிலுஞ்செந்தூரமே 341

தூரமான துடியானசெந்தூரம்
காரமான கருதும்பரங்கியில்
தீரமாகத் தினையளவுண்டிடில்
கோரமேனி குறுகிபொன்னாகுமே 342

கெந்தக ரசாயனம்.

ஆகுங்கெந்தி யரையும்ரசாயனம்
நீகுமேபசும் பாலில்ப்பொதிந்துமே
வாகுங்கெந்தி வரையுங்கலசத்தில்
பாகுமேசீலைப் பாங்காகச்செய்திடே 343

செய்துகோழி சிறந்தபுடமிட்டு
எய்துநீர்ப்பூண் டெழிலாயரைத்துமே
கொய்துபணயிடை குறிக்கும்வெல்லத்தினில்
பெய்துமண்டலம் பெலமாகவுண்டிடே 344

தீரும் வியாதி.

உண்டபோது வுரையுங்குஷ்டரோகம்
கண்டவெள்ளைக் கறுப்புக்கிரந்தியும்
அண்டரோக மகலுங்கடிவிஷம்
துண்டவாயு துடித்தோடிப்போகுமே 345

போகும்பத்தியம் பொருந்துநெய்பாலுடன்
ஆகும்பச்சைப் பயறுடன்கீரையும்
வாகுமண்டல மதிப்பாயருந்திட
ஏகும்நோய்க ளெறந்தோர்டிநீங்குமே 346

பித்தத்திற்குச் சூரணம்.

நீங்கும்பித்தம் நெரிவ்விடுமோர்தற்கு
தாங்குமதூரம் தனிச்சீந்திசர்க்கரை
ஓங்குமேல முயர்கருஞ்சீரகம்
வாங்கும்காகப்பூ வகைக்குச்சமனேடே 347

எடுத்துபாங்கி யெழிலானசக்கையும்
அடுத்துசட்டியி லன்பாகவறுத்திட்டு
தொடுத்தசூரணம் துவளப்பொடித்துமே
அடுத்தசீனியி லன்பாய்ச்சமன்கூட்டே 348

கூட்டுந்தேனில் குலாவுமோர்மண்டலம்
நீட்டுமெண்ணெயில் கோாயருந்திடில்

காட்டும்பித்தம் கவிலும்காற்பதுவும்
காட்டுமேவழி கடந்தோடிப்போகுமே 349

போகும்பத்தியம் பொருந்துமுசுக்கையாம்
ஆகுமிஞ்சி யரியகொத்தமல்லி
பாகுநிம்பம் பழம்விளங்காயுடன்
வாகுமேபுளி யாரையருந்திடே 350

வாதத்திற்குச் சூரணம்.

அருந்துவாத மவனிவிட்டோடுதற்
குருந்துநன்மிளகு வகையாற்பலம்
இருந்துதிப்பிலி சேரவிருபலம்
பொருந்துசுக்குமே போற்றுஞ்சமன்சேரே 351

சேர்த்துப்பத்திரி சிறந்தலவங்கமும்
பார்த்துக்கோஷ்டம் பகருஞ்சண்பகமும்
கோர்த்துவாலு மிளகுசரிபலம்
தூர்த்துச்சூரணந் துடியாகச்செய்திடே 352

செய்துசீனி சிறக்கச்சமனெடை
நைதுதேனில் நறுநெய்வெண்ணெயிலும்
பெய்துமண்டலம் பிரியமாயுண்டிட
தொய்துவாதந் துடித்தோடிப்போகுமே 353

சிலேத்துமத்திற்குச் சூரணம்.

போகுமையம் பொருமியேயோடுதற்
காகுங்கண்டங் கத்திரிசமூலமும்
வாகுநீசி வரையுந்தாளிசமும்
தாகுசூரணந் தயவாகச்செய்திடே 354

செய்துதேனில் சிறக்கவருந்திடு
எய்துமீளைசய கபரோகம்போம்
வைதுசன்னி வலுவானவூஷ்டணம்
உய்துரோக முடனேவிட்டோடுமே 355

## தீராத வாந்திக்கு.

ஓடும்வாந்தி யுடலைவிட்டோடுதற்
காடும்பச்சைப் பயர்விளாதன்னுடன்
நீடும்நெற்பொரி நெருங்கியமுல்லையும்
கூடுஞ்சக்குக் குறிப்பாயெடுத்திடே 356

எடுத்தச்சினி யெழிலாய்க்கலந்துமே
அடுத்தக்கியாழ மறுவேளையுண்டிடு
தொடுத்தவாந்தி துடித்துமேயோடிடும்
தடுத்தப்பத்தியந் தானென்றுமில்லையே 357

## அஷ்டகுன்மத்திற்கு உப்புசெந்தூரம்.

இல்லையேகுன்ம மிறங்கியேயோடிட
தில்லையாடுஞ் சிவன்பதஞ்சாட்சியாய்
கொல்லைமேவுங் குறித்திடிமுப்பினை
வல்லதும்மட்டிச் சாற்றாலரைத்திடே 358

அரைத்துப்பில்லை அழகாகச்செய்திடு
திரைத்தவோட்டினில் தீரச்சீலைசெய்து
உரைத்தக்குக்குடம் வுற்றப்புடமிடு
நிரைத்தசெந்தூரம் நேர்மையைப்பார்த்திடே 359

பார்த்திடப்பா பணவிடைசெந்தூரம்
சேர்த்திடப்பா நிறைபனவெல்லத்தில்
கார்த்துமேயிரு வேளையருந்திடில்
தூர்த்துக்குன்மந் துடித்தோடிப்போகுமே 360

## நேத்திராஞ்சன மை.

போகும்பத்தியம் பொருந்துசெஞ்சுக்குன்னி
ஆகுமிளகு அரியவெள்ளுள்ளியும்
பாகுபுடலை பாக்குட னிஞ்சியும்
வாகுகருணை வாகாகக்கூட்டிடே 361

பக்கசூலைக்கு.

கூட்டுஞ்சூலைக் குடலைவிட்டோடுதற்
காட்டுந்தாரங் கடியதோர்காயியும்
சூட்டும்லிங்கந் துடியானபூரமும்
தீட்டுகெந்தந் திறமாய்ச்சமன்சேரே 362

சேர்த்துவெள்ளைத் திறமானகொப்பரை
பார்த்துவுள்ளப் பதிலைப்பொதித்துமே
நார்க்குக்குக்குடம் நன்றாகச்செய்திடு
தூர்த்துவெந்தபின் தோன்றவரைத்திடே 363

அரைத்துமைபோல வன்பாகச்செய்திடு
முறைத்தப்பாமல் முசியாமல்மண்டலம்
நிறைத்தப்படியே நோயிருவேளை
திறைத்தமாகத் திரிகடிவுண்டிடே 364

உண்டபோது முறையுஞ்சூலையறும்
கண்டமாலை கதறியேயோடிடும்
அண்டவாயு வறையும்யோனிச்சூலை
துண்டசூலைத் துடித்தோடிப்போகுமே 365

பவுத்திரத்திற்கு.

போகுமூலந்தர் புகலும்பவுத்திரம்
ஆகும்பூர மரியகெந்தியுடன்
ஏகுந்தேங்கா யெழிச்சிலவுங்கமும்
பாகுதேனில் பதமாயரைத்திடே 366

அரைத்துமண்டல மறியவொருபாகம்
கரைத்துப்பரங்கி கருதுஞ்சூரணத்தில்
திரைத்துமேயிரு வேளையருந்திடில்
உரைத்தபவுத்திர முழன்றோடிநீங்குமே 367

நீங்குமேயறையாப்பு குஷ்டங்களும்
பாங்குமேமுடநோய் பாங்கிப்புண்கள்

தீங்குசெய்யும் திமிர்வாதநோய்களும்
வாங்குமென்றல்லோ வகுத்தனர்தேறனே 368

திமிர் படைக்கு.

தேறன்சொல்மொழி திசையிலும்பொய்யாது
வேறமருந்து விரும்பியுறைக்கிறேன்
கூறும்பரங்கிச் சக்கையறுபலம்
தூறும்நன்னாரி தோன்றநறுக்கிடே 369

நறுக்கியேசமன் நன்றாகச்சூரணி
குறுக்குச்சீனி குறிப்பாய்சமபலம்
தறுக்கிலாமல்த் தனிப்பசும்பாலிலே
முறுக்கிமண்டல முற்றும்பொசித்திடே 370

சயரோகத்திற்குச் சூரணம்

பொசித்தபோது புகலுஞ்சயரோகம்
தசித்தசூரணம் நன்றாயுரைக்கிறேன்
வசித்தமதுரம் வாகானசந்தனம்
முசித்தகோஷ்டமு முற்றுஞ்சமனெடே 371

எடுத்துவாகை யெழிலானவோமமும்
அடுத்துப்பூலா அழகியசீரகம்
தொடுத்தபத்திரி தோன்றுங்கருஞ்சீரம்
முடுத்தநாகபூ முற்றும்பொடிசெய்யே 372

செய்துசீனிச் சிறக்கச்சமபலம்
கொய்துதேனில் குறிப்பாயருந்திட
நைதுரோகம் நவிலுங்காசரோகம்
மெய்துவிட்டு மிரண்டோடிப்போகுமே 373

கண்படலத்திற்கு.

போகுங்கண்ணில் பொருந்தும்படலங்கள்
ஏகுங்கண்ட மிறங்கியேயோடுதற்

காருஞ்சங்கு கனத்தபிதரோணி
ஆகும்வெள்ளி யரியபொன்னுமெடே 374

எடுத்துக்கெம்பு யெழிலானமுத்துடன்
அடுத்துதுத்த மழகியமோதகம்
கடுத்துதுருசு கடியவெண்காரமும்
தொடுத்துமேபழஞ் சாற்றிலடுத்திடே 375

அடுத்துச்சாம மறுபதுவாணபின்
தொடுத்துவெண்ணெயில் தோன்றமுப்பதுவாம்
எடுத்துக்கண்ணி லெழிலானமண்டலம்
கெடுத்திடாமலே கெட்டியாய்ப்பூட்டிடே 376

சகல சுரங்களுக்கு மியாழும்.

பூட்டும்போது புகலுங்கியாழங்கேள்
காட்டுவேம்பு கவிலுர்தூதுவளை
காட்டுங்கத்திரி கருதுமாடாதோடை
சூட்டுக்காந்தி சுருக்காகத்தூக்கிடே 377

தூக்கித்தண்டு துடியாம்பற்படகம்
தாக்கிசெங்தொட்டி தனிபவிருவேம்பு
தோக்கிமாதளை தோன்றும்பேய்ப்புடலும்
வாக்குதப்பாமல் வாகாய்நிறுத்திடே 378

நிறுத்துமேயுரல் நோராயிடித்துமே
கறுத்தவாலு மிளகுகசகசா
அறுத்ததாளிச மழகியபத்திரி
வறுத்தசுக்குமே வாகாயெடுத்திடே 379

எடுத்துதேசர வாமுமரத்தையும்
கொடுத்துக்கல்லுரல் கூறயிடித்துமே
அடுத்துமேசல மண்பாகக்காய்த்துமே
தொடுத்துமூன்றுநாள் தோன்றக்குடித்திடே 380

குடித்தபோது குளிர்சுரமோடிடும்
அடுத்தச்சன்னி யலறியேயோடிடும்

தொடுத்தபத்தியந் தோன்றுமுப்பாகர்து
வடுத்ததேரையன் வாக்குப்பொய்யாதிதே 381

அண்டவாதத்திற்கு.

பொய்யாதய்யா புகலுமண்டவாதம்
அய்யாசிற்றண்டம் அரியமிளகுடன்
துய்யாவாமணக் கெண்ணெயிற்காச்சியே
மெய்யாய்மண்டல மேவிடவுண்டிடே 382

உண்டபோது முழலுமண்டவாதம்
கண்டமாலை கதரியேயோடிடும்
திண்டரோகந் தெறிந்துவுடலைவிட்
டண்டிடாமல் தரணிவிட்டோடுமே 383

கபால பீனிசத்திற்குத் தயிலம்.

ஓடுமேகபால வலிசன்னிக்கு
தேடுஞ்சுக்குத் திடமாம்பெருங்கிழங்
காடுங்கண்டங் கத்திரிசமூலமும்
கூடுந்தேசா வராமுஞ்சமனெடே 384

எடுத்துப்பத்திரி யேலமிலங்கமும்
தொடுத்துமதூரந் தோன்றவிருசீரம்
முடித்துமேமுலைப் பாலிலரைத்துமே
வடித்துயெண்ணெயில் வாகாகக்காய்ச்சிடே 385

காய்ச்சுமெண்ணெய்க் கருதும்பதத்தினில்
மூச்சிடாமல் முதியவோர்மண்டலம்
தேய்ச்சுவாரந் திறமாயிருமுறை
வோய்ச்சிடாமல் நெருங்கமுழுகிடே 386

முழுகும்போது முறையுந்தலைவலி
கழுகும்பீனசம் கவிலுஞ்சன்னிதோஷம்

ஒழுகும்காசிபி லுற்றநீர்ப்பாய்ச்சலும்
அழுகுங்கண்ணீ ரலறியேயோடுமே 387

புருஷர் மதனலீலாவதிக் குளிகை.

ஓடிமார்த ருறையும்லீலாவதிக்
காடுங்குளிகை கருதியுறைக்கிறேன்
தேடுமுருங்கை திடமானவித்துவும்
நீடுஞ்சாரப் பருப்புமெடுத்திடே 388

எடுத்திடப்பா வெழிலானவபினியும்
அடுத்திடுமால னரசுவித்துவுடன்
தொடுத்திடுங்கஞ்சா தோன்றும்பூனைக்காலி
கொடுத்திடும்பூமி சர்க்கரைசேர்த்திடே 389

சேர்த்துத்தேத்தான் சிறந்தபேரீச்சனும்
பார்த்துப்பல்கரை பகருமாட்டியும்
கோர்த்துப்பூரங் குலாவியகுங்குமம்
ஈர்த்துச்சாம்பிராணிப் பதங்கமூர்தூக்கிடே 390

தூக்கியேபசும் பாலிலவித்துமே
தாக்குகல்வர் தனியப்பொடித்துமே
போக்கில்லாமல் பொருந்துநெய்சீனியில்
வாக்குத்தப்பாமல் வாகாய்க்கிளறிடே 391

கிளறிவிசனைக் கிருபையாய்ப்போற்றியே
தளரமண்டலந் தானுண்ணிருவேளை
வளரப்பத்தியம் வாகாயிறைச்சியும்
சாளக்காடையுஞ் சதுராகயுண்டிடே 392

உண்டபோது முடலுமுறக்கேறி
கண்டபோது கருதியதாதுவும்
மிண்டவாயு நெருங்கியகுத்துபோம்
பண்டுபோல்மேனிப் பாங்காயிறுகுமே 393

இறுகுப்லீலை யிருநூறுகன்னியாம்
மறுகுமண்டல மதிப்பாய்ப்புணர்ந்திடு
குறுகுந்தேரையன் குருமொழிபொய்யாது
நறுகுமாந்தர்க்கு நயந்துவுரைத்ததே 394

வண்டுகடி தடிப்புக்கு சவ்வீரக்களிம்பு.

உரைக்குமாந்த ருறையும்வண்டுகடி
திரைக்குஞ்வீரக் களிப்புவுரைக்கிறேன்
முரைக்குஞ்வீரத்தை முயலும்வெண்ணெய்தனில்
கரைக்குங்கல்வத்தில் கலக்களைழைத்திடே 395

எழைத்துமேக ரணங்கள்தடிப்புக்கு
குழைத்துமண்டலங் குறிப்பாகப்பூசிடில்
தழைக்கும்புண்கள் தடுமாரியோடிடும்
பிழைக்கமாந்தற்குப் பேணியுரைத்ததே 396

ஊஷ்ணகாங்கைக்கு குடிநீர்.

உரைத்தக்காந்த லுளறியேயோடுதற்
கரைத்தவறுகன் கருதியநெருஞ்சிலும்
நிரைத்தமுருங்கை நேரும்பிடியீர்க்கு
வரைத்தப்பாமலே வாகாகக்காய்ச்சிடே 397

காய்ச்சுசீரங் கருதுமிளகுடன்
மாய்ச்சிடாமல் மறுமுறைக்காய்ச்சிடு
தீய்ச்சுவெண்ணெய் சிறக்கக்கழஞ்சியாம்
மூச்சுடாமல் முறைப்படியுண்டிடே 398

உண்டபோது முறையும்வயிற்வலி
கண்டகாங்கை கதறியேயோடிடும்
வண்டரோகம் வலிகடுப்புந்தீரும்
தெண்டன்தேறன் தெளிவாயறைந்ததே 399

குடைச்சலுக்குத்தைலம்.

அறையுமாந்த ரலருங்குடைச்சலுக்
குறையுமயிற்பீலி குறிக்குமனேசிலை

நிறையுஞ்சட்டியில் நோய்க்கருக்கியே
பறையும்வேம்பெண்ணெய் பாங்காகச்சேர்த்திடே 400

சேர்த்துத்தயிலஞ் சிறப்பாயிறக்கியே
பார்த்துக்குடைச்சல் பதமாகப்பூசிடில்
ஆர்த்துவாயு வலரியேயோடிடும்
தூர்த்துப்பத்தியந் தோன்றமுப்பாகாதே 401

மாந்ததோஷத்திற்கு குளிகை,

ஆகாதய்யா வலறுமாந்ததோஷம்
வாகவில்வம் வகுக்கும்விளாவுடன்
சாகாவேளை சதுர்கஞ்சாங்கோரையும்
போகாகின்னி பொருந்துமொச்சையெடே 402

எடுத்துக்கத்திரி யெழிலானபச்சையும்
கடுத்துத்தும்பை கருதுமமுக்கரா
தொடுத்துவேலி தொகுக்கும்நுணாவுடன்
வடுத்தசாரணை வாகாய்ச்சமன்தூக்கே 403

தூக்கிக்காவளைத் துய்யகொழுஞ்சியும்
தாக்கும்பிரண்டை தனிசித்திரமூலமும்
போக்கில்லாமல் பொருந்துக்கையானுடன்
வாக்குதப்பாமல் வசம்புகிறுத்திடே 404

நிறுத்துவோமம் நெருங்கியசுக்குடன்
குறுத்துக்குப்பைக் குறித்திடுமேலமும்
அறுத்துக்கோஷ்ட மழகியசீரகம்
திறுத்துரோசனை தீரச்சமன்சேரே 405

சேர்த்துக்கல்வஞ் சிறப்பாய்ப்பொடித்துமே
பார்த்துநாய்வேளைப் பகரும்ரசத்தினில்
தீர்த்துஞ்சாமந் திறமாயரைத்துமே
கோர்த்துமாத்திரைக் குளிகைபோல்செய்திடே 406

செய்துதேனில் சிறக்கும்கன்னிப்பாலில்
எய்துநாய்வேளை ஏற்குந்தும்பைச்சாற்றில்
பைதுகாலையில் பாக்காயருந்திடே
நைதுமாந்தம் நவின்றேடிப்போகுமே 407

தாளக பற்பம்

போகுமாந்தர் புகலுமரிதாரம்
ஆகுஞ்சிங்கி யரியகடுக்காயால்
பாகுசாமம் பதமாயரைத்துமே
வாகுசீலை வலுவாய்ப்பொதித்திடே 408

பொதிந்துகுக்குடம் பொருந்தவேபோட்டிடு
வந்துமாயனை வாகாகப்போற்றியே
பதிந்துபற்பத்தைப் பாக்காயருந்திடில்
நதிந்துசயரோகம் நவின்றேடிநீங்குமே 409

குன்மவாந்தி எப்பத்திற்கு மெயாழும்.

நீங்குமேப்ப நெருங்குங்குன்மத்திற்கு
பாங்குவேலம் பகரும்நெல்லிமுள்ளி
தாங்குநெற்பொரி தனியபசும்பயற
வாகுவில்வம் வகைக்குச்சமன்சேரே 410

சேர்த்துச்சூரணஞ் சிறப்பாய்ப்பொடித்துமே
பார்த்துமேயிள நீரிலரைத்துமே
வார்த்துக்கோமியம் வாகாக்காய்ச்சுமே
தூர்த்துமண்டலந் துணிவாகவுண்டிடே 411

உண்டபோது வுறையுமிருமலும்
கண்டகுன்மங் கருதியயேப்பமும்
நீண்டவாந்தி நெருங்கிடவூரலும்
அண்டிடாம லவனிவிட்டோடுமே 412

ஓடும்பத்திய முற்றபருப்பாகும்
நீடுமேபசும் பாலும்வெண்ணீருண்ணு
ஆடுந்தூதளை யாகும்பொன்னுங்கண்ணி
தேடுமண்டலஞ் சிறப்பாயருந்திடே 413

### காமகேசரிக் குளிகை.

அருந்துமாந்தற் கறையுறேன்கேசரி
திருந்துகுளிகை திறமாமதனப்பூ
பொருந்துங்கிராம்பு புகலுஞ்சாதிக்காயும்
குருந்துமொக்கு குறிப்பாய்ச்சமனெடே 414

எடுத்துத்தங்க மெழிலானபற்பமும்
அடுத்துச்சாம்பிராணி யத்திமுருங்கையும்
வடுத்துமதுரம் வாகாவபினியும்
தொடுத்துமுருங்கைப் பூச்சாற்றாலரைத்திடே 415

அரைத்துச்சுண்டைக் காயளவுப்பிரமாணம்
வரைத்துமேபசும் பாலிலருந்திடு
நிரைத்துமண்டலம் நெருங்கியபத்தியம்
குரைத்திடாமம் குறிப்பாகவுண்டிடே 416

உண்டபோதுமே யோங்கிடும்விர்த்தியாம்
கண்டதாது கருதுமுருக்கேறி
அண்டயானை யதிகபலமுண்டாம்
தொண்டன்யோகித் தொகுக்குமுறையிதே 417

முறையாம்போக முனைந்துசெய்தாலுமே
நிறையாம்விந்து நீணிலந்தான்விழா
சிறையாமாந்தர் சினைந்துநடுங்குவார்
வறையாமோகம் வதிந்துமேவாடுவார் 418

வாடுவார்மாயக் கிருஷ்ணவதாரனும்
நீடுமேபதி னாயிரம்பெண்களை
கூடுபோகக் குலாவிபுணர்ந்திட்டான்
தேடுங்குளிகை தெளிவாயருந்திடே 419

அருந்தும்போது அறையுறேன்மாந்தரே
தெரிந்துமாதர் தினம்நூறும்போதாது
குருந்துபார்வை குமரிவசமாவார்
பருந்துமன்மதன் பகரும்லீலைசெய்யே 420

தாதுபுஷ்டிக்கு குளிகை.

செய்யலீலை செழிக்கத்தாதுபுஷ்டி
நய்யவாலை ரசமுமறுபலம்
துய்யலிங்கந் துடியாமிருபலம்
வய்யகிராம்பு வருக்கும்விரானெடே 421

எடுத்துக்கஞ்சா வெழிலானகாரமும்
அடுத்துச்சாதிக்கா யானமுருங்கையும்
தொடுத்துக்காசுடன் தோன்றுபத்திரியும்
விடுத்துப்பூனை விருப்புஞ்சமன்சேரே 422

சேர்த்துச்சாரச் சிறந்தபூமிக்கிழங்
கார்த்துமேசமன் கருதுமுக்கண்ணிலே
பார்த்துவுள்ளினிற்ப் பாங்காய்ப்பொதிந்துமே
தூர்க்குக்குக்குடந் துணிவாகப்போட்டிடே 423

போட்டுவெந்து புகலுமாவின்பாலில்
நீட்டுச்சாமம் நெருங்கவரைத்துமே
பூட்டுமுண்டை பொருந்துங்கழற்சிக்காய்
கூட்டுமண்டலங் குறிப்பாகவுண்டிடே 424

உண்டுமுப்பு முறையும்புளிதள்ளு
கண்டுசர்க்கரைக் காய்ச்சியபாலுண்ணு
பெண்டுபோகம் பிரியமாய்ச்செய்திடு
விண்டுதேறன் விரும்புமொழியிதே 425

மொழிந்தகுருமொழி முற்றும்பொய்யாதுகாண்
அழிந்துபோக மரிவைபுணர்ந்திடில்
குழிந்துவிந்து குவலயந்தான்விழா
விழிந்துஸ்தம்பனம் வாகாயிறுகுமே 426

## சர்வசுரவேங்கைக் குளிகை.

இறுகுமார்த ரிறக்குஞ்சுரத்திற்கு
அறுகுஞ்சங்கு வரியகெவுரியும்
குறுகுந்தாரங் குறிப்பாய்சமபலம்
முறுகுமேமுலைப் பாலிலரைத்திடே 427

அரைத்துப்பச்சைப் பயரள வாகவே
உரைத்துமேமுலைப் பாலிலருந்திடு
கரைத்தமேசுரங் கதறியேயோடிடும்
முரைத்தகுருமொழி மொழிந்ததுவுண்மையே 428

## சுரத்திற்கு அபின்குளிகை

உண்மையாக வுரைப்பேன்குளிகையொன்
றுண்மையான தனிச்சுக்குசீரகம்
வண்மைதிப்பிலி வசுக்குமேமிளகுடன்
திண்மையாம்பின் தீரச்சமனெடே 429

எடுத்துக்காந்தி யெழிலாங்கிஷாயத்தால்
அடுத்துச்சாம மறுபதுவானபின்
வடுத்துக்குன் றிபோல் வாகாயுருட்டியே
தொடுத்துத்தேனிலே துவளக்கொடுத்திடே 430

## இதுவும் சுரக்குளிகை.

கொடுக்கும்பத்தியங் கூறும்புளிபாகா
அடுக்குங்குளிகை யன்பாயுரைக்கிறேன்
தொடுக்கும்லிங்கமுந் தோன்றுவெண்காரமும்
முடுக்கும்நாபி முசியச்சமன் தூக்கே 431

தூக்கித்திப்பிலி துய்யமிளகுடன்
தாக்குவாளந் தனிப்பழச்சாற்றிலே
போக்கிலாமல் பொருந்தவரைத்துமே
லாக்குதப்பாமல் வாகயுருட்டிடே 432

உருட்டிக்குன்றிபோ லோங்குமாத்திரையை
அருட்டிமேசுர மன்பாயருந்திடு
தெருட்டுப்பத்தியந் தீரப்புளிதள்ளு
வெருட்டுதேறையன் வேண்டியுரைத்ததே 433

அமுர்த சஞ்சீவிக் குளிகை.

உரைக்குஞ்சஞ்சீவி யுற்றகுளிகையொன்
றிரைக்குஞ்சாதியி லிங்கம்வெண்காரமும்
வரைக்குஞ்சுக்கு வளர்கடுதிப்பிலி
முரைக்குங்கிராம்பு முற்றிலும்பொடித்திடே 434

பொடித்துமேபழச் சாற்றுலரைத்துமே
வடுத்துக்குளிகை வாகாயுருட்டியே
கடித்துதேனில் நறுநெய்யிலீய்ந்திட
அடித்ததிரிசுர மலரியேயோடுமே 435

வாலை சுகபேதிக்குளிகை.

ஓடும்பேதி யுலகில்மாந்தருக்கு
தேடுமிளகு தேர்ந்ததொருபலம்
கூடுஞ்சுக்குக் குறித்திடுமீர்பலம்
வாடுந்திப்பிலி வகையாய்ப்பலமெடே 436

எடுத்துவோம மெழிலானரோகணி
அடுத்துகோஷ்டமு மன்பாணவாளமும்
தொடுத்துமேபழச் சாற்றுலரைத்துமே
கொடுத்துபேதிக் குழம்பியேயாகுமே 437

சகலருக்கும் பேதிமாத்திரை.

ஆகும்பேதி யறையுங்கிராம்புடன்
வாகுவோமம் வரையும்லவங்கமும்

பாகுசீரம் பகருஞ்சாதிக்காயும்
கூகுநீருங் குறிப்பாய்சமன் தூக்கே 438

தூக்கிசுக்குடன் துய்யகஸ்தூரியும்
தாக்கிவேளை தனியாவசம்புடன்
போக்கில்லாத பெர்ருங்துகஸ்தூரியும்
நோக்கிவெந்நீரில் நுருங்கவரைத்திடே 439

அரைத்துச்சுண்டைக்கா யளவுப்பிரமாணம்
கரைத்துவெந்நீரிற் காலையில்தானீய
வரைத்தபேதியும் வாகாய்ப்பிழிக்திடும்
திரைத்தவெந்நீரு மன்னமுமுண்டிடே 440

வார்திபேதிக்கு கற்ப்பூராதிக் குளிகை.

உண்டபோது முறையுமூழிக்காற்று
அண்டிமாமல வனிவிட்டோடுதற்
கண்டுலிங்கசு கருதுகற்ப்பூரமும்
பண்டுசாம்பிராணிப் பாங்காய்நிருத்திடே 441

நிறுத்தியொன்ருய் நிகழவரைத்துமே
முறுத்துமாத்திரை மெழுகாயுருட்டியே
பொறுத்துமாற்வேளை பொருந்தவேதானீயில்
கருத்தபேதிக் கதரியேயோடுமே 442

ஓம்பத்திய மோதுகோதுமையாம்
ஆடுக்கஞ்சி யடிக்கடிதான்கொடு
நீடும்பேதி நெருங்கியேநின்றிடும்
தேடுங்கற்பூராதி தெளியவுரைத்ததே 443

சாம்பிராணிக்குளிகை.

உரைத்தக்குளிகை யோங்குஞ்சாம்பிராணியாம்
நிறைத்தசட்டியில் நெருங்கப்பொதிந்துமே
வரைத்தச்சீலைமண் வாகாகச்செய்திடு
புரைத்தவெண்ணெயில் பாங்காயெரித்திடே 444

எரித்தப்பூவை யெழிலாயெடுத்துமே
கரித்தவெற்றிலைக் கருதுங்கச்சாயத்தில்
குரித்தமிளகு குன்றிபோலுண்டிட
முரித்ததாது முயன்றயிறுகுமே 445

கட்டுவாதி மாத்திரை.

இறுகுமேலே மெழிலாயுடைந்திடில்
குறுகும்பத்திரி கூறுஞ்சாதிக்காயும்
அறுகுங்கோஷ்ட மதிவிடையப்பிசின்
நிறுகுமாசக்காய் நேராயெடுத்திடே 446

எடுத்துக்கோஷ்டமு மேலலவுங்கமும்
அடுத்துச்சரக்கு வன்பாய்ச்சமனெடை
தொடுத்துமாதுளங் காயிற்பொதிந்துமே
முடுத்துச்சீலை முனையாகச்செய்திடே 447

செய்துகுக்குடஞ் சிறக்கப்பொதிந்திடு
எய்துசாக்கை யெடுத்துமேகல்வத்தில்
கொய்துகஞ்சா குறிக்குங்கையான்றனில்
பெய்துமெழுகாய் பேணியரைத்திடே 448

அரைத்துமாத்திரை யன்பாயுருட்டியே
உரைத்துமேபசும் பாலிலருந்திட
முறைத்தபேதி முயன்றுமேநின்றிடும்
வறைத்துமேபுளி வாகாவுண்டிடே 449

இலிங்கக்கோடரி.

உண்டபோது முறைக்காச்சல்நீங்கிட
கண்டலிங்கங் கருதுமுலைப்பாலில்
அண்டகூட னகலுஞ்சாம்பிராணியும்
துண்டசுக்குமே துய்யச்சமனெடே 450

எடுத்துதிப்பிலி யேலமிளகுடன்
அடுத்தப்பத்திரி யானலவங்கமு

தொடுத்தப்பட்டை துகளுங்கிராம்புசேர்
கொடுத்துத்தேனில்க் குழிப்பாயறைத்திடே 451

கற்பூர சலாசத்து பற்பம்.

அறைக்கும்பற்ப மறைவேனொருபாகம்
கறைக்குங்கற்பூர சத்துப்பலம்வாங்கி
நிறைக்குஞ்செருப்படை நேர்ந்தசாற்றிலரை
மூறைதப்பாமலே மூன்றுசீலைசெய்யே 452

செய்துகுக்குடஞ் சிறந்தபுடமிட
எய்துபற்ப மெழிலுருவட்டம்போல்
கொய்துமேநிறங் குழித்திடும்பற்பத்தை
நைதுவெண்ணெயில் நயந்துவருந்திடே 453

அருந்திடப்பித்த மரியதடிப்புகள்
குருந்திடும்வெள்ளை குழிக்கும்பிரமேகமும்
திருந்துமேயுடல் செறிந்துமேயோடிடும்
வருந்துபற்பம் வகையாகவுண்டிடே 454

சலாசத்துப் பற்பம்.

உண்டபோது முடலைவிட்டேகுதற்
கண்டுவெண்காரம் கருதுஞ்சலாசத்து
பண்டுமேபழச் சாற்றிலரைத்துமே
ரண்டுகுக்குடம் நயந்துமேபோட்டிடே 455

போட்டபோது பொருமியேபற்பமாம்
நீட்டவெண்ணெயில் நோயருந்திட
காட்டவெள்ளைக் கடுப்புவருகலும்
தேட்டமாக திகைத்தோடிப்போகுமே 456

போகும்பத்தியம் பொருந்துமுருக்கையாம்
ஆகுங்கத்திரி யானவுப்புக்கண்டம்
பாகுசர்க்கரைப் பாலும்பழமுண்ண
நீகுமேகம் நெருங்கியேயோடுமே 457

வெள்வங்க பற்பம்.

ஓடும்வங்க முசுக்கைபொதிந்துமே
நீடுமேபுடம் நோாகப்பூண்டிட
தேடுபற்பந் தெறிக்குஞ்சங்குபோலாம்
ஆடுமண்டல மன்பாகத்தின்றிடே 458

தின்றபோது திமிர்பெருங்குஷ்டநோய்
தன்றுவாதந் தடிப்புகருங்குஷ்டம்
குன்றுகுன்மம் குழவியேயோடிடும்
வென்றுதேறன் விரும்பியறைந்ததே 459

வெண்குஷ்டந்தீர தங்கபற்பம்.

அறைந்தபற்ப மறியவொருபாகம்
நிறைந்ததங்கம் நெருங்குமொருபலம்
உறைந்தமுள்ளியி னேக்குஞ்சமூலத்தில்
வறைந்துமேபொதி வாகாய்ப்புடமிடே 460

இட்டபோது யிறைஞ்சியேபற்பமாம்
திட்டமாகத் திறைக்கும்வெண்ணெய்தனில்
அட்டமண்டல மன்பாயருந்திட
குட்டநோய்முதல் குடியேகிப்போகுமே 461

வெள்ளி பற்பம்.

போகுமேவெள்ளிப் போற்றிடும்பற்பஞ்செய்
ஆகுஞ்செம்முள்ளி யன்பாயரைத்துமே
வாகுமுழுப்புடம் வண்மையாய்ப்போட்டிட
பாகுபற்பம் பவளநிறமாமே 462

நிறமாம்பற்பம் நிகழுமுக்காவேளை
உறமாயரைத்து ஒங்குசீலைசெய்து
திறமாய்க்குக்குடந் தீரப்பொதிந்திடு
குறமாய்வெண்ணெயில் குழிப்பாயருந்திடே 463

அருத்திடகாச மலறியேயோடிடும்
பொருந்துமேசயம் பொங்கியேநின்றிடும்
திருந்துமீளை சிதறியேதங்கிடும்
வருந்துசூலை வனம்விட்டுவோடுமே 464

சிறுகண்ணுகைப் பற்பம்.

ஓடுநாக முறையும்பற்பங்கேளு
நீடுமம்மான் நெருங்கும்டச்சாசயிலை
கூடுந்தேங்காய் குறிப்பளவாகவே
போகுமேபலம் பொருந்தப்பொதிந்திடே 465

பொதிந்துபற்பமும் போற்றுந்தவளமாம்
வதிந்துநெய்தனில் வாகாயருந்திட
கதிந்துமூலமுங் கருதியவெள்ளையும்
சதிந்துரோகமுஞ் சடுதியில்நீங்குமே 466

மேகங்களுக்கு மருந்து.

கட்டுமெள்ளெண்ணெய் கருதியபாலினில்
ஓட்டும்பரங்கி யோங்கியசூரணம்
எட்டுந்தும்பை யெழிலானசர்க்கரை
மட்டுமொன்றாய் மசியவேகண்டிடே 467

பல்நோவுக்கு தியாழம்.

கண்டுகாரங் கருதுமாவாரையும்
வெண்டுதியாழம் விரும்பியேகாய்ச்சிடு
மொண்டுமூன்றுநாள் முசியவேகொப்பளி
கொண்டுபல்நோய் குடியோடுமுண்மையே 468

தந்தவாயுக்கு வேது.

உண்மைவாத மடக்கிகருநொச்சி
திண்மைமாதுளை தேர்ந்தகருங்தாளி

வண்மையாக வருக்கும்வேதுதன்னை
பண்மையாகவே பத்துமேல்கட்டிடே 469

வயிற்றுவலிக்கு மருந்து.

கட்டிச்சுக்கு கழறுமரைப்பலம்
அட்டிவெள்ளுள்ளி அடுக்காயிருபலம்
முட்டிக்கோஷ்ட முனைப்பாய்சம்பலம்
கொட்டியெண்ணெயில் கொதிக்கயிறக்கிடே 470

எறக்கிமண்ட மெழிலாயருந்திடில்
உறக்குமேவலி யோக்கும்பெருஞ்சூலே
திறக்கமான திமிர்வலிகுன்மமும்
பறக்குமென்று பகர்ந்தனர்தேறனே 471

விரைவாதத்திற்கு.

தேறன்கூர்மொழி திசையிலும்பொய்யாது
கூறவாதங் குறிக்கும்விரைவாதம்
தூறமருந்து துறையாயுரைக்கிறேன்
நீறமான நெருங்குமுப்புமெடே 472

எடுத்துச்சீன மெழிலானசூதமும்
கடுத்துலிங்கங் கருதியசூதமும்
அடுத்துமிளகு அரிதாரவீரமும்
தொடுத்துவொன்றாய்த் துகளப்பொடித்திடே 473

பொடித்துத்தேனில் புகலவரைத்திடு
கடித்துமண்டலங் காலையருந்திடு
வடித்தசோறுடன் வரையும்பசும்பயற்
றுடித்துநெய்யுடன் துணிவாகவுண்டிடே 474

உண்டபோது முறையும்விரைவாதம்
கண்டுசெய்குவோர் காசினியிலில்லையே
தொண்டுசெய்துமே தோற்றங்குருவிடம்
பண்டுபோல்முறை பகர்ந்துகொடுத்ததே 475

கணமாந்தக் குளிகை.

கொடுத்துமாந்தக் குளிகையகலிட
அடுத்துரோசனை யானகஸ்தூரியும்
தொடுத்தசண்பகந் தோன்றுவிலாமிச்சம்
வடுத்தபேதி மதுரமுந்தூக்கிடே 476

தூக்கிவேலிபின் றய்யகளஞ்சிடை
தாக்கியொன்றாய்த் தணிமுலைப்பாலிலே
போக்கிலாமல் பொருந்தவரைத்துமே
வாக்குத்தப்பாமல் வருந்திகொடுத்திடே 477

கொடுத்தபோது குழவியெழுமாந்தம்
படுத்தசெவ்வாப்பு நீங்கியேயோடிடும்
கடுத்தமுக்கல் கலங்கியேநின்றிடும்
வடுத்ததேறையன் வாக்குப்பொய்யாதிதே 478

குஷ்ட்டத்திற்கு.

பொய்யாதய்யா புகலுங்குருமொழி
அய்யாகுஷ்ட மகலும்படியாக
மெய்யாகள்ளி விருப்புமிலைக்கள்ளி
துய்யாபரங்கிச் சக்கைநிறுத்திடே 479

நிறுத்தியொன்றாய் நெகிழவரைத்துமே
கறுத்திடாமல் கருதியகுக்குடம்
பொறுத்துபற்பம் பொருந்துஞ்சாம்பல்நிறப்
வறுத்துப்பஞ்சாங்கம் வாகாவுண்டிடே 480

உண்டபோது வுறுத்தும்பெறுங்குஷ்டம்
கண்டமாலை கருதியவெள்ளையும்
அண்டவாயு வபானனிறுகலும்
கொண்டகொனங் குடியோடிப்போகுமே 481

போகும்பத்தியம் போற்றும்பிரண்டையாம்
ஆகும்வெள்ளாட் டரிசவுப்புக்கண்டம்

தாகும்பாலு சரிசெனிகற்கண்டு
வாகுமண்டல மதிப்பாகத்தின்றிடே 482

தாம்பர பஸ்பம்.

தின்றிடபற்பந் திறமாயுரைக்கிறேன்
நன்றுதாம்புர நவிலுமொருபலம்
சென்றுமேகருங் குன்றியரைத்துமே
குன்றிடாமல் குறிப்பாய்ப்புடமிடே 483

இட்டபோது இறுகியேபற்பமாம்
துட்டெடைநெய்யில் தோன்றுமரிசிடை
அட்டமண்டல மன்பாயருந்திடில்
குட்டநோய்பதி னெட்டுமகலுமே 484

நெல்லிக்காய் கெந்திபற்பம்.

அகலும்பற்ப மறைவேனொருபாகம்
நிகலும்புரசை நோயரைத்துமே
புகலுஞ்சீலை பொருந்தவலுவுடன்
பகலின்சூரியன் பற்பமுமாகுமே 485

ஆகும்பற்ப மரிசிப்பிரமாணம்
வாகுதேனில் வருக்குமோர்மண்டலம்
பாகுபத்தியம் பாங்காயருந்திடில்
நோகுமேகம் நொருங்கியேயோடுமே 486

அண்டவாயுவுக்கு.

ஓடுமேயண்ட முற்றகருவினை
நீடுவீக்கமும் நேர்ந்தகந்தகமும்
வாடும்பூரமும் வருக்குமரிதாரம்
நேடுந்தேனில் தெளிவாயரைத்திடே 487

அரைத்துக்குன் றிபோ லானமாத்திரையை
முரைத்துமண்டல முற்றுமருந்திட
கரைத்துப்பத்தியங் கருதுமுப்புக்கண்டம்
உரைத்துமிளகுநீர் முசிபவேயுண்டிடே 488

உண்டபோது வுறங்கும்விரைவாதம்
கண்டவாயுவு கடியசுழல்வாதம்
அண்டவாயு வபானகடுக்கலும்
மிண்டுவாத மிறங்கியேநீங்குமே 489

இரச பற்பம்.

நீங்குமேசூதம் நெகிழவரைத்திடே
ஓங்குந்தும்பை யுறையுநெல்லியுடன்
வாங்குபவ்விடை வாகாயறைத்துமே
தீங்கில்லாமல் திறமாதத்தட்டிடே 490

தட்டிக்குக்குடந் தனியவேபற்பமாம்
கட்டிதேனில் கருதுமோர்மண்டலம்
முட்டியொழ முறைப்படிகாலையில்
கெட்டிடாமல் நெகிழவருந்திடே 491

அருந்தும்போது மறையாப்புவெள்ளையும்
திருந்துசூலையும் திமிர்பெருகுஷ்டமும்
வருந்துமேகமும் வரட்சிகாமாலையும்
பொருந்திடாமல் புவிவிட்டகலுமே 492

மிருதார்சிங்கிப் பற்பம்.

அகலுஞ்சிங்கி யறைவேனொருபாகம்
நிகலும்வேம்பு நிறைப்பழச்சாற்றினில்
சகலுஞ்சிங்கியை சாமமறுபது
புகலுமரைப்பு பொருந்தவேபூண்டிடே 493

பூண்டுபில்லைப் புகழாகத்தட்டியே
கூண்டுமுட்டைக் குறிக்குக்குக்குடமாம்

மாண்டெப்ப மறையுந்தவளமாம்
ஆண்டுமும்முறை யன்பாகத்தின்றிடே 494

தின்றபோது திரேகமீறங்கிடும்
நன்றதாது நவிலும்நஷ்டங்களும்
குன்றிடாமல் குமிழியேதங்கிடும்
என்றுதேரைய னெழிலாயறைந்ததே 495

கலைமான் கொம்பு பற்பம்.

அறையுமானி னழகியபற்பங்கேள்
நிறையுமேபழச் சாற்றுலரைத்துமே
திறையுமோரவித் தீரவேகாய்ந்தபின்
முறையுக்குக்குட முற்றும்பொதிந்திடே 496

பொதிந்துதீயைப் பொருந்தப்புகட்டியே
வதிந்துமாயனை வாழ்த்தியெடுத்திடு
சதிந்துபற்பந் தனியாறுநெய்யில்
முதிர்ந்துமண்டல முற்றும்பொசித்திடே 497

பொசித்தபோது பொருமலீரைப்புகள்
நசித்தமேனி நவிலுமிருமலும்
கசித்தரோகங் கதறியேநீங்கிடும்
பசித்தபற்பம் பகர்ந்தனர்தேறனே 498

இலிங்க கற்பம்.

தேறன்கூர்மொழி திக்கிலும்பொய்யாது
கூறபற்பங் குறித்திடுமிலிங்கமாம்
தூறமுருங்கைத் துளிர்கருக்குன்றியும்
தீறவரைத்து திறமாய்ச்சிலைசெய்யே 499

செய்குருக்குடந் தெரிந்திடுபற்பமாம்
எய்துதேனி லெழிலாயருந்திட
நைதுமேசுரம் நவிலுமறுபது
நொய்துகாணகந் தொடர்ந்தோடிப்போகுமே 500

### நேத்திராஞ்சனக் கலிக்கம்.

போருந்துத்தம் பொருந்துமுத்துவுடன்
ஆகுஞ்சங்கு வரியரோகணியும்
பாருவெள்ளி பகருமிந்துப்புடன்
வாகுநந்தியின் பூவாலரைத்திடே 501

அரைத்துச்சாம மறுபதுவானபின்
கரைத்துவெண்ணெயில் காலையில்பூண்டிட
திரைத்தபித்தநீர் திரைகண்புகைச்சலும்
மரைத்தகண்ணுணி மறைந்துதானேடுமே 502

### நேத்திராஞ்சன ஸ்தானத்தயிலம்.

ஓடுஞ்சந்தன மூப்புந்தேவதாரம்
நீடுமதுரம் நெருக்குவிலாமிச்சு
கோடுநெல்லிக் குறிக்குஞ்செங்கழனீர்
வாடுமல்லியு வாகாய்மிளகெடே 503

எடுத்துக்கோஷ்ட மெழிலானபிரமியாம்
அடுத்துவாலு மிளகுகசகசா
தொடுத்தப்பத்திரி தோன்றுங்கருஞ்சீரம்
கொடுத்துப்பாலில் குழுறவரைத்திடே 504

அறைத்துயெண்ணெயி லன்பாகக்காய்ச்சியே
கறைத்துமெழுகாய் கருதும்பதத்தினில்
குறைத்துமேவடி கொண்டுகலயத்தில்
முறைத்துமண்டல முற்றுமுழுகிடே 505

முழுகும்போது முறையுப்புகைச்சலும்
அழுகுங்கண்ணி லடர்ந்ததிமைமறை
ஒழுகும்பித்தநீ ரேக்கியமாலையும்
நழுகிகானகம றாடாதுறங்குமே 506

## வாதம் 80-க்கு மருந்து.

உறங்கும்வாத மொழியவெண்பதுக்கு
நிறங்கும்பூரம் நிகழுங்கற்பூரமும்
குறங்குமூலி கொடியவெண்காரமும்
மிறங்குகாரமும் வேண்டிசமன்தூக்கே 507

தூக்கிலிங்கமுந் துய்யவொருபலம்
தாக்கிகெந்தந் தனியவிருபலம்
நோக்கிசூதம் நொருங்கக்கலந்துமே
வாக்குதப்பாமல் வாகாகச்சேர்த்திடே 508

சேர்த்துக்கையான் சிறக்கவிருசாமம்
பார்த்துமேபதம் பாங்காயரைத்திடு
கோர்த்துக்குன்றிபோல் குறிப்பாயுருட்டியே
ஆர்த்துமூன்றுநா ளன்பாய்க்கொடுத்திடே 509

## காக்கைவலிக்கு மருந்து.

கொடுத்திடும்வலி குழலியேயோடதற்
கடுத்தகள்ளியின் கருதியவாளமும்
தொடுத்தகல்வந் துகளவரைத்துமே
அடுத்தமூன்றுநா ளன்பாகயீய்ந்திடே 510

ஈந்தபோது மிறையுங்காக்கைவலி
மாய்ந்துகானக மடிந்துமேயோடிடும்
தோய்ந்துபத்தியந் தோன்றமுப்பாகாது
வாய்ந்துதேரையன் வரைந்தவுண்மையே 511

## கபாலசன்னிக்கு எண்ணெய்.

உண்மைவெள்ளுள்ளி யோங்கியநாபியும்
தண்மையாகிய தண்ணீர்மிட்டான்கிழங்
கண்மையில்லா கருதுஞ்சாம்பிராணியும்
வெண்மையான கற்பூரமுந்தூக்கிடே. 512

தூக்கிவேப்பெண்ணெய் துய்யவருபலம்
தாக்குஞ்சாக்கு தனியவொருபலம்
போக்கில்லாமல் பொருந்தப்பதத்தினில்
வாக்குதப்பாமல் வாகாயிறக்கிடே 513

இறக்கியீச னிணையடிபோற்றியே
உறக்கமண்டல முச்சியில்தேய்த்துமே
திறக்குமாமணக் கெண்ணெயில்மூழ்கிட
பறக்குங்கபோல சன்னிபறந்ததே 514

கபாலபித்தத்திற்குக் கியாழம்.

பறக்கக்கியாழம் பச்சைப்பயருடன்
சிறக்கநெற்பொரி சிறந்தசீனியுடன்
திறக்கச்சுக்குடன் தேர்ந்தமதூரமும்
நிறக்கவில்வமும் நோர்ந்தநிலவேம்பே 515

வேம்புபற்படம் விரும்புகாழிசலம்
காம்புவெற்றிலை கடியவேலமுடன்
சோம்புமோரிடை தோன்றவெடுத்துமே
தேம்புகாலை தெளிவாயருந்திடே 516

அருந்தும்போது வகலுமதமூர்ச்சை
திருந்துமே கபாலவலிபித்தமும்
குருந்துவாயூரல் கொடியபினத்தலும்
தருந்திடாமல் தாணிவிட்டோடுமே 517

மேகம்-21-க்கு மருந்து.

ஓடுமேக முறைந்திடுமோந்தற்கு
ஆடும்பூர மழகியசூதமும்
தேடுலிங்கம் தெளிந்திடுதாரமும்
மோடுகெல்வம் பொருந்தவரைத்திடே 518

அரைத்துத்தேனிலே யன்பாயுருட்டியே
கரைத்துப்பத்துநாள் காலையருந்திட

வரைத்தமேக மறைந்துமேயோடிடும்
நிரைத்தமருந்து சேர்ந்ததுவுண்மையே 519

உண்மைபத்திய மோங்குமிறைச்சியாம்
தண்மைமுருங்கை சாற்றுந்தூதுவளை
வண்மையிஞ்சியும் வருக்குமெலிமிச்சம்
கண்மையெண்ணெய் கடுகுடன்நீக்கிடே 520

தீராத வெள்ளைக்கு மருந்து.

நீக்குமேவெள்ளை நீனிலமாந்தற்கு
பாக்குப்பட்டையில் பகருஞ்சிங்கிதனை
தாக்குகுக்குடம் தனியவிருமுறை
போக்கில்லாமல் பொருந்தவேபூண்டிடே 521

பூண்டபற்பம் புகலும்வெண்ணெய்தனில்
நீண்டமண்டலம் சேரயருந்திடில்
பாண்டுமேகம் பகரும்வெள்ளைப்புண்ணு
மீண்டுபோமென விரும்பியுரைத்ததே 522

கரப்பனுக்கு மருந்து.

உரைக்குமைந்த ருறையுங்கரப்பனுக்
கரைக்கும்பூவரசன் காய்பாலுமுடன்
திரைக்கும்பூராமுந் தேறவரைத்துமே
மரைக்குந்தேங்கா செய்வாகாய்க்கலந்திடே 523

கலந்தயெண்ணெய்க் கருதுங்கரப்பனுக்
குலர்ந்திடாமல் குறிப்புடன்பூசிடு
அலர்ந்திடுஞ்சொரி அலறியேயோடிடும்
மலர்ந்தயெண்ணெய் வகுத்தமுறையிதே 524

விக்கலுக்கு.

முறையும்விக்கலு முற்றும்நடுங்கிட
பறையுமுத்திராட்சம் பாங்கானபற்பமாம்

நிறையுந்தேனினில் நோயருந்திட
குறையும்விக்கல் குடியோடிப்போகுமே 525

வயிற்றிரைச்சல் பேதிக்கு.

போகுமேவயிற் பொருமலிரைச்சலுக்
காகுமிளகு கழறும்பருத்தியும்
பாகுவேலிப் பருத்திசமூலமாய்
ஆகுந்தேனி லறியவேவுண்டிடே 526

உண்டபோது முடலிலிரைச்சலுக்
கண்டபேதி கடியபொருமலும்
அண்டிடாம லவனிவிட்டேகியே
விண்டுமேகடல் விடுபட்டொளியுமே 527

இரத்தக்கடுப்புக்கு.

ஒளியுமிரத்த முடலைவிட்டேகுதற்
களியுமேயெழுத் தாணியிலைதனை
அளியுநெய்யி லளவாய்க்கிளறியே
வளியுமூன்றுநாள் வாகாயருந்திடே 528

மூளை மூலத்திற்கு.

அருந்துமூல மறியவேயோடுதற்
குருந்துகருணை குறிக்கும்பிரமியாம்
வருந்தும்மாரினில் வாகாயரைத்துமே
பொருந்துகாலையில் புகலக்கொடுத்திடே 529

கொடுத்தபோது குமறியேயோடும்
அடுத்தப்பத்திய மானபச்சைப்பயற்
தொடுத்தமுள்ளாக்கி தோன்றுவெங்காயமுண்
வடுத்ததேரையன் வாக்குபொய்யாதிதே 530

இராமபாணம்.

பொய்யாதையா புகலுக்குருமொழி
அய்யாபாண மறைவேன்குளிகையாம்

துய்யாசக்குத் துகளுமிளகுடன்
மெய்யாவெள்ளையை மேவயெடுத்திடே 531

எடுத்துக்குன்றி யெழிலானமூலிகை
தொடுத்துக்கல்வமுர் தோன்றவறைத்துமே
கடுத்தாவியிற் காணவுலர்த்தியே
தொடுத்துமண்டலங் தொகுப்பாகவுண்டிடே 532

கெர்தக ரசாயனம்.

உண்டபோது மொடுங்குஞ்சுரபாணம்
கண்டுகெர்தக் கருதும்ரசாயனம்
பண்டுயேலம் பகருங்கிராம்புடன்
தண்டுபத்திரி தாளிசந்தூக்கிடே 533

தூக்குஞ்சுக்குத் துடியாமொருபலம்
தாக்குதிப்பிலி தனியவிருபலம்
போக்குமிளகு போற்றிடுமுப்பலம்
வாக்குசீரம் வகைநான்குசேர்த்திடே 534

சேர்த்துச்சாதிக்காய் சிறக்கவிருபலம்
பார்த்துவிலாமிச்சு பகருமொருபலம்
கோர்த்துதிப்பிலி கொடியசித்திரமூலம்
தூர்த்துப்பூலாத் துடியாப்பலமெடே 535

எடுத்துச்சீர மெழிலானமுந்திரி
கடுத்துமதுரங் கடியகொத்தமல்லி
தொடுத்துமாஞ்சில் துடர்ந்தபேரீச்சமும்
வடுத்தபாலை வாகனிறுத்திடே 536

நிறுத்திமுள்ளி நெரிஞ்சிநிலப்பனை
கறுத்தபூனை கடியகுங்குமமும்
பொறுத்தகெர்தி புகலுஞ்சரியெடை
முறுத்தசர்க்கரை மூன்றுசேர்கூட்டிடே 537

கூட்டுமேபசும் பாலிலரைத்துமே
நீட்டுதேனினில் நோய்க்குழப்பியே
ஆட்டுமேபத மன்பாய்நறுநெய்யில்
பூட்டுரசாயனம் புகலவெறக்கிடே 538

எறக்கியீச னிணையடிபோற்றியே
முறக்கமண்டல முற்றும்பொசித்திடில்
திறக்கவாதமுந் தீராதபித்தமும்
பறக்குங்கிராந்தி பதினெட்டுசூலேயே 539

சூலேகுன்மஞ் சொரிபாண்டுசோகையும்
வாலேரோகம் வழங்குஞ்சயரோகம்
மேலேகிரந்தி மேவியபாண்டுவும்
சோலேகானகந் துடாந்துமேயோடுமே 540

ஓடும்பத்திய முற்றபுளியாகா
ஆடும்பயறு அரியதுவரையாம்
நீடுமுருங்கை சேர்ந்தகத்திரியும்
தேடுமேபசும் பாலுநெய்யாகுமே 541

சகலவலிக்குமருந்து.

ஆகும்லிங்க மரியவுரைக்கிறேன்
வாகுப்வீரம் வகுக்கும்வெடியுப்பு
பாகுபூரம் பகருமரிதாரம்
நீகுமேமுலைப் பாலிலரைத்திடே 542

அரைத்துமெழுகா யன்பாயுருட்டியே
கரைத்துதேனில் கருதுங்குன்றியிடை
நிரைத்துமண்டலம் நோயருந்திடில்
வரைத்துமேவலி வாரிதியோடுமே 543

ஓடும்வாயு முறையும்பிறவீச்சு
நீடுஞ்சன்னி நெருங்குமுசல்வலி
கூடுரோகங் குலைந்துதானோடிடும்
தேடுமுப்பு புளிபுகைதள்ளிடே 544

## பரங்கிப்பட்டை லேகியம்.

தள்ளடா பரங்கிப்பட்டைலேகியம்
கொள்ளடாசங்கங் குப்பியொருபலம்
அள்ளடாவோம மரத்தைலவங்கமும்
விள்ளடாகோஷ்டம் விரும்பியேதூக்கிடே 545

தூக்கிப்பரங்கித் துய்யசமனெடை
தாக்கிசர்க்கரைத் தனியநறுநெய்யும்
போக்கில்லாமல் பொருந்தக்கிளறியே
நோக்கிமண்டலம் நினைவயருந்திடே 546

அருந்துபோது மகலும்பிரமியம்
திருந்துகுஷ்டமுந் தீராதவெள்ளையும்
வருந்துரோகமும் வாயூரல்மந்தமும்
பொருந்திடாமல் புகலவேநீக்குமே 547

## மகா சீரகச் சூரணம்.

நீங்குஞ்சூரணம் நெருங்கியசீரகம்
ஓங்குமேல முறையுமதூரமும்
தீங்கில்லாபழச் சாற்றினினூறவை
பாங்குமேகிழல் பதமாயுலர்த்திடே 548

உலர்த்திச்சீனியு மொன்றாய்ச்சமனிடை
கலர்த்திமண்டலங் காலைபருந்திட
பிலர்த்தப்பித்தம் பிரண்டுமேயோடிடும்
அலர்த்தகாங்கை யலறிடுங்கண்டிடே 549

## அரிதார பற்பம்.

கண்டிடுமரிதார பற்பமுறை
விண்டுதேரையன் விரும்பியுரைக்கிறேன்
கண்டுச்சுண்ணம் கவினுமரிதாரம்
பண்டுசீலைப் பதியப்பொதிந்திட் 550

பொதிர்துருக்குடம் போட்டிடபற்பமாம்
வதிந்துநெய்யினில் வாகாயருந்திட
சதிர்ந்தகாசமுந் தங்கியரோகமும்
பொதிர்தவிஷமும் போக்கியேயோடுமே 551

## ரோகாதிக் குளிகை.

தும்ரோக மூடலில்மானிடற்கு
தேடுங்கெந்தி திறமாயிருபலம்
ஆடுமிளகு அரியவொருபலம்
போடுஞ்சுக்குப் பொருந்தப்பலமெடே 552

எடுத்துவெல்லா மெழிலாயரைத்துமே
தொடுத்துப்பத்துநாள் துய்யவருந்திடு
கடுத்தக்குன்மமுங் கதறியேயோடிடும்
வடுத்ததேறையன் வாக்குப்பொய்யாதிதே 553

## பித்தப்பயித்தியற்கு பற்பம்.

பொய்யாதையா புகலுங்குழுமொழி
அய்யாதேறனு மன்பாயுரைக்கிறேன்
தொய்யாவண்டமுந் தோன்றுசிற்றண்டமும்
மெய்யாவண்டக் கருவாலரைத்திடே 554

அரைத்துக்குக்குட மன்பாகப்பூண்டிடு
நிரைத்துபிஞ்சியில் நிகழ்த்திடுமண்டலம்
முரைத்துக்காலையில் முசியவேயுண்டிடில்
வரைத்தப்பித்தம் வகன்றோடிப்போகுமே 555

## ஆக்கிராணம்.

போகுமாந்தர் பொருந்துமாக்கிராணம்
ஆருங்கத்திரி யரியசித்திரமூலம்
எருமழிஞ்சி யெழிலானதோடையும்
வாருகஸ்தூரி வாகாய்ச்சுருட்டிடே 556

சுருட்டிசீலையில் தூய்யப்புகைபிடி
மருட்டுபித்த மதிக்கும்பீனசமும்
தொருட்டுமண்டை திரளுங்குத்துமுதல்
உருட்டும்வியாதி யுறங்கிடுங்கண்டதே 557

சகல ரணங்களுக்குப்புகை.

கண்டவாயு கடியரணங்களும்
ஒண்டிடாம லுடலைவிட்டேகுதற்
குண்டுக்கற்சுண்ணங் கொடியநவாச்சாரம்
விண்டுமேகள்ளிப் பாலாலரைத்திடே 558

அரைத்துச்சீலையி லன்பாலூட்டியே
விரைத்துவெயிலில் விரையுடன்காயவை
முரைத்துத்திரித்து முயலுந்திரிதனை
திரைத்துகாசியில் திறமாய்ப்பிடித்திடே 559

பிடித்தபோது பிடிசூலைமேகமும்
கடித்தரோகங்கள் கண்ணும்பவுத்திரம்
வடித்தசீழும் வருக்கும்ரணங்களும்
வெடித்துக்கானக மிரண்டோடிப்போகுமே 560

சூட்டுக்கு யெண்ணெய்.

போகுமெள்ளெண்ணெய் போற்றுமரைப்படி
ஆகுந்தாமரை யரியகீழாநெல்லி
வாகும்பூலா வகைக்குச்சமனதாய்
பாகுமாமணக் கெண்ணெய்சரிகூட்டே 561

கூட்டியொன்றாய்க் குலாவியரைத்துமே
பூட்டிப்பாண்டம் புகலக்கலக்கியே
ஆட்டிமெழுகா யன்பாயிறக்கியே
மூட்டமண்டல முற்றமுழுகிடே 562

முழுகும்போது முதிர்ந்தசூடுகள்போம்
அழுகுமேனி யதிகுளிர்ச்சியாம்
புழுகுவாசனைப் போலவேவீசிடும்
தொழுகுந்தேரையன் தேர்ந்துவுரைத்ததே 563

வைத்திய முப்பு.

உரைத்தசூத்திர மொன்றுபொய்யாதுகாண்
நிரைத்தமருந்து நோயுரைக்கிறேன்
அரைத்தமுப்பு அறைவேன்மானிடற்கு
குரைத்தசித்திரைப் பங்குனிபார்த்திடே 564

பார்த்துச்சீனம் பகரும்வெடியுப்பு
கோர்த்துவிந்துடன் கூறுஞ்சவுக்காரம்
ஆர்த்துக்கல்லுப்பு அரியதோர்வீரமும்
தீர்த்துமுத்தீட்சை தீறயெரித்திடே 565

எரித்துச்சுன்ன மெழிலாயெடுத்துமே
கரித்துச்சரக்கு கருதுமறுபதும்
முரித்துக்கவச முனையாகப்பூண்டிடு
தெரித்தசரக்குத் திறமாயிறுகுமே 566

பிளாஸ்திரி.

இறுகுமோரண மெழிலாய்ப்பறப்பதற்
குறுகுங்குக்கிலி யரசபூரமும்
நிறுகுவீரமும் நேர்ந்தவிளக்கெண்ணெய்
உறுகுந்தீயி லுறவாய்க்கிளறிடே 567

மேகராசாங்க எண்ணெய்,

கிளறியோரணங் கெட்டியாய்ப்பூண்டிடு
உளறுமேக ராசாங்கமறைகிறேன்
அளறுமோரண்ட வெண்ணெயொருநாழி
தளறுபிரமியின் சாறுமெடுத்திடே 568

எடுத்துக்குமட்டி யெழிலானகையாலும்
அடுத்துமுப்பிரமி ஆனவல்லாரையும்
தொடுத்துசெருப்படை தோன்றுகருநெல்லி
வடுத்துவாதொண்டை வாகாகத்தூக்கிடே 569

தூக்கிகொச்சித் துகளுமாவாரையாம்
தாக்கிவேம்பு தனிநிலவாகையும்
நோக்கிவாசன் நொருக்குஞ்சங்கக்குப்பி
வாக்குதப்பாமல் வாகாகச்சேர்த்திடே 570

சேர்த்துவெண்காரந் துய்யவொருபலம்
தூர்த்துமதுரந் தோன்றுமரைப்பலம்
கூர்த்துசீரங் கொடியகருஞ்சீரம்
பார்த்துதாளிசம் பாங்காகக்கூட்டிடே 571

கூட்டிதாளிசங் குறிப்பாயரைப்பலம்
மாட்டிவிடைய மதிப்பாய்சமபலம்
நீட்டிமாஞ்சில் நெருங்கவொருபலம்
தீட்டியானை திறமாம்பத்திரியே 572

திரியாய்காரந் திரிகடுவோமமும்
சொரியாம்பரங்கிப் பட்டையறுபலம்
வரியாஞ்சாரம் வருக்குமெவச்சாரம்
சரியாமெள்ளெண்ணெய் சரியாய்கலந்திடே 573

கலந்துவெண்ணெய்க் கணபதிபோற்றியே
சலந்தனிற்பூசை சதுராய்முடித்துமே
பெலந்துமண்டலம் பிரியமாயுண்டிடு
அலந்துபத்திய மன்பாகவுண்டிடே 574

உண்டபோது முடலில்மகாரோகம்
அண்டவாயு வபானபவுத்திரம்
கொண்டசூலை கொடியகற்பிணியும்
விண்டமேகம் விரைந்துதானோடுமே 575

வயிற்முறுக்கல்சத்திக்கு.

ஓடுபேவயி ருற்றமுறுக்கலுக்
காடுஞ்சீரகம் கருதுமேலமுடன்
நீடுநெற்பொரி சேர்ந்தசீனியுடன்
கூடுஞ்சுக்கு குறிப்பாயெடுத்திடே 576

எடுத்துமேகொத்த மல்லிசமனெடை
விடுத்துக்கியாழ மேவவருந்திடில்
அடுத்தசத்தி யடிமுறுக்கல்வயிற்
தொடுத்தவாந்தி தொடர்ந்தோடிப்போகுமே 577

வயிற்கொட்டலுக்கு கிராணிக்கு.

போகுமேவயிற் பொருமல்கிராணியும்
ஆகும்கிராம்பு அரியலவங்கமும்
நீடும்பட்டை நிகழுங்கடுக்காய்ப்பூ
வாகுஞ்சூரணம் வகுப்பாயருந்திடே 578

அருந்தும்போது அறையுங்கிராணியும்
திருந்துமேவயிற் றிருகிக்கொட்டல்களும்
குருந்துகடுப்பு கொடியமுறுக்கலும்
பொருந்திடாமல் புவிவிட்டுவோடுமே 579

அதிசார பேதிக்கு.

ஓடுமேயதி சாரமுடையவற்
காடுமாங்கொட்டை கருதும்பருப்புடன்
நீடுங்கசகசா சேர்ந்தசுக்குமுடன்
கூடுமேபழச் சாற்றலரைத்திடே 580

அரைத்துமைபோ லழகியாதமாம்
கரைத்துநெய்யில் கடியளவுண்டிட

சொரைத்தபேதி சொருங்கியேயோடிடும்
திரைத்ததேறன் தெளியசெப்பினதே 581

## தீராத படைக்கு.

செப்புமாவாரை தேர்ந்தபஞ்சாங்கமாம்
ஒப்பும்பறங்கி யுற்றசூரணமாம்
தப்பில்லாமல் தனியக்கலந்துமே
வெப்பில்லாமல் விரும்பிசீனியுண்ணே 582

உண்ணும்பேர்து முடம்புப்பட்டைரோகம்
கண்ணுஞ்சொரியும் காடாதுறங்கிடும்
குண்ணுமேனி குழவியேதங்கமாம்
எண்ணுந்தேற னெழிலாயரைந்ததே 583

## வார்திக்கு.

அறையும்வார்தி அலறியேதான்விழ
குறையுந்துருசு கொடியகல்லுப்புடன்
நிறையுமொன்றாக நேர்மையாயுண்டிடு
பறையும்வார்தி பாரில்விழுங்கண்டிரே 584

## வாய்நீருகலுக்கு.

கண்டீர்வாயில் கருதுங்கக்கலுக்கு
உண்டுசுக்கு முயன்றயேலமுடன்
அண்டுசீரக மரியசீனியுடன்
தொண்டுநெய்யில் துகளவேவுண்டிடே 585

உண்டபோது முறையும்வாயூறலும்
கண்டபித்தங் கதரியேயோடிடும்
அண்டநோயு மகலவேநீங்கிடும்
விண்டுதேறயன் விரும்பியுரைத்ததே 586

## கரிவங்க பற்பம்.

உரைக்கும்வங்க முசல்மூலிதன்னிலே
கரைக்கும்வாலு மிளகுசரியெடை

நிறைக்கும்வங்கம் நிகழவேபூண்டிடு
திரைக்குஞ்சிலைத் திறமாகச்செய்திடே 587

செய்துருக்குடந் திறமாகப்போட்டிடு
வைதுபற்பம் வகையாகருசெய்யில்
கொய்துமண்டலங் குறிப்பாயருந்திடிற்
பெய்துமேகம் பிராண்டோடிப்போகுமே 588

போகும்பத்தியம் பொருந்தும்பொன்னுங்கண்ணி
ஆகும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
தாகுவெந்நீர் தனியசுறுசெய்யும்
பாகுவெல்லமும் பாங்காகத்தின்றிடே 589

பருவுகளுக்கு மருந்து.

தின்றபோதுமே தீரும்பருவுக்கு
தன்றுவீரம் சவிலுஞ்செங்காவியும்
குன்றுவாய்நீரால் குழுறவரைத்திடு
வென்றுதேறயன் விரும்பியறைந்ததே 590

சூதகெந்தி தாம்பர செந்தூரம்.

அறைந்ததாம்புர மரியவொருபலம்
நிறைந்தகெந்தி நெகிழுமிருபலம்
உறைத்தசூத முனையாய்சமபலம்
கரைத்தமேபழச் சாற்றாலரைத்திடே 591

அரைத்துமேயில்லை யழகாகக்கட்டியே
நிறைத்துகெசபுடம் நேராகப்பூண்டிடு
திரைத்தசெந்தூரம் தேர்ந்தகுங்குமமாம்
பரைத்துமேபுடம் பத்துமேபூண்டிடே 592

பூண்டபோது புகலுஞ்செந்தூரத்தை
நீண்டுமண்டலம் நேராயருந்திடில்
கூண்டுகுஷ்டங் குறைபதினெட்டுமே
ஆண்டுக்குள்ளாக வகன்றோடிப்போகுமே 593

போகவனுபானம் புகழ்ந்துவுரைக்கிறேன்
வாகாய்திப்பிலி வன்பறங்கிப்பட்டை
தோகாய்சீரகந் தோன்றும்பனவெல்லம்
வேகாவெண்ணெயில் விரும்பிக்கொடுத்திடே 594

## ஊஷ்ணக்கிரகம்.

கொடுத்தபோது குரித்திடுமூஷ்டணம்
அடுத்தசீர மகனுந்திப்பிலியும்
விடுத்தகாயம் விரும்புரோசனையும்
படுத்தவோமமும் பாங்காகத்தூக்கிடே 595

தூக்கிலவுங்கர் துய்பசமனெடை
தாக்கிச்சூரணந் தனியப்பொடித்துமே
போக்கில்லாமல் பொருந்தும்பனவெல்லம்
நோக்கிநெய்யில் நுகலக்கிளறிடே 596

கிளரிமலகந் கெடிப்பிரமாணமாய்
தளரிடாமலே தாக்கிடுவாறுநாள்
குளறுமூஷ்ணங் குடிவிட்டுயேகியே
வளறுகானகம் வாடியுறங்குமே 597

## நீரடைப்புக்கு.

உறங்குமார்த ருறையுநீரடைப்புக்
கறங்கும்வெண்மதி கருதும்வெண்காரமும்
திறக்கும்வாழைநீர் தேர்ந்தசலத்திலே
துறந்துவாறுநாள் தோன்றக்கொடுத்திடே 598

கொடுத்தபோது குறியிலடைக்குநீர்
தடுத்திடாமல் தரணியில்தான்விழும்
தொடுத்தபத்தியந் தோன்றும்பசுமோராம்
வடுத்ததேரையன் வாக்குபொய்யாதிதே 599

## அஷ்டக் குன்மத்திற்கு

பொய்யாதய்யா புகலுங்குருமொழி
அய்யாதேற னறைவேன்குன்மத்திற்கு
துய்யாமேனியுந் தோன்றுங்கையானுடன்
மெய்யாய்மதுர மேவிடக்கூட்டிடே 600

கூட்டிக்கிராம்பு குறிக்கும்பர்ப்படகம்
நீட்டிவெள்ளுள்ளி நேரும்பெருங்காயம்
மாட்டிவெல்ல மதிக்குநறுநெய்யில்
பூட்டிலேகியம் பொருந்தவருந்திடே 601

அருந்துமண்டல மானதின்தன்பிற
குருந்துதயிலங் குறிப்பாகத்தேய்த்திட
திருந்துவேம்பு திரைக்குநன்னாரியும்
பொருந்துமதுரம் போற்றுஞ்சரியாமே 602

ஆமேகஸ்தூரி யரியதேவதாரம்
தாமேபூலாவு தனியலவங்கமும்
வாமேநெருஞ்சி வகுக்கும்கோறையுடன்
பேரமேமேனியும் பொருந்தவேதூக்கிடே 603

தூக்குஞ்சாக்கு துய்யசடனெடை
தாக்குமேபசும் பாலிலரைத்துமே
வாக்குதப்பாமல் வன்பாண்டத்தூற்றியே
போக்கில்லாமல் பொருந்தவேகாச்சிடே 604

காச்சிமாயன் கணபதிபோற்றியே
மூச்சிடாமல் முழுகுமோர்மண்டலம்
போச்சுபத்தியம் பொருந்தும்புளியாகா
ஆச்சுமாய்கை அனத்தையுந்தள்ளிடேன் 605

## கபோலபீனச சன்னிக்கு முக்கூட்டு சிகிட்சா பரிகாரம்.

தள்ளிடா கானகத்துவுரைத்தகா
வுள்ளிடாபட்டை வுசிலத்துளிருடன்

கொள்ளிவேளை கொழிஞ்சியாவாரையாம்
விள்ளிடாமல் விழிதிசமன்கூட்டிடே 606

கூட்டிபொன்றுய் குலவுமாமணக்கு
ஆட்டிவெள்ளேண்ணெய் யரியனறுசெய்யும்
மாட்டியொன்றுய் மருவக்கலக்கியே
பூட்டிபாண்டம் பொதியவிறக்கிடே 607

இறக்கிமாய னெழிலடிபோற்றியே
உறக்கமண்டல முற்றுமுழுகிட
திறக்ககபோல தேர்ந்தபீனசம்போம்
சிறக்கதேரையன் தேன்மொழிபொய்பாதே 608

ருத்திராங்க சன்னிக்கி தயிலம்.

பொய்யாதையா புகலுங்குருமொழி
அய்யாவேறே மருந்துவுரைக்கிறேன்
செய்யாகொம்பு சிறந்தவறக்குடன்
துய்யர்மதுரம் தோன்றவேகூட்டிடே 609

கூட்டும்காவி குலவும்வசுவாசு
நீட்டுஞ்சந்தணம் னேரும்பொரிகாரம்
கூட்டுமெகிலின குறிப்பானபற்பாடம்
மாட்டுமேபசும் பாலிலரைத்திடே 610

அரைத்துயெண்ணெயி லன்பாய்கலக்கியே
முரைத்துயீசனை முனையடிதாள்பணிந்
திரைத்துப்பதமாய் தீறவேகாய்ச்சியே
வரைத்துமண்டலம் வாகாய்முழுகிடே 611

முழுகும்போது முறங்குஞ்சன்னிகளும்
அழுகுஞ்சீதள மலறியேயோடிடும்
ஒழுகும்பீனச முயன்றுமேகேக்கிடும்
வழுகும்பத்தியம் வாகாகவுள்ளிடே 612

## கண்டமாலைக்கு.

உண்டபோது முறையுங்கண்டமாலை
அண்டிடாம லவனிவிட்டோடுதற்
கண்டங்கத்திரி கருதுசமூலமாம்
தண்டமேபுகை தயவாய்ப்பிடித்திடே 613

பிடித்தபோது பிறக்குங்கண்டமாலை
கடித்தவிஷமுங் கருதியரோகமும்
நடித்தப்பல்விஷம் நாற்றமுமீளையும்
துடித்துப்போமென செப்பினர்தேறனே 614

## கூழ்ப்பாண்டக் கிரதம்.

தேறன்சொல்மொழி திசைநான்கும்பொய்யாது
கூறமருந்து குறிப்பாயுரைக்கிறேன்
நீறக்கூழ்ப்பாண்டந் திறமாய்ப்படிநாலு
நீர்மோர்பசும் பாலுமெடுத்திடே 615

எடுத்துத்தேனு மெழிலாகநெய்யும்
அடுத்துமதுர மானலவுங்கமும்
தொடுத்தப்பத்திரி தோன்றுமிருசீரம்
விடுத்துக்கோஷ்ட்டம் விரும்பும்விலாமிச்சே 616

விலாமிச்சோடு விளங்கும்வாலுளுவை
துலாவுமொக்கு துடியானசாதிக்காய்
குலாவுதிப்பிலி கூறுமிளகுடன்
புலாவுசீனியும் பூணவேதூக்கிடே 617

தூக்கிப்பாண்டந் துடியாய்க்கலந்துமே
தாக்கிக்கிரதந் தனிப்பதமாகவே
போக்கில்லாகல் புகழுங்கழற்சிக்காய்
வாக்குதப்பாமல் மண்டலமுண்டிடே 618

உண்டபோது முடலில்சயரோகம்
கண்டுமேதந் கணக்காச்சலகன்றிடும்

பண்டுமேனி பருந்துமேபுஷ்ட்டியாம்
விண்டுதேறன் விரும்பியுறைத்ததே 619

அதிசார கிராணிக்கு.

உரைத்தசார கிராணியொதுங்கிட
நிரைத்தவேம்பு நிலப்பனைசாதிக்காய்
குரைத்தலவங்கங் கூறுங்கடுக்காய்ப்பூ
திரைத்தப்பட்டை திறமாய்ச்சமன்சேரே 620

சேர்த்துவாலு மிளகுகசகசா
பார்த்துமோரிடைப் பாங்காயெடுத்திடு
ஆர்த்துமேபசும் பாலிலரைத்திடு
தீர்த்துமெழுகாய் திறயொக்கிடே 621

ஏறக்கிவீச னெழிலடிபோற்றியே
முறக்கமண்டல முற்றுங்கொடுத்திட
திறக்கமாகிய தேர்ந்தவதிசாரம்
பறக்குமென்றல்லோ பாடினர்தேறனே 622

சிங்கிபற்பம்.

தேறன்பற்பம் தெளிவாயுறைக்கிறேன்
கூறகாய்மலங் குறிக்குமிருபலம்
தீரகெந்தி திறமாய்சமபலம்
மாறக்கவசம் வகையாகப்பூண்டிடே 623

பூண்டுசீலைப் பொருந்தவேமாட்டிடு
தூண்டுகுக்குடக் திறமாகப்போட்டிடு
நீண்டபற்பமாம் கோரகயடுத்திடு
கூண்டுதேனில் குறிப்பாயருந்திடே 624

அருந்தும்போது அறையுங்கண்டமாலை
திருந்துமேகந் தீராப்பிணியறும்
பொருந்துவெள்ளையும் பொங்கியேநின்றிடும்
குருந்துமேமுறைக் குறிப்பாயறைந்ததே 625

பிள்ளை மாந்தபேதிக்கு மருந்து.

அறையும்பிள்ளை யகலவேமாந்தமும்
குறையுமோமங் குறிக்கும்வசம்புடன்
நிறையும்வாலு மிளகுகசகசா
பறையுமேமுலைப் பாலிலரைத்திடே 626

அறைத்துமைபோ லழகாய்க்கலக்கியே
கரைத்தமருந்தைக் காலையில்தானீய
முரைத்தபேதி முயன்றுமேயோடிடும்
திரைத்ததேறன் தெளிந்துசெப்பினதே 627

செரியாக் குணத்துக்கு.

செப்புமாந்தர் செரியாக்குணத்திற்கு
ஒப்பும்பேதி யுறையுங்கல்லுப்புடன்
தப்பிலாமல் தனிப்பழச்சாற்றிலே
கப்புமேபுடங் கணக்காகப்பூண்டிடே 628

பூண்டுமேபுடம் புகலுமறுபது
நீண்டுசெந்தூரம் நேர்மையாயுண்டிடே
தீண்டுபத்தியந் திறமாம்புளியாகா
பாண்டுமேசெரி யாக்குணம்நீங்குமே 629

சர்வமேகத்திற்கு லேகியம்.

நீங்குமேகம் நெருங்கியேயோடுதற்
காங்குமிளகு கருதுங்கசகசா
வாங்குகசகசா வகைக்குச்சரியெடை
தாங்குபேபூனைக் கால்விதைசேர்த்திடே 630

சேர்த்துப்பதமாய் சிறக்கவறுத்துமே
பார்த்துச்சீனியும் பாங்காய்ச்சரிசமன்
தூர்த்துலேகியந் துய்யநறுநெய்யும்
ஆர்த்துப்பதமா யன்பாய்க்கிளறிடே 631

ளெறிமண்டலங் கெட்டியாய்த்தானுண்ண
அளறுமேக மலறியேயோடிடும்
தளறுமேனி தடித்துயிறுகிடும்
யளறுலேகியம் பாங்காகவுண்டிடே 632

உண்டபோது முரையாமரையாப்பு
கண்டமாலே கதறியேயோடிடும்
அண்டவாயு வபானபௌத்திரம்
துண்டரிணங்கள் துடித்தோடிப்போகுமே 633

போகும்வெள்ளை பொருந்துங்குருதிப்புண்
ஏருக்கிரந்த பெழில்ரணஞ்சிலந்தியும்
வாகுஞ்சூலே வருக்கும்யோனிப்புற்று
பாகுமார்த்தாண்டன் பனிபோலேநீங்குமே 634

நீங்குபத்தியம் நேரிழையேகேளும்
பாங்குமுருங்கை பகரும்பசும்பயர்
ஓங்கும்வெள்ளாட்டு யிறைச்சியுப்புக்கண்டம்
தீங்கில்லாமல் திறமாயருந்திடே 635

சன்னிமுதல் தலைமயக்கம் வேர்வைக்கு.

அருந்தும்போது அரையுமொருபாகம்
திருந்துலவங்கந் திறமானநேருகணி
பொருந்துமேகம் போற்றுஞ்சமனெடை
குருந்துமூன்றையுங் குறிப்பாய்வறுத்திடே 636

வருத்துசூரணம் வாகாயெடுத்திடு
திருத்துசந்தன நேருங்கலேக்கொம்பு
குரித்துப்பேசுபின் கூராயரைத்திடு
தெரித்தவெந்நீரில் திறமாய்க்கொடுத்திடே 637

கொடுத்தபோது குரிக்குந்தலைவேர்வை
அடுத்தசன்னியும் அலறியேயோடிடும்
நடித்தபித்தம் நகிலுமயக்கமும்
வெடித்தமூர்ச்சை விரண்டோடிப்போகுமே 638

வேறுபுகை இதுவுமது.

போகும்வேது பொருந்துவியாதிக்கு
ஆகுஞ்சந்தனமரைப்பலஞ் சாம்பிராணி
வேகுஞ்சிலையிற் விரும்பசருட்டியே
போகுமேபுகை புகழப்பிடித்திடே 639

பிடித்தபோது பொருமலிரைப்புகள்
அடுத்தபகலினி லகன்றுவோடிடும்
கடுத்தபத்தியம் கடுகெண்ணெய்தானுகா
வடுத்ததேரையன் வாக்குசொல்லாமதே 640

சிகடி தயிலம்.

சொல்லுமாந்தர் தொடருமேகமற
வெல்லுஞ்சிகடி விரும்புந்தயிலங்கேள்
கொல்லுமாமணக் கெண்ணெயாழாக்குமே
புல்லும்பாண்டம் புகலவடித்திடே 641

வடித்துசேங்கொட்டை வாகாயிருபலம்
நடித்துவெண்ணெயில் நன்றாய்நருக்கியே
வெடித்தகெந்தி விரும்புமொருமாசா
நடித்துமூன்றையும் நன்றாய்த்தூள்செய்திடே 642

செய்புஞ்சூரணம் சிறக்கக்கலக்கியே
எய்புங்கமல மெழிலாயெரித்திடு
உய்யுங்கணேசன் உத்தமன் தாள்பணி
பய்யபோற்றி பதமாயெடுத்திடே 643

எடுத்துக்கம்மாரு யெழிலானவெற்றிலை
அடுத்துத்துளசி யாருபத்திரியில்
கொடுத்துமாந்தர் குலாவுமிருதுளி
தடுத்திடாமல் தனியஞ்சமுண்டிடே 644

உண்டபோது முறையும்பெருவயற்
கண்டமாலை கரியபுரைகுழல்

அண்டரோயு மகலும்புவிவிட்டு
தெண்டன்தேரையன் திறமிதுபார்த்திடே 645

## கண்ணோய் தொண்ணூற்றுறுக்கு மருந்து.

பார்த்துவிந்துப்பு பகருதிப்பிலியும்
சேர்த்துரோகணி தேர்ந்தபவளமும்
ஊர்த்துவெள்ளியு முற்றராவடமு
கார்த்துப்பொன்னுங் கருதுமுத்துமெடே 646

எடுத்துத்துத்த மெழிலானகற்கண்டு
அடுத்துசுந்தியா மட்டப்பூச்சாற்றினல்
தொடுத்துமூன்றுநாள் துவளவரைத்துமே
கடுத்தநேத்திரங் கடுகவேபூண்டிடே 647

பூண்டபோது புகலும்புழுவெட்டு
ஆண்டுதீரா வகலுங்நேத்திராஞ்சனம்
நீண்டபாய்ச்சல் நெருங்குந்தசைவள
மாண்டுகண்ணோய் மதிகெட்டுவோடுமே 648

## கண்ணோய் தொண்ணூற்றுறுக்குத் தயிலம்.

நூடுங்கண்ணோ யுறையுந்தயிலங்கேள்
ஆடுமெதுர மரியக்கஸ்தூரியாம்
தேடுஞ்சந்தனம் தெறிக்குந்தேவதாரம்
கூடுங்கோரைக் கிழங்குசமன்தூக்கே 649

தூக்குகத்திரி தோன்றுங்கருஞ்சீரம்
தாக்குநற்சீரந் தனியலவங்கமும்
போக்கில்லாமல் பொருந்துமிளகெடு
வாக்குத்தப்பாமல் வால்மிளகூட்டிடே 650

கூட்டுவேலி குலவும்விலாமல்லி
நீட்டுமேபசும் பாலிலரைத்திடு
பூட்டும்பச்சிலை புகலும்வழுதலை
தீட்டுங்கையான் தகரைச்சாற்சேர்த்திடே 651

சேர்த்துமூலிகை சிறக்கச்சமனெடை
பார்த்துவெண்ணெய் பகருஞ்சமனெடை
கோர்த்துவொன்றாய்க் குறுகக்கலக்கியே
வார்த்துப்பாண்டத்தில் வாகாகக்காய்த்திடே 652

காய்த்துயீசன் கணபதிபோற்றியே
சாய்த்துப்பாண்டக் தனியவடிகட்டி
தேய்த்துமண்டலங் திறமாமுழுகிடில்
நோய்த்துக்கண்ணோப் நொருங்கியேயோடுமே 653

## திரேகம் சில்லிட்டால் சீதளத்துக்கு மேல்மருந்து.

நீடுமாந்த குறையுஞ்சீதளத்துக்
காடுங்கற்பூரங் கடியமஞ்சத்தூளும்
நீடுங்காணம் நெருங்குபழச்சுன்னம்
போடுமோமம் பொருந்தச்சமன்தூக்கே 654

தூக்கியொன்றாய்த் துகளப்பொடித்துமே
தாக்கிப்பாண்டக் தனியவறுத்துமே
போக்கில்லாமல் பொருந்தவேதேய்த்திடு
வாக்குத்தேரையன் வன்மொழிபொய்யாதே 655

## பக்கசூலைக்கு.

பொய்யாதையா புலவன்குருமொழி
அய்யாதேரைய னன்பாயுரைக்கிறேன்
மெய்யாசூலை விளம்புப்பக்கசூலை
தையாள்குமரிச் சாறுமெடுத்திடே 656

எடுத்துச்சிங்கி யெழிலாயரைத்துமே
தொடுத்துமேய யப்பாண்டத்தில்காய்ச்சியே
படுத்துமேற்புறம் பக்கசூலையன்ரை
கொடுத்துவுள்ளுள் குழுறவேவுண்டிடே 657

அஷ்ட குன்மத்துக்கு.

உண்டதேரைய னுறுதிமொழியிது
கண்டகுன்மங் கதறியேயோடுதற்
கொண்டவெண்மதி கூறுஞ்சீனக்காரம்
அண்டவோடி லரைப்பொதிந்திடே 658

பொதிந்துமண்சிலை போற்றுகசபுடம்
சதிந்துவெந்து சருகியவெண்ணீறும்
வதிந்துவெண்ணெயில் வாகாகவுண்டிட
அதிந்துமண்டல மலறிப்பறக்குமே 659

பறக்குமேகம் பகரும்வெள்ளைப்புண்ணு
சிறக்குங்கிரந்தி சிறும்பறங்கிப்புண்
திறக்குங்குன்மமுந் தீராப்பிணிகளும்
பறக்குமென்றல்லோ பாடினன்றேறனே 660

பறங்கிப் புண்ணுக்கு.

தேறன்வாக்குத் திசையிலும்பொய்யாது
கூறமருந்து குறிக்கும்ரசப்பூரம்
தீரகெந்தியுந் தேர்ந்தரசபறபம்
ஆறமுக்கண் கனியுமெடுத்திடே 661

எடுத்துப்பாலு மெழிலானவெல்லமும்
தொடுத்துலேகியந் தோன்றக்கிளறிடு
அடுத்துமண்டல மன்பாகவுண்டிட
கடுத்துப்பறங்கிப்புண் கதறியேயோடுமே 662

குன்மக்குடோரி.

ஓடுங்குன்ம முறையுமரிதாரம்
நீடுங்கெந்தியு நேரானபூரமும்
கூடுகாயிக் குலவுங்கிரிக்டு
தேடுந்திரிபலைத் தீரச்சமன்றூக்கே 663

தூக்கிவாளமுந் துய்யசமனெடை
தாக்கியிஞ்சியின் சாற்றாலரைத்திடு
போக்கில்லாமல் பொருந்தக்குன்றியிடை
வாக்குதப்பாமல் வாதாயருந்திடே 664

அருந்துகுன்மமு மறையும்பெரும்பாடு
திருந்துபாண்டுடன் தீராப்பிணியறும்
குருந்துவெட்டையுங் கூறுபிரமியம்
வருந்துரோகமும் வரண்டோடிப்போகுமே 665

சுரக் குளிகை.

போகுமேசுரம் பொருமலீளையற
ஆகுஞ்சூத மரியமனோசிலை
வாகுந்தாளகம் வரையும்வெண்காரமும்
பாகுங்கெந்தி பகருந்திரிகடே 666

கடுகுவாளங் கருதுங்கரிப்பான்சாற்
மடுகுமேயூறல் மாட்டியிடித்திடு
படுகுவெல்லம் பகருமிஞ்சிரசம்
முடுகுமண்டல முற்றும்பொசித்திடே 667

பொசிக்கப்பீலிகை பொருமலிரைப்புகள்
நசிக்குமீளையு நாற்றக்கவுச்சுகள்
வசிக்குமாந்தமும் வறுபதுகரங்களும்
மசிக்குநோய்களு மலறிப்பறக்குமே 668

சகல சம்பிரதாயச் சூரணம்,

பறக்குஞ்சூரணம் பகருஞ்சம்பிரதாயம்
நிறக்குங்காந்த நெரியகெந்தகமும்
திறக்குமயப்பொடி தேர்ந்தசமனெடை
உறக்குங்கற்றாழைச் சாற்றாலரைத்திடே 669

அறைத்துவெய்யலி லன்பாயுலர்த்தியே
வரைத்துச்சூரணம் வாகாய்ப்பொடித்திடு
குரைத்துச்சர்க்கரை கூறக்கலந்திடு
பரைத்துமண்டலம் பாங்காகவுண்டிடே 670

உண்டபோது முறையும்பெருவயிற்
கண்டமாலை கதறியேயோடிடும்
அண்டவாயு வபானமுறுக்கலும்
கொண்டகுன்மமுங் குழவியேயோடுமே 671

காரீயச் செந்தூரம்.

ஓடுங்காரீய முற்றசெந்தூரங்கள்
நீடுமேகருங் குன்றியிலையரை
தேடுஞ்சீலைத் திறமாயெழுசீலை
கூடுமேபுடம் கெசப்புடம்போட்டிடே 672

போடச்செந்தூரம் புகலுமரிசெடை
நீடத்தேனில் கொருங்குமோர்மண்டலம்
கூடமேகங் குமறியேயோடிடும்
பாடப்பிரமியம் பாங்காகநீக்குமே 673

நீங்குபத்திய நோம்பசும்பயர்
ஆங்குங்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
தீங்கில்லாமல் திறமாயருந்திடு
வாங்குமேகுருவன் மொழிபொய்யாதே 674

கன்னப்புற்றுக்கு மருந்து.

பொய்யாதையா புகலுங்குருமொழி
அய்யாபுற்று அறைவேனொருமருந்
தையாபூரமுந் தாங்கும்படிகாரம்
மெய்யாகாரமும் விரும்புஞ்சமனெடே 675

எடுத்துவெண்ணெயி லெழிலாயரைத்துமே
அடுத்துமூன் றுநா ளன்பாகக்கொண்டிடில்

கடுத்தபுற்றுங் கருதும்ரோகம்
விடுத்துப்போமென விளம்பினர்தேறனே 676

### வாந்தி விக்கலுக்கு.

தேறன்வாக்குத் திசையிலும்பொய்யாது
கூறமருந்து குறிக்குமேலமுடன்
ஆறநெற்பொரி அரியகருஞ்சீரம்
தீறதிராட்சப் பழமுமெடுத்திடே 677

எடுத்துக்கியாழ மெழிலாகமூட்டியே
அடுத்துமூன்றுநா ளன்பாகவுண்டிடில்
தொடுத்தவாந்தியுந் தோன்றுவிக்கல்களும்
விடுத்துக்கானகம் விரண்டோடிப்போகுமே 678

### சுகபேதி மாத்திரை.

போகுமேசுக பேதிமாத்திரைகேள்
ஆகும்பூர மழகியசுக்குடன்
வாகுரோகணி வாகானகோதும்பை
பாகுமேகடுக் காயின்கியாழமே 979

ஆமேசாம மறுபதுவானபின்
தாமேமாத்திரை தாக்கும்பிரமாணம்
போமேகுன்றியின் போதளவுண்டிடில்
காமேபேதியா நற்சுகபேதியே 680

### சுரக் குளிகை.

பேதிவெள்ளை பெரியமிளகுடன்
சாதிலிங்கந் தனிரசப்பூரமாம்
வாதிக்காகும் வழகியமுப்பூவாம்
ஆதிதேன்விட் டரைமெழுகாகுமே 681

ஆகுமேசுர மறுபதுநீங்கிடும்
வாகுபித்தம் வழங்கியநாற்பதும்

சாகுசேத்துமஃ! தவிர்ந்துபோந்தொண்ணூற்றூற்
பாருதேரையன் பாடினதுண்மையே 682

### இடிமருந்து ராமபாணம்.

உண்மையாக வுரைக்கிறேனிடிமருந்
தண்மையான தனிப்பஞ்சமாவாரை
கண்மையான கடியகஞ்சாங்கோரை
வெண்மையான விரும்பும்பூரமெடே 683

எடுத்துத்தேங்கா யெழிலாம்பனைவெல்லம்
அடுத்துகெந்தமு மானலவங்கமும்
தொடுத்தபத்திரி தோன்றுமிருசீரம்
விடுத்தகாந்தமும் விரும்பிச்சமன்கூட்டே 684

கூட்டியொன்றாய்க் குலாவியிடித்துமே
ஆட்டிமருந்தை யருந்திடில்மண்டலம்
வாட்டுரோகமும் வாங்காப்பெருநோயும்
காட்டுங்கானகங் கதறியேயோடுமே 685

ஓடும்பத்திய முற்றபசும்பயற்
ஆடும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
நீடுங்காடை நெருங்கும்புறாக்கறி
தேடுநெய்யுந் திறமாகவுண்டிடே 686

### விரைவாதத்துக்கு மேற்கட்டு.

உண்டுமூலி யுறையுந்துத்தியிலை
அண்டுமே கழற்சிக்காயிலையுடன்
கொண்டுசெம்மை குறிக்குமிம்மூன்றையும்
பண்டுமாமணக் கெண்ணெயில்வாட்டிடே 687

வாட்டிமேகடுக் காய்த்தூள்கலந்துமே
கூட்டியண்டங் குலாவியிறுக்கியே
பூட்டிமண்டலம் போதவேகட்டிடில்
சூட்டிவாதம் சுழன்றோடிப்போகுமே 688

போகும்பத்தியம் போற்றுமகத்தியாம்
ஆகுமிஞ்சி யரியவெள்ளுள்ளியாம்

பாருமேபசும் பாலுமோரன்னமாம்
வாருதேரையன் வரைந்ததுபார்த்திடே 689

ஒருதலைநோய்க்குத் தயிலம்.

பார்த்துமேதலைநோய்க்கித் தயிலங்கேள்
ஆர்த்துவெள்ளுள்ளி வரியவலம்புரி
கோர்த்துமாசக்காய் குறிக்கும்லவங்கமும்
தீர்த்துச்சமனெடை தீரவெடுத்திடே 690

எடுத்துக்கொம்பரக் கெழிலாகவவ்விடை
உடுத்துமேபசும் பாலிலரைத்துமே
தொடுத்துமேயெண்ணெய் தோன்றக்கலக்கியே
கொடுத்துமுத்தியும் கூறயெறக்கிடே 691

எறக்கிமாய னெழிலடிபோற்றியே
உறக்கமண்டல முற்றுமுழுகிட
திறக்கக்கபால சூலைவலியறும்
பறக்குமென்றல்லோ பாடினர்தேறனே 691

திரிதோஷ சுரத்திற்குக் கியாழம்.

தேறன்கூர்மொழி திசைநான்கும்பொய்யாது
வேறக்கியாழம் விரும்பியுறைக்கிறேன்
கூறசுக்குக் குறிக்குஞ்சிறுதேக்கு
ஆறக்கோஷ்டமு மன்பாய்நறுக்கிடே 692

நறுக்கிப்பற்படம் நவிலுமதூரமாம்
குறுக்கிக்காஞ்சொறி கூறுஞ்சேர்ந்துடன்
முறுக்கிநன்னாரி முதிர்ந்தமுத்தக்காசு
செறக்கிப்பேய்ப்புடல் தேவதாரக்கூட்டே 693

கூட்டியொன்றாய்க் குமுறவிடித்துமே
ஆட்டிப்பாண்ட மறுபடிநற்சலம்
நீட்டிக்காய்ச்சு நெருங்குமிருசாமம்
பூட்டிமூவேளை புகலக்கொடுத்திடே 694

கொடுத்தபோது குமிறிடுமுச்சுரம்
அடுத்துச்செந்தூர மரியகுன்றியெடை
தொடுத்துக்கியாழத்தில் தோன்றக்கொடுத்திடு
கடுத்துமேசுரங் கதறியேயோடுமே 695

ஓடுமேகசுர மிருபதும்போம்
நீடுமேயீளை நெருங்குங்கபமீளை
வாடுரோகம் வறையுஞ்சுவாசமும்
காடுபோமெனக் கதறினர்தேறனே 696

தேறன்வாக்குத் திசையிலும்பொய்யாது
கூறப்பத்தியங் குறிக்குங்கோதும்பையாம்
திறவெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
பாறநெற்பொரி பகருங்கஞ்சியுண்ணே 697

பாரிசவாயுவுக்கு அயச்செந்தூரம்.

உண்ணசெந்தூர முற்றமுறைசேளு
திண்ணசூதம் திறமாம்பரிச்செம்பு
கண்ணன்மூலி கருதுகெந்தகமும்
வண்ணமாகவே மாட்டியுருக்கிடே 698

உருக்கியேயெடை யுற்றவரிதாரம்
மருக்கிப்பொற்றலை மாதளம்பூச்சாறு
நெருக்கும்புரசம் நீள்செம்பருத்தப்பூ
பருக்கிவங்கிஷப் பர்திச்சார்வார்த்திடே 699

வார்த்துமேயரை வாகாய்த்தினமைந்து
கோர்த்திடுங்குப்பி கூறிடுவாலுகை
ஏர்த்துவாலுகை யெரிப்பாய்தினமொன்று
சேர்த்துவாலுகை செந்தூரமாகுமே 700

செந்தூரமொன்று சிறந்தநவலோகம்
மந்திக்கிலாயிர மதிப்பாகப்பாய்ந்திடும்
கொந்திக்கோர்மண்டலங் கூட்டோரரிசிடை
சிந்தித்துமேனி சிவந்தோர்மேனியே 701

குஷ்டத்துக்கு நவலோகச்செந்தூரம்.

மேனிசெந்தூர மேவிடுங்குஷ்டத்திற்
கானிச்செந்தூரங் கருதுவயச்செம்பு
தானிக்காந்தந் தருவானதங்கமும்
வானிலப்பிரேகம் வாகாய்ச்சரியிடே 702

இட்டயிடைபோ லிதிற்சங்கச்செம்பிடு
இட்டயிடைபோ லிதிலண்டச்செம்பிடு
இட்டயிடைநன் றிதமாங்கிளிஞ்சியில்
இட்டயிடைய தினிதமாயுருக்கிடே 703

உருக்கியென்று யுலர்ந்தசெயசூதம்
நெருக்கியிடைசரி நேர்ந்தசெயகெந்தி
அருக்கிகேசரி அரியதயிலமரை
பருக்கும்பில்லையாய்ப் பகர்ந்துபுடஞ்செய்யே 704

செய்துமேபுடந் தீரச்செந்தூரமாம்
மெய்துலோகத்தில் மீட்டிடில்தங்கமாம்
கைதுமண்டலங் காணியருந்திடில்
பொய்துமேனிப் புகழ்ந்திடத்தங்கமே 705

தங்கபத்தியந் தாங்கும்பச்சைப்பயர்
வெங்கும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
கங்குல்பால்தயிா கருதுநெய்யன்னமாம்
பொங்குமண்டலம் போற்றவருந்திடே 706

சுரத்துக்கு சண்டமாருதக் செந்தூரம்.

அருந்தும்போது மறுபதுசுரமற
திருந்துலிங்கமுந் தேர்ந்தரசபற்பம்
குருந்துபூரமுங் கூறுநேர்வாளமும்
வருந்தும்பாஷாணம் வாகாய்ச்சமனெடே 707

எடுத்துமேரச மெழிலானசெந்தூரம்
அடுத்துக்கல்வத்தி லன்பாயரைத்திடு
தொடுத்துமூவாறில் தோன்றுமரிசிடை
கொடுத்திடச்சுரங் குழலியேயோடுமே 708

## தீராத தாகத்துக்கு.

ஓடுந்தாக முறையுமயிற்பீலி
தேடுந்திப்பிலி தேர்ந்தவேலமுடன்
கூடுநெற்பொரி குறிக்குமதூரமாம்
ஆடுங்கோஷ்ட மரியகஸ்தூரியே 709

தூரிப்பாலை துகளுந்திராட்சமாம்
வாரிக்கியாழம் வகுக்குமயிற்சாம்பல்
சாரிநற்சலந் தாக்குவிருநாழி
பாரிக்கியாழம் பகிர்ந்துயெறக்கிடே 710

ஏறக்கியீச னெழிலடிபோற்றியே
திறக்கசாமந் திறமாமிருசாமம்
உறக்கமன்றியே யுண்பீரிருவேளை
பறக்குந்தாகம் பகரவேபோற்றிடே 711

போற்றுங்கோஷ்டம் புகலுஞ்சடாமாஞ்சி
தேற்றுஞ்செம்பூராம் பட்டைதேவதாரம்
ஆற்றுஞ்செண்பகம் அறையுங்கருஞ்சீரகம்
காற்றும்பூலாக் கிழங்குயெடுத்திடே 712

எடுத்துக்கஸ்தூரி யெழிலானமஞ்சளும்
அடுத்துக்கார்போக வரிசிநற்சீரகம்
கடுத்துசெவ்வியம் கழருஞ்சிறுதேக்கு
தொடுத்தசிறுநாகப் பூவுங்குருவேரே 713

வேராம்நன்னாரி விரும்புமகில்கட்டை
காராம்பச்சிலை கருதும்வெட்டிவேரும்
நீராஞ்சந்தனம் நேருங்கொம்பரக்கு
கூராஞ்சாம்பிராணி குறிக்குமுட்டியெடே 714

முட்டிச்சூரணம் முழுதுஞ்சரியெடை
கட்டிச்சாம்பிராணி கதறிடுங்காலெடை
எட்டுயெண்ணெயி லெழிலாகக்காய்த்துமே
செட்டிமண்டலம் சேராய்முழுங்கிடே 715

முழுகும்போது முறையும்பிறவலி
அழுகுநீரும் அறையுந்தலைவலி
ஒழுகும்பாய்ச்ச லொடுங்குகபரோகம்
நழுகும்வியாதி நவின்றனர்தேறனே 716

கால்வலிக்கு மேற்பூசல்.

தேறன்கூர்மொழி திசையிலும்பொய்யாது
வேறமருந்து விரும்பியுறைக்கிறேன்
கூறகால்வலி குறிக்குமூலிகைகேள்
திறவெண்குன்றி திறமாமூலியெடே 717

எடுத்துக்கற்பூர மெழிலானமூலியும்
அடுத்துமேபழச் சாற்றிலரைத்திடு
தொடுத்துவைந்துநாள் மேற்பதம்பூசிட
கடுத்துமேவலி கதறியேயோடுமே 718

ஓடும்பத்திய முற்றபுளியாகா
தேடும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
நீடும்வெள்ளுள்ளி நேரும்பச்சைப்பயர்
கூடும்பத்தியங் குறிக்கவேயுண்டிடே 719

குழந்தைமாந்தம் பதினெட்டுக்குங் கியாழம்.

உண்டபோது முறையும்பாலகர்க்கு
அண்டமாந்த மலறியேயோடுதற்
கண்டங்கத்திரி கருதுந்துளசியாம்
இண்டுமேயிலை யியம்புநல்மேனியே 720

மேனிசெம்பருத்தி யிலையோர்பிடி
ஆனிதோடை அரியவொருபிடி
தானிக்காயுடன் தனிப்புளிச்சாதமும்
வாணியோமம் வகைக்குப்பிடியெடே 721

எடுத்துக்கோஷ்ட மெழிலானதிப்பிலி
தொடுத்தபத்திரி தோன்றுமிளகுடன்
கொடுத்துக்கியாழங் குறிக்குமிருவேளை
கெடுத்தமாந்தங் கிளறிபறக்குமே 722

### ஒருகால் ஒரு விரைவீக்கத்திற்கு மெழுகு.

பறக்குமேயொருகால் வீக்கம்போவதற்
கிறக்குலிங்கமுங் கெடியநற்பூரமும்
திறக்கமானதோர் தேர்ந்திடுகெந்தமும்
சிறக்கத்தேனில் தெளிவாயரைத்திடே 723

அரைத்துமெழுகா யானதோர்காசெடை
முரைத்துமண்டல முற்றும்பொசித்திட
திரைத்தவாதமுந் தீராப்பெருநோயும்
விரைத்துப்போமென விளம்பினர்தேறனே 724

### நீரடைப்புக்கு பற்பம்.

தேறன்வாக்குத் திசைநான்கும்பொய்யாது
வேறேபற்பம் விரும்பியுரைக்கிறேன்
கூறவுப்புக் குறிக்கும்வெடியுப்பு
ஆறமூளியி லன்பாய்ப்பதிந்திடே 725

பதிந்துமேபுடம் பத்துமேபோட்டிடு
சதிந்துபற்பந் தவளநிறம்போலாம்
கதிந்துவெண்ணெயில் காலையில்தானுண்ண
வதிந்துநீர்தடை வாரிப்பறக்குமே 726

பறக்கும்பத்தியம் பகருமுள்ளங்கியாம்
திறக்குமேசுரை தேர்ந்ததுளிருடன்
கிறக்குமோருடன் நேர்ந்தபாலோடன்னம்
சிறக்கநித்தியந் தீரப்பொசித்திடே 727

### சகல மேகத்திற்கும் கெந்தக சுன்னம்.

பொசித்தகெந்தி புகலுமிருபலம்
நசித்தமாந்துளிர் நவிலுமறுபலம்
வசித்தபாண்டத்தில் வலுக்கவேசில்லிட்டு
மசித்தகசபுடம் வாகாகப்பூண்டிடே 728

பூண்டபோது புகழ்ந்திடும்பற்பமாம்
நீண்டுவெண்ணெயில் நோயருந்திட

கூண்டுமேகங் குறிக்குமூலரோகம்
மாண்டுபோமென வகுத்ததுவுண்மையே 729

மகா ஆனந்த வயிரவம்.

உண்மைசூத மொடுங்குவெண்காரமும்
தண்மைநாவி தனிச்சாதிலிங்கமும்
வெண்மையான விரும்புங்கல்மிளகும்
திண்மைமேபழச் சாற்றிலரைத்திடே 730

அரைத்துயிஞ்சிச் சாரதிலுமிருசாமம்
குரைத்துக்குன்றிபோல் குமுறவுருட்டியே
நிரைத்துப்பஞ்சாங்கம் நேருங்கியாழத்தில்
கரைத்துமாத்திரை கடுகக்கொடுத்திடே 731

கொடுத்திடவதி சாரமுந்தானறும்
அடுத்துமந்தமு மக்கினிமந்தமும்
கடுத்துமேகன வாயுமிகவறும்
விடுத்துப்போமென விளம்பினர்தேறனே 732

சகலமேகக்குளிகை.

தேறன்மேகத் திறமாங்குளிகைகேள்
கூறசூதங் குறிக்குமொருபலம்
ஆறப்பிரோகம் அரியதிருமாலும்
தீறகெந்தி திறமாயெடுத்திடே 733

எடுத்துமேசலா சத்துசரிசமன்
அடுத்துத்தேனி லழகாயரைத்துமே
கொடுத்துக்குன்றிபோல் கூறயுருட்டியே
விடுத்துமண்டல முற்றும்பொசித்திடே 734

பொசித்தபோது புகலுமிருமலும்
நசித்தவிளை நவிலுங்கபமிளை
வசித்தரோகம் வருக்குங்கபரோகம்
பசித்தமந்தமும் பதைத்துமேநீங்குமே 735

காசரோகத்திற்கு திப்பிலி நெய்.

நீங்குவேறும் நிலப்பனைகன்னரி
நீங்கில்லாத திறமானசந்தனம்
பாங்குமல்லி பகருமெனுமிச்சம்
ஓங்குமுந்திரி யுற்றசீரகமே 736

ஆமேரோகணி அரியவாளமுடன்
தாமேதிப்பிலி தாக்குஞ்சரியெடை
போமேபசும் பாலிலரைத்துமே
நாமேநெய்படி கவிலயெடுத்திடே 737

எடுத்துமேபத மெழிலாகக்காய்ச்சியே
அடுத்துமண்டல மண்பாகக்கொண்டிட
தொடுத்தகாசந் தொடரும்நீலகாசம்
கடுத்தநீர்க்காசம் கதறியேயோடுமே 738

ஓடும்பத்திய மோங்குமுயற்கறி
ஆடும்வெள்ளாட் டிறைச்சியுப்புக்கண்டம்
நீடுங்காடை நெருங்குங்கவுதாரி
தேடுமிதுகளைத் திறமாகவுண்டிடே 739

மகா ஏலாதி கிருதம்.

உண்டபோது மொருங்குமகாலேதி
அண்டுமேபசும் பாலினறுநெய்யும்
தொண்டுமேலத் தொடருமதூரமாம்
கண்டுபாங்கி கடிகிச்சமனெடே 740

எடுத்துச்சந்தன மெழிலானவெள்ளறு
கடுத்துத்தேனில் கலந்துமேகாய்ச்சிட
முடுத்துகிருத முடுகுஞ்சமபதம்
தொடுத்துமண்டலந் தோன்றவருந்திடே 741

அருந்தும்போது மறையுமேலெரிவு
திருந்துகிரந்தி தீராப்பிணியறும்
பொருந்துமழலை போற்றுமிருமனு
குருந்துரோகங் குடியோடிப்போகுமே 742

### உள்மாந்தைக்கு நெய்.

போகுமாந்தை புகலுமவனிவிட்
டேகுமருந்து தெளிவாயுரைக்கிறேன்
ஆகுதோடை அரியவழுதலை
பாகுசக்கு பகருமதூரமே 743

மதூரமேலம் வருக்குங்கருஞ்சீரம்
சதுரக்கள்ளியின் தாக்குமுனைந்துளிர்
விதூரமான விரும்பும்வாய்விளங்கம்
மூதூரமாய்நெய்யில் மூசியவேகாய்ச்சிடே 744

காய்ச்சியமாயன் கணேசற்குப்பூசித்து
ஆய்ச்சிநெய்யி லரியபட்ணவிடை
மூய்ச்சுடாமல் முசிபவோர்மண்டலம்
பேய்ச்சுதப்பாமல் பிரியமாயுண்டிடே 745

உண்டபோது முறையும்பீனிசமும்
கண்டமாலை கருதியரோகமும்
அண்டவாயு மறுவிதசூலையும்
கொண்டுபோமென கூறியதுண்மையே 746

### மகா கதலிப்பழக் கிருதம்.

உண்மையான வுறையுங்கதலிச்சாற்
தண்மையான தனிநெல்லிச்சாறெடை
வண்மையாம்பசும் பாலுமேயோரிடை
கண்மையான கடைசரக்கேத்திடே 747

ஏத்திவாள மிணங்குலவங்கமாம்
அத்திமாஞ்சி லறையுந்திரிபலை
நேத்தியான நெருங்குஞ்செங்கழுநீர்
பூர்த்தியாகப் பொருந்தவேகாய்ச்சிடே 748

காய்ச்சியேகுரு கருதும்பதாம்புயம்
மூச்சிடாமல் முழுதுங்கால்மண்டலம்
நீய்ச்சுநீக்கியே நோய்வருந்திடில்
போய்ச்சுசகலநோய் பொருந்தவேகண்டிடே 749

கண்டுதேரையன் கருதுமுறையிது
பண்டுபோல்மேனி பகரவிறுகுமாம்
உண்டுனித்த முடனேசீனிபால்கொள்
விண்டுமேனி விறுகியேதங்கமே 750

நன்னாரி நிலப்பனை நெய்.

வங்கமாநிலப்பனை நன்னாரிவேரும்
எங்கும்போற்று மெழிலாங்கருங்காலி
புங்கம்பட்டை புகலுமொதியனும்
சங்கம்பட்டையுஞ் சார்வாய்ச்சமனெடே 751

எடுத்துநெய்யி லெழிலாகக்காய்ச்சியே
அடுத்தமண்டல மன்பாகவுண்டிட
தொடுத்தபாண்டுவுந் தோற்றுநீரிழிவும்
கடுத்தமேகங் கதறியேயேகுமே 752

அசுவகெந்தி ராசாங்க நெய்.

ஏகுமேயசுவ கெந்திநெய்முறை
ஆகுஞ்சிவதை யரியசாரணையாம்
பாகுமிஞ்சியும் பகருஞ்சங்கமுடன்
வாகுமிளகு வகையாகக்கூட்டிடே 753

கூட்டிக்கூவிளங் குறிக்கும்பாதிரியாம்
ஆட்டும்வாகை யரியபேராமல்லி
சூட்டுநெல்லியுந் தோன்றுங்கருஞ்சீரம்
பாட்டுதப்பாமல் பாங்காய்நிறுத்திடே 754

நிறுத்துமேபசும் பாலிலரைத்துமே
கறுத்திடாமல் கருகியேநெய்தனில்
முறுத்திடப்பதம் முத்தீயும்மேத்தியே
உறுத்துமேகுரு போற்றியணைத்திடே 755

அணைத்துவீச னெழிலடிபோற்றியே
வணைத்துமண்டலம் வாகாய்ப்பணமெடை
பணைத்துக்காலையில் பாங்காயருந்திடில்
கணைத்தசகலநோய் கதறியேநீங்குமே 756

## குழந்தைகளுக்கு அமிர்தசஞ்சீவி நெய்

நீங்கும்வேலி நினைக்குநன்னாரியாம்
பாங்குபச்சை பசுருமாதண்டனும்
தீங்கில்லாததோர் தேர்ந்தாசபூரம்
ஆங்குபாலை யதிமதூரங்கூட்டே 757

கூட்டிப்பற்படம் கூறும்பேரீச்சமாம்
ஆட்டிபொன்று யரியசாறுசெய்யில்
மூட்டிபாண்ட முசியவேகாய்த்துமே
காட்டிதீபமாங் கர்த்தனுக்கேற்றிடே 758

ஏற்றிமண்டல மெழிலாயருந்திடில்
காற்றுபோல்மேனி கடிகிபெருத்திடும்
தூற்றுரோகந் தொடர்ந்துவனமேகும்
தேற்றியிம்முறை தெளியவுரைத்ததே 759

## கலியாணபூசினிக்கா நெய்.

உரைக்குங்கூழ்ப்பர்ண்ட முலகிற்புதுமைகேள்
திரைக்கும்பூசினிச் சாறுமிருநாழி
வரைக்குங்கிழங்குச் சாறுமொருநாழி
குரைக்குமேபசும் பாலுஞ்சமன்தூக்கே 760

தூக்குஞ்சீனி துடியாமதிற்பாதி
தாக்குமொன்றாய்த் தளரக்கலக்கியே
போக்கில்லாமல் பொருந்தசாறுசெய்யில்
வாக்குதப்பாமல் வகைப்பாண்டமூட்டிடே 761

மூட்டித்தீயில் முதிராமல்காய்த்திடு
ஆட்டிமண்டல மன்பாகவுண்டிடில்
நீட்டுரோகம் நெருங்குங்கபரோகம்
பூட்டுபோல்வழி போலப்பறக்குமே 762

பறக்குமென்பது பாடியதுண்மையே
பறக்குமென்பது பாடியதென்குரு
பறக்குமென்பது பாடியசெந்திரு
பறக்குமென்பது பாடியதேறனே 763

தேறன்வாக்குத் திசையெட்டும்பொய்யாது
தேறன்வாக்கு சிறந்தசித்தர்கட்கு
தேறன்வாக்கு பொய்யாதுமெய்யாகுங்காண்
தேறன்வாக்கிது தெளிந்துவரைந்ததே 764

சூதகவாயுவுக்கு மகாலிங்காதி மெழுகு.

அறையுஞ்சூதக மறியவைவெளிப்பட
திறையுங்குமுட்டிச் சாறுமிருநாழி
நிறையும்வெள்ளுள்ளி நேரும்நொச்சிச்சாறு
பறையுமுப்புப் பகர்ந்திடகாலலே 765

எடுத்துலிங்க மெழிலானவோமமும்
தொடுத்தகாயக் தொடரும்வெண்காரமும்
கடுத்தமிளகு கருதுநேர்வாளமும்
தொடுத்தவெட்டுடன் தோன்றக்கிளறிடே 766

கிளறிநூதுளங் காய்போலுருட்டியே
நளிமண்டல நவிலவருந்திடில்
களறிகுன்மமுங் கருதியசூதகம்
உளறிகானக முழன்றோடிப்போகுமே 767

போகும்பத்தியம் பொன்னாங்கணிக்கீரை
ஆகுமகத்தி யரியமுருங்கையாம்
பாகுங்கத்திரி பகருமிறைச்சியாம்
ஆகுமென்றே யறைந்தனர்தேறனே 768

திரேக நமச்சலுக்குத் தேய்ப்பொடி.

தேறன்பஞ்சாங்கந் தேர்ந்தகசகசா
கூறக்கஸ்தூரிக் குறிக்கும்பச்சைப்பயற்
நீறக்காச்சு நெருங்கமுழுர்துடன்
தீறமேபழச் சாற்றாலரைத்திடே 769

அறைத்துக்காலையி லன்பாகப்பூசிடில்
நிறைதப்பாமல் நெருங்குமுச்சிதனில்
கறைபட்டி லுப்பை கழருங்கிளிமண்ணும்
குறைதப்பாமலே குளித்துபேமுழ்கிடே 770

மூழ்கும்போது முறையுஞ்சொரிரோகம்
ஏழ்குங்கிரந்தி யெழும்புஞ்சிறங்குகள்
நீழ்குங்கமச்சல் நேரும்பொடிப்புண்கள்
வீழ்குங்கானகம் விரைந்தோடிப்போகுமே 771

போகும்ரத்தியம் போத்தும்மிறைச்சியாம்
ஆகும்பால்தயி ரன்னமுடனெய்யாம்
பாகுமலுவா பால்கோவாதன்னுடன்
வாகுமுறைப்படி வாகாகவுண்டிடே 772

கண்டரோகத்திற்கு மருந்து.

உண்டபோது முறையுங்கண்டரோகம்
அண்டமதுரம் யானைதிப்பிலியும்
திண்டுசுக்குத் திறமாமிருசீரம்
கொண்டகோஷ்டம் குறிக்கிமிளகெடே 773

எடுத்துவாலு மிளகுபெருங்காயம்
அடுத்தபத்திரி யானவிடையமாம்
தொடுத்தகாரமுர் தோற்றுவாய்விளங்கம்
கடுத்தகடுகு கருதுந்தான்றிக்காயே 774

காயுமாசக்காய் கருதுமமூக்கரா
தோயுங்காட் டெருமைப்பால்சரியெடை
வாயும்வேய்ப்புடல் வளருங்குராசானி
தேயுஞ்சூரணந் திரளப்பொடித்திடே 775

பொடித்துச்சூரணம் புகலத்திரட்டியே
நடித்துச்சீனியில் நன்றாய்க்கலந்துமே
வடித்துமண்டல மண்பாகவுண்டிட
கடித்தரோகங் கதறியேயோடுமே 776

நீராரோகத்துக்குச் சூரணம்.

ஆடுஞ்சூரண முற்றவெள்வேறுடன்
ஆடுமகிலின முக்குராசந்தனம்
தேடுமேலந்தி கழூங்கவுழ்தும்பை
நீடுரோகணி நெருஙகச்சமண்தூக்கே 777

தூக்கிவேம்புடன் தய்யகறுவலி
வாக்குதான்றியும் வரையுப்புச் ஓருவி

ஆக்குஞ்சோனைப் புல்லரியவெள்ளறுகுடன் .
பாக்குநெரிஞ்சி பாங்காய்சமனெடே 778

எடுத்துச்சீனியி லெழிலாய்ச்சமனெடை
அடுத்துக்கடிகை யானதோர்சூரணம்
தொடுத்துமண்டலந் தோன்றவருந்திடில்
நடுத்தரோக நடுங்கியேயோடுமே 779

காதெழுச்சிக்குத் தயிலம்.

ஓடுங்காதி லுறையுமெழுச்சிக்கு
தேடுநண்டு திறமாமிளகுடன்
கூடுமொன்றாய்க் குலாவியேகாய்த்திடில்
ஓடுமெழுச்சி யொதுங்கிசீழ்நீங்குமே 780

நரம்புவலிக்குந் தொடைசுளுக்குக்கு மருந்து.

நீங்குமேனி நெடியவகிலுடன்
பாங்குதேத்தான் பகருங்கற்றாழைபாம்
ஓங்குகொன்றை யுயருங்குறிஞ்சாவும்
தீங்கும்புள்ளடி தேய்ந்தவழிஞ்சியே 781

அழிஞ்சிவாழை யரியகொள்ளெள்ளுடன்
கொழிஞ்சிவேலே குலாவுங்கைவேளையாம்
பழிஞ்சியோமம் பகருஞ்சித்தகத்தி
நழிஞ்சிகொன்றை நறுவிளிசேர்த்திடே 782

சேர்த்துவெள்ளுள்ளி சிறந்தவனிச்சையாம்
பார்த்துமூலி பகருமூசானியாம்
கோர்த்துபத்தியங் கூறுநீலோற்பலம்
ஆர்த்துநெரிஞ்சி யரியவெங்காயமே 783

காயமொன்றாய் கருதியிடித்துமே
ஆயப்பாண்ட மறுபடிநற்சலம்
தூயக்கியாழந் துகளவிறுத்துமே
காயமேனி கழரவேபூண்டிடே 784

பூண்டபோது புகலும்கரம்பிசு
நீண்டகுத்தம் நெருக்குந்தொடைரோகம்

ஆண்மூடக்கு அறியபிறவலி
கூண்டுரோகங் குடியேகிப்போகுமே 785

போகும்பத்தியம் புகலுந்தாதுவளை
ஆகும்வெள்ளுள்ளி அறியவிஞ்சியுடன்
பாகுவெள்ளாட் டிறைச்சியுப்புடன்
வாகுங்குருகாடை வகுக்கவருந்திடே 786

தீராரிணத்துக்குச் சிலையெண்ணை.

அருந்தும்போது மறையுஞ்சிலையெண்ணை
குருந்துகெந்தியுங் கூறநற்பூரமும்
பொருந்துமேரசம் போற்றுங்குங்கிலியம்
திருந்துசீனந் திறமாயிச்சமன்கூட்டே 787

கூட்டிசிங்கி குலாவுமொருபலம்
ஆட்டிமுக்கண் ணரியபாலிலறை
நீட்டியெண்ணை நெருங்கவேகாய்த்துமே
பூட்டிமாயன் புகல்பதம்போற்றிடே 788

போற்றிதீபம் புகலக்கொடுத்தபின்
ஆற்றியெண்ணை யரியரோகங்கட்கு
தூற்றிமண்டலந் தோன்றவேபூசிடில்
காற்றுபோல்ரோகங் கதறிப்பறக்குமே 789

பறக்குமென்றல்லோ பாடினர்சித்தர்கள்
பறக்குமென்றல்லோ பாடினதுண்மைகாண்
பறந்துமேயிது பகர்ந்ததுபொய்யல்ல
பறக்குமென்றல்லோ பாடினர்தேறனே 790

தேறன்வாக்குத் திசையெட்டும்பொய்யாது
தேறன்வாக்குத் திரிலோகம்மெய்யாகும்
தேறன்வாக்கிது தேர்ந்தகுருமொழி
தேறன்வசைமொழி தெளிந்துவரைந்ததே 791

காக்கைவலிக்கு மெழுகு.

அறையுங்காக்கை யலரும்வலிகட்கு
நிறையுமேலம் நெருங்குநேர்வாளமும்
குறையும்லிங்கங் குறிக்குஞ்செவ்வீரமாம்
வறையும்கன் மிளகுசமன்தூக்கிடே 792

தூக்கியொன்றாய் துவளப்பொடித்துமே
தாக்கிக்கல்வங் தனியக்கலந்துமே
போக்கில்லாமல் புகலுமற்றேனதில்
வாக்குதப்பாமல் வாகாயரைத்திடே 793

அரைத்தும்மெழுகு வறியதோர்குன்றிதான்
நிரைத்தமண்டல கோவிருவேளை
பரைத்துபத்தியம் பாங்காயருந்திடில்
கரைத்துமேவலி காக்கைதானோடுமே 794

ஓடும்பத்திய மொருங்கும்பசும்பயற்
தேடும்வவ்வாலு தேர்ந்தமுதலையூண்
கூடுமேபுறா காடைசுறாவுமூண்
கோடுமேகருங் கோழியருந்திடே 795

காலில் நீரேற்றந்தீர சூரணம்.

அருந்தும்சோகு மலருமருந்துடன்
திருந்துமுள்ளியுந் தேர்ந்தகத்திரியும்
பொருந்துகுறட்டை போற்றுங்காத்தையாம்
குருந்துகாணலுங் குறிக்குஞ்சமனெடே 796

எடுத்து அச்சமு மெழிலானவேலியும்
தொடுத்துநெருஞ்சில் தோன்றுமரசுடன்
கொடுத்துப்பாளை குறிக்கும்ரோகணியாம்
அடுத்துச்சுண்டி யமுக்குறுசேர்த்திடே 797

சேர்த்துச்சூரணஞ் சிறக்கவிடித்துமே
பார்த்துச்சீனியில் பகருஞ்சரியெடை
கோர்த்துக்கலந்து கூறுமோர்மண்டலம்
தீர்க்கவுண்ணநீர் தீரப்பறக்குமே 798

சிரசில் நீரேத்தத்திற்குத் தயிலம்.

பறக்குமாரை பகருமமுக்கரா
சிறக்குங்கைச்சோலங் தேர்ந்தகஸ்தூரியாம்
நிறக்குபீனசம் நேர்ந்தவாடாதோடை
திறக்குமெருக்கு தேர்ந்தமதூரமே 799

மதுரஞ்சாதிக்காய் மன்னிலாமுள்ளியும்
சதுரம்பூலாவுந் தாக்குங்கருஞ்சீரம்
விதரமான வரும்புமநாகவல்லி
அதுரமேனி யழகியபாலெடே 800

எடுத்துயெள்ளெண்ணெ யெழிலாக்கலந்துமே
அடுத்துப்பாண்டம் அறையவேகாய்த்திடில்
தொடுத்துமூன்றுநாள் தோன்றவருமுறை
தடுத்திடாமல் தனிப்பசமூழ்கிடே 801

மூழ்கும்போது முறையுந்தலைவலி
நீழ்கும்பாய்ச்சல் நெருங்குங்கபாலநோய்
வீழ்கும்பீனசம் விடுபட்டுயேகிடும்
ஆழ்கும்ரோக மலரியேயோடுமே 802

இடுப்புவலி குடைச்சலுக்குத் தயிலம்.

ஓடுமேவலி யோங்குங்குடைச்சலும்
காடுவசம்பு கருதுமமுக்கரா
தேடுமயரந் தேர்ந்தரோகணியும்
நீடுமல்லி நெருங்குமனிச்சையே 803

ஏகுமெண்ணெ யெழிலானவாமணக்
காகுமொன்றாய்க் கலந்துமேகாச்சியே
பாகுமேனியில் பகாவேபூசிடில்
போகுமேல்வலி பொருந்தப்பறக்குமே 804

காலையில் வயிரெரிச்சலுக்குக் கியாழம்.

பறக்குங்கியாழம் பகரும்பசும்பயர்
சிறக்குநெற்பொரி தேர்ந்தபேய்ப்புடல்
நிறக்குமதுர நேருநற்சீரகம்
சிறக்குமேலமுஞ் சிராய்ச்சமன்தூக்கே 805

தூக்கிச்சீனியில் துய்யவொருபலம்
தாக்கிக்கியாழந் தனிக்காலையுண்டிடே

போக்கில்லாமல் பொருந்துமெரிச்சலும்
வாக்குதப்பாமல் வரைந்தோடிப்போகுமே 806

போகும்பத்தியம் போற்றுமெலிமிச்சம்
ஆகுமேபுளி யாரைமரியனும்
பாகுசீனியும் பகரும்திராட்சமாம்
வாகுமல்லி வருக்குநல்லிஞ்சியே 807

இஞ்சிமாதுள மியம்பும்புதியனு
கொஞ்சஞ்சியக்காய் குறிக்குங்கொழுந்துடன்
வஞ்சிவெள்ளாட் டிறைச்சியுறுப்புகள்
மிஞ்சிடாமல் மிகப்பதமுண்டிடே 808

இரத்தபித்தத்திற்கு சூரணம்

உண்டபோது முறையுநற்சீரகம்
அண்டமேல மறையுமதூரமாம்
கண்டுசாதிக்காய் கழறுமலவங்கமாம்
பண்டுபூசினி பகருமிலுப்பையே 809

இலுப்பைவேலி யியம்புநற்கோஷ்டமாம்
இலுப்பைவித்துங் கெடியானநெற்பொரி
வறுப்பையான வருக்குந்திரிகடு
நீலுப்பைதான்றியு நோய்ச்சமனெடே 810

எடுத்துவாலு மிளகுபற்பாடகம்
தொடுத்துமேயதிதாரம் நற்கொன்றையாம்
கடுத்துவிடயங் கருதுங்காளாமுடன்
தொடுத்ததிப்பிலி தோன்றச்சமன்கூட்டே 811

கூட்டிமுள்ளியுங் குறிக்குமக்கிராகாரம்
நீட்டிச்சந்தன நெருங்குமகிலுடன்
பூட்டித்தேக்கு புகலுநற்சீந்திலும்
ஆட்டிச்சூரண மன்பாய்ச்சமன்சேரே 812

சேர்த்துச்சூரணஞ் சிறந்தநற்சீனியாம்
பார்த்துச்சரியெடை பண்பாய்க்கலந்துமே

ஆர்த்துமண்டல மன்பாகக்கொண்டிடில்
கார்த்துபித்தங் கதறியேநீங்குமே 813

சகலவாயுவுக்குஞ் சூரணம்

நீங்குதிப்பிலி நேரும்பெருங்காயம்
ஒங்குமாக வுறையுங்லப்பனை
தீங்கில்லா தோர் தேர்ந்தபறங்கியும்
பாங்குசுக்கு பகருமிளகெடே 814

எடுத்துவாமணக் கொட்டைநல்நெல்லியும்
தொடுத்துசிவதை தோன்றுமாடாதோடை
கடுத்தகைச்சோலங் கருதுமமுக்கறு
விடுத்தகொச்சி விரும்புஞ்சமன்றூக்கே 815

தூக்குமத்தி துலங்குங்லப்பனை
வாக்குக்காசு தனிச்சுருள்நன்னாரி
போக்கில்லாமல் பொருந்துசமனெடை
வாக்குத்தப்பாமல் வாகாயிடித்திடே 816

இடித்துச்சூரண மெழிலாகத்தூற்றியே
வடித்துசர்க்கரை வாகாய்க்கலந்துமே
படித்துமண்டலம் பாங்காயருந்திடில்
நடித்துவாய்வு நடுங்கியேயோடுமே 817

வேர்வைக்குத் தயிலம்,

சொல்லுமார்ந்தர் தொடரும்வேற்வையற
புல்லுவெட்டிவேர் புகலும்விலாமிச்சு
கொல்லன்கோவை குறிக்குந்தண்ணீர்விட்டான்
வில்லைப்பத்திரி விரும்புஞ்சரிதூக்கே 818

தூக்கியொன்றாய்த் துவளவிடித்துமே
தாக்குநல்லெண்ணெய் தனிப்பதங்காச்சியே
போக்கில்லாமல் பொருந்துமோர்மண்டலம்
வாக்குதப்பாமல் வாகாகமுழ்கிடே 819

சூழ்கும்போது முறையும்விஷவேர்வை
நீழ்குந்தாக நெருங்கும்வாட்சியும்
ஆழ்கும்பித்த மலறியேநீக்கிடும்
வீழ்குமென்று விளம்பினர்தேறனே 820

வாயில் நீர்சுரக்க.

தேறன்கூர்மொழி திசைநான்கும்பொய்யாது
கூறமருந்து குறிக்குமதுரமாம்
தீறமதுரம் தேர்ந்தவக்கிராகாரம்
ஆறநேர்பொரி அன்பாயெடுத்திடே 821

எடுத்துக்சுக்கு மெழிலானசீரகம்
அடுத்தயேல மறையச்சமனெடு
தொடுத்தமயிலி னிறகிற்சமன்சேரு
விடுத்தகஸ்தூரி விளம்பக்கழஞ்சிடே 822

கழஞ்சிச்சூரணங் கருதப்பொடித்துமே
வழங்குகற்றேனில் வாகாய்க்குழைத்திடு
தழங்கும்நாவிற் றுக்கத்துவளச்செய்
முழங்குமேசல் முதிரச்சுரக்குமே 823

சகல மேகங்களுக்கும் இரசகெந்த ராஜாங்க மெழுகு.

சுரக்கமாந்தர்க்குச் சூட்டமெருந்துகேள்
திரக்கமாம்பூரக் தேர்ந்தரசமுடன்
சிறக்கச்சிங்கியுஞ் சேர்ந்தவரிதாரம்
முறக்கமாந்த மனோசிலைகூட்டிடே 824

கூட்டுலிங்கங் குலாவுபால்துத்தமாம்
நீட்டுந்துருசு நேர்ந்தகாசுக்கட்டி
பூட்டும்சத்து புகலும்படிகாரம்
ஆட்டிஞ்சரக்கு வரியவரான்தூக்கே 825

தூக்குந்தாளிசச் தோன்றுங்கருஞ்சீரம்
தாக்குஞ்சிவதை தான்றிகடுக்காயும்

போக்கில்லாத பொருந்துந்திரிகடு
வாக்குதப்பா வலம்புரிக்காய்சேரே 826

சேர்த்துமுஷ்டி சிறக்கும்வாலுழுவை
கோர்த்துமல்லி கொடிவேலிமுள்ளியும்
ஆர்த்துமதுர மறையுங்கோஷ்டமுடன்
சேர்த்துவிடையஞ் சிறப்பாகத்தூக்கிடே 827

தூக்கிச்சர்தஞ் சிறக்குஞ்செஞ்சார்தமும்
தாக்கில்வங்கர் தனிப்பட்டைகசகசா
நோக்கியரத்தை நுவலும்பேராமுட்டி
தேக்குநாகப்பூ சிறந்தகொடிவேலி 828

வேலிநொச்சி விளங்குங்குப்பைமேனி
மூலியத்தி முழுங்கும்பெருமருந்
தாலிரோசனை தாக்குமழிஞ்சிலாம்
கோலியேசமன் கூறச்சமனெடே 829

எடுத்துமேரசக் கெழிலாயிடித்துமே
தொடுத்தசூரணந் தோன்றவடிசெய்து
படுத்தபாண்டத்திற் பாலால்புட்டாவிசெய்
சடுத்தமாகவே சாரவுலர்த்திடே 830

உலர்த்தியானபின் னுரைக்கும்ரசகெந்தம்
அலர்த்தியேமுலைப் பாலால்சுத்திசெய்து
சலர்த்துமேபூரல் சாற்றமீவகொட்டிடு
பலர்த்தபனைவெல்லம் பாங்காய்ச்சரிகூட்டே 831

கூட்டுமேபூரல் குலாவியிருப்புலக்
காட்டிசாமங் கருதும்பனிரண்டு
திட்டுமேகை விடாமலிடித்திடு
பூட்டுமெண்டம் புகலுமிரண்டிடே 832

இட்டேசாம மியல்பாயிடித்திடு
இட்டமாய் சுண்டைக்காயளவீதம்

கட்டமாகக் கருதவுமண்டலம்
சட்டமாயுண்ணச் சகலநோய்போகுமே 833

போகுஞ்சூலை புகலுமரையாப்பு
ஏகும்வெள்ளை யியலுங்கொறுக்குடன்
சாகுமாந்தை சகலவெடிசூலை
நோகுங்கண்டமாலை பிணிநீங்குமே 834

நீங்கும்பவுத்திர நெருங்கும்வெடிசூலை
ஓங்குங்குஷ்ட முறையுமதுமேகம்
ஆங்கும்புற்று அறையும்பொறைவீச்சு
தீங்குசிலந்தி தெறித்தோடிப்போகுமே 835

போகும்வாளை பொருந்தும்விலாவாளை
ஆகுங்கிரந்தி யரியகிரந்தியாம்
பாகும்சிலந்தி பகருமிடிப்புண்ணு
ஏகுங்கானக மெழிலாய்ப்பறக்குமே 836

பறக்குமென்றல்லோ பாடினரென்குரு
பறக்குமென்றல்லோ பகர்ந்தனர்சித்தரும்
பறக்குமென்றல்லோ பாலித்தார்முனிவரும்
பறக்குமென்றல்லோ பகுத்தனர்தேறனே 837

திரிதோஷ சுரத்திற்கு யொழும்.

தேறன்வாக்குத் திசைநான்கும்பொய்யாது
கூறக்கியாழங் குறிக்குந்திரிதோஷம்
ஆறமருந்து வறையுநேன்மாந்தர்க்கு
தூயபற்படர் தோன்றுஞ்சிறுதேக்கே 838

தேக்குப்பத்திரி சிறந்தசிந்திலொடு
தாக்குகாஞ்சொரி தக்கமதுரமாம்
நோக்கும்நன்னாரி நுவலுந்தாளிசமாம்
பாக்குஞ்சரக்கு பகருமுத்தக்காசே 839

பாக்குசுக்கு பகர்ந்திடும்பேய்ப்புடல்
தாக்குபத்திரி தனிநாகப்பட்டையாம்
போக்குமரத்தை புகலுந்தேவதாரம்
நோக்குமிளகு நுவலச்சரிகூட்டே 840

கூட்டியொன்றாய்க் குமுறவிடித்துமே
மாட்டியேசல மதிப்பாய்ப்படியிடு
நீட்டியெட்டி லொன்றாகவேகாச்சிடு
பூட்டிமூவாறு வேளைகொடுத்திடே 841

கொடுத்திடச்சுரங் குமுறப்பறந்திடும்
அடுத்தசேத்தும மறையும்வாதசுரம்
தொடுத்தபித்தமுந் தொடர்ந்தசுரமறும்
விடுத்தபத்திய மேவும்புளிதள்ளே 842

சிரோஸ்நான தயிலம்.

தள்ளடாதிரி தோஷமுந்தானறும்
விள்ளடாசிரோ தயிலமுரைக்கிறேன்
கொள்ளடாமதுரங் கருஞ்சீரகம்
உள்ளடாகஸ்தூரி மஞ்சள்சேர்த்திடே 843

சேர்த்திடுமிருவேலி தேவதாரம்
ஆர்த்திடும்லவங்கம் லவங்கப்பட்டை
கோர்த்திடுமரக்கும் மகிற்பட்டையாம்
தூர்த்துமறுகன் றேன்றச்சமன்தூக்கே 844

தூக்கியேபசும் பாலாலரைத்திடு
தாக்குமெள்ளெண்ணெய் தனியவிருநாழி
போக்கில்லாமற் புகழ்பதங்காச்சிடு
வாக்குதப்பாமல் மண்டலமுழுகிடே 845

மண்டலமுறை மதிப்பாய்முழுகிடில்
கண்டதேசுரங் கதறியலறிடும்
அண்டநோயு மகலப்பறந்திடும்
விண்டுதேறன் விரும்பியுரைத்ததே 846

உரைத்தாரா யுறுவேதமிதுவாகும்
நிரைத்தபொருள்கள் நெகிழுமிக்காவியம்
திரைத்தமாந்தர்க்குத் தெளிவாயுரைத்தது
வரைத்ததேரையன் வாக்குபொய்யாதிதே 847

நீர்ப்பாய்ச்சலுக்கு ஆக்கிராண நாசிகாசிட்சை.

பொய்யாதையா புகலுந்தேரன்மொழி
ஐயாமாந்தர்க் கறைகிறேனுக்கிராணம்
மெய்யாஞ்சாரம் விரும்பும்யவச்சாரம்
செய்யாரேவலின் சின்னியெடுத்திடே 848

எடுத்துப்பூநீ றெழிலானசுன்னமும்
தடுத்திடாமல் தனியப்பொடித்துமே
கொடுத்திடாக்கிராணங் கூறிநாசிக்கு
முடுத்தநீர்ப்பாச்சல் முனைந்தோடிப்போகுமே 849

போகுமேசிர நோயின்றலைவலி
ஏகுங்கானக மிடமிட்டொதுங்கிடும்
வாகும்பத்தியம் வறையுஞ்சீதளமாகா
தேகுமாமுனி தெளியவறைந்ததே 850

குருமுடிக்க வேதை

வேறு.

அறைந்தசாஸ்திரமெல்லா மன்பாய்ச்சொன்னேன்
அரியகுப்பிசெந்தூரம் சட்டிவைப்பு
நிறைந்துநின் றநீற்றினமும் புடத்திலேற்றி
நீள்காச்சல்கற்பூரத் தயிலமொடுகுழம்பு
திறைந்துநின் றகுளிகைநெய்யுஞ் சூரணமும்பொடியும்
தெளிவானகுருவழலை கூடமானால்
பறைந்துநின் றமருந்தெல்லாம் பலமாய்ச்சித்தி
பரிவாகக்குருமுடிக்கப் பதமறியார்தானே 851

அறியாமற்பாடிவைத்தோ றூல்கடோறும்
அங்கங்கேவழலைமுப் புவனேகங்கோடி
குறியானவிந்நூலிற் குறிப்பாய்ப்பாரு
குருமுடிக்கஅளவுநிரை புடமெரிப்புநன்றாய்

தெறியானபாடின நூல் கிட்டச்சென்றால்
நிசமானகுருமுடிப்பான் மருந்துஞ்சித்தி
பிறியாமல்பங்குனிசித் திரையிரண்டில்
பிலத்தவுவர்விளைநிலத்தைப் பார்த்துவாரே 852

வாசிவந்துநாழிக்கி யெண்ணுழிநீர்தான்
வரிசையாய்ப்பானைதனி லேற்றிக்கொண்டு
சேரிறுத்துமறுபாண்டத் தடுப்பிலேற்றி
சிறப்பாகவெரித்தபின் ரவியிற்காச்சி
ப்பாமுரியிற்கலக்கி யிறுத்துக்காச்சி
பரிவானதேசிநீரில் மூன்போற்காச்சி
சிரிதுதான்பூவுக்கு மூன்றுசத்தி
சிதறவிடயெத்தொழிலுஞ் சித்தியாமே 853

வேறு.

சித்தியென்றுமே செப்புவார்மாமுனி
நித்தியபூசை நிலைத்திடச்செய்வர்காண்
புத்திமேவும் புகலுக்குருமுறை
வெத்திகொள்ள வழலைமுடிப்பதே 854

முடிப்பார்பங்குனி முற்றிலுஞ்சித்திரை
கடிப்பார்வளர்தேதி நாட்டிலறியார்கள்
தடுத்துமவ்விடந் தாண்டிநடந்தாலும்
தொடுத்தபூமியின் றோற்றமறியாரே 855

அறியார்வழலை யறையும்மண்மேலைத்தான்
தெரியாதவண்ணர் தேளிந்திடுங்கற்பாறை
சிறியபூம்பாறையைத் தேறவேகாச்சுவார்
அறியவேமாந்தர்க் கறைந்தார்கள்சித்தரே 856

வேறு.

சித்திக்குங்கற்கோட்டைக் கல்லைத்தட்டி
சிறுமணியாய்ப்பொருக்கி முரியவிட்டுக்காச்சி
வற்றினபின்கழுவிப் பணம்பால்விட்டுக்காச்சி
வளமாகாவியுலர்த்தி தேசிநீரில்

சுற்றிவற்றியாறினபின் கரியிலூதச்
சுன்னமுமாமொன்றுக்கு நாலமுரிவார்த்து
பற்றுறவாய்க்கலக்கிவைப்பாய் காரோட்டில்தான்
பதனமாயார்க்குமிதைக் காட்டாமற்றுனே 857

காணுமற்பட்சம்வைத்துக் கலங்காதேதெளிவிறுத்து
காச்சிவைக்கச்சிறவுப்பாங் காட்டலாகா
ஊணுமற்கிரியுப்பு வொன்றுக்குநாலு
உற்றசலம்விட்டுவற்றக் காச்சிப்பின்பு
கோணமலெட்டுக்கு நாலமுரிவிட்டு
குறுக்கியபின்தேசிநீர் படியேகாச்சி
காணமல்மூன்றுப்பும் வகைக்கோர்பலமாய்
கனமாகச்சட்டியினிற் றேசிநீர்விட்டுலர்த்தே 858

உலர்த்தியேகல்வத்தில்விட் டரைக்கச்சேறு
உத்தமமாந்தாளிச்சாற் விட்டுஆட்டி
அலர்த்தியேவில்லைபிடித் துலர்த்திக்கொண்டு
அதன்மேல்கீழுவர்வைத்துச் சீலைசுத்தி
மலர்த்தியேமணல்குவித்துமேற் புடத்தைப்போடு
மைந்தனேயாறினபின் னெடுத்துவில்லை
குலர்த்திடவேகல்வத்தி லிட்டரைக்கக்
கூறுகிறேன்முப்பூரம் வீரம்காரஞ்சேரே 859

சேருண்ணமருந்தினிடை கழஞ்சிரண்டாய்
சீரானதுளிவிட்டுத் தாள்போலாட்டி
வாரதில்வெடியுப்புச் செயநீர்விட்டு
வளமாகஙாற்சாம மயனம்போலாட்டி
பாருபதம்வருகோம் வழித்துவில்லை
பருவமாய்பிடித்துலர்த்தி பகாக்கேளு
காருநீர்சுன்னத்தைச் சட்டியரைவாசி
கையாலேசெம்மியுவர் பரித்துமேலே 860

பரத்திவில்லைவைத்ததின்மே லுவர்ப்பூவிட்டு
பார்மகனேசட்டிஒரம்பச் சுன்னஞ்செம்மி
சிரத்தையொடுசட்டிமேல் மூடிச்சந்துவாக்கி
சிறப்பாகமண்ணரைத்துச் சீலைசெய்து

வாத்தையோட்டடுப்பேற்றி யெரிக்கும்போது
வாலையொடுவயிரவர்க்கும் பூசைவிடுவித்து
தூரத்திடுவாய்மற்றதெல்லாம் பேதனமாய்ச்செய்து
துறமேறிக்கமலம்பின் கடாக்கினிபாமே 861

ஆமேசாற்சாமந்தா னெரித்துமைந்தா
ஆத்தாளைப்பூசித்து அடுப்பைவிட்டிறக்கி
பாமேதான்மேற்சட்டி திறந்துவில்லேதன்னை
பதனமாயெடுத்தப்பா கண்ணிற்பாரு
வாமேதான்முப்பூவின் குருவின்மார்க்கம்
வையகத்தில்வைப்பறியார் பாரேநீதான்
தாமேதான்பெரிதான சாஸ்திரமுஞ்சொன்னேன்
தவறுதுகுருவழலை சூட்சமிந்நூலே 862

குருவாகவாயிரத்தைஞ் னூற்றைப்பாடி
குகையிலவைத்தேன்யாவருக்குங் காணுமற்றுன்
பெரியோராமகாரிஷிகள் பொதியையில்வந்து
பேசிநம்மோடிருக்கைபிலே நூலைக்கண்டார்
அறிவானசாஸ்திரந்தா னெட்டும்நன்றாய்
அன்பாகத்தெரிந்தெடுத்துத் தண்டஞ்செய்தார்
கருவானசாஸ்திரந்தா னூட்டுளோர்க்கு
நலமாகவிந்நூலும் நன்னூலாமே 863

வேறு.

நன்னூலாகும் நவின்றிடுங்காவியம்
இந்நூல்போலுரை யார்களென்னூலிலும்
பன்னூல்வயித்தியம் பாடினேனுயிரம்
சின்னூலன்னூறுந் தெளியவறைந்ததே 864

அறைந்தமாமுனி யாயுறுவேதமாம்
சிறந்தவாயிரத் தைஞ்னூறுகாவியம்
நிறைந்தமருந்து நெருங்கவமைத்துமே
திறைந்தசூட்சங்கள் தெரியமருந்திதே 865

வேறு.

மருந்தென்றவகைக்கெல்லாங் குருவில்லாட்டால்
வாதமும்வயித்தியமும் பலியாதப்பா
செறிந்தகுருமுன்செய்தோன் சருக்கோயில்லே
சூட்சந்தானின்னூலில் குருதானப்பா

அறிந்துகுருசெய்யாட்டால் மருந்தேயில்லை
அகடங்கள்செய்துவருஞ் செந்தூரங்கள்
திரிந்துவருமருந்துக்குக் குருகூடிற்றானல்
தீருமேநோய்களெல்லாஞ் சித்தியாமே. 866

சித்திக்குமிந்தநூல் முனிரிஷிகள்கையில்
தெரிந்தெடுத்தசாஸ்திரந்தா னெட்டுமீந்தோம்
வெந்திக்குநூல்களிலு மதிகசூத்திரம்
விதம்பலவாய்ப்படிவைத்தேன் கோர்வைமெத்த
முத்திக்குவித்தான மார்க்கமெல்லாம்
முயர்ச்சியாயாவருக்குந் தெரியவைத்தேன்
பத்தியமாந்தர்களுக் கிந்தநூலை
பகர்ந்திட்டேன்தேறன்வாக் குண்மைதானே. 867

உண்மையாமின்னூலில் வழலைமுப்பு
உலகத்தில்வயித்தியர்தா னறியமாட்டார்
பண்மையாய்நோய்களெல்லா மனிதர்க்கப்பா
பார்க்கறியாக்கன்மம்வந்து மருந்துகொள்ள
சண்மையாய்நூல்பார்த்து குருமுடித்துக்கொள்ள
சண்டாளநோய்களெல்லாந் தலறிப்போகும்
திண்மையாய்ப்பூமியில்நோய் தீர்ப்போமென்று
தீவினையால்முன்கர்மந் தீர்க்கவறியாரே. 868

தீருதற்குக்கருக்கடை யொன்றுரைத்தேன்
திறமானமருந்துபற்ப செந்தூரங்கள்
பாருகர்மந்தீர்த்துநீ கொண்டாயானல்
பறந்துபோம்நோய்களென்று பாடினேமெல்லாம்
சேருசிவபூசையொடு மந்திரசக்கரம்
சிதம்பரத்திலட்டகர்மந் தீரும்பாரு
அருமறியாதகர்மநிவர்த்தி வகைசொல்வோம்
அருமையிந்தநூலதனை யகலவிடலாகாதே 869

குழந்தைகட்கு சுகபேதி மெழுகு.

கலி வெண்பா.

அகனுக்குழந்தைகட்கு அன்னமேவுஞ்சுகபேதி
நிகலுங்கடுகுரோணிநேர்வாளம்

போற்றுமேயாமணக்கு புகலும்வசம்புடனே
தூற்றுஞ்சிறுதேக்கு துய்யானும் நேர்த்தியதாய்

பாரில்விளாசிரகமும் பகருநற்சீந்திலுடன்
ஊரில்வினையருக்குமோமமுடன் நாரியரே

பொங்குபொரிகாரமுடன் புகழுங்கடுக்காயும்
இங்கிதமாமேலரிசியியம்பிடவே பங்குதனில்

காற்பலமாஞ்சுரத்துக்கருநிலவாவாரை
வேற்பலமாங்கொடிவேலிவிளம்பிடவே யுற்பனமாய்

கூறும்பன்னீர்பூவுடனே குறிக்கும்ரேவல்சின்னியுடன்
தேறுஞ்சரக்குதெளிசமனாய் பாரினிலே

காடிதனிற்சுத்திசெய்து கழறும்பசும்பாலில்
தேடிபுட்டாவியுடன் செய்தபின்பு நீடியதாய்

சொல்லும்பசும்பாலதனில்தோன்றவரை நாற்சாமம்
வெல்லுஞ்சீனிகர்க்கண்டுவிளம்பிடவே தொல்லுலகில்

எட்டிலொருதித்திப்பாமிசைந்தாஸ்த்தாளியுடன்
சட்டமுடனற்றேனுஞ்சாற்றிடவே திட்டமதாய்

ஓங்கும்பதமாயரைத்து வுலகிற்சிறுபாலருக்கு
தீங்குசெய்யாதிந்தசுகபேதி பாங்குடனே

காலைச்சிறுசுண்டைக்காய் கழறவருந்திடுகில்
மாலைப்பொழுபேதியதுமாசருக்கும் பாலர்கட்கு

பத்தியமோயில்லைபகருமிச்சாபத்தியமாம்
சத்தியமாமெனமுனிவர்சாற்றினர் நித்தியமும்

வாதப்பண்டர்தானகற்றி வறையும்விரோசனபேதி
சீதப்பண்டஞ்சேர்க்காதே தெரிவயரே நீதமுடன்

செப்பமுடன்மாத்தருக்குத் தெளிந்தவாயுற்வேதமிது
ஒப்பமுடன்கைபமுறையாயுரைத்தாரே 870

ஒருதலைவலிக்கு நசியாக்கிரணம்.

கலிவிருத்தம்.

உரைத்தமாமுனி யொருதலைநோய்தீர
இரைத்தலிங்கமுந் தேர்ந்தநவச்சாரம்

கரைத்தபூரமுங் கருதுமனோசிலை
அரைத்துமேயெருக்கன் பாலாலாட்டிடே 871

ஆட்டியேசாம மன்பாயரைத்திடு
நீட்டுமேசிலை செடியவேபூசிடு
கூட்டுமோரவி குலாவியுலர்ந்தபின்
பூட்டுமேதிரி புகலத்திரித்திடே 872

திரித்துவர்க்கிராணஞ் சிறக்கப்பிடித்திடில்
தெரித்ததலைவலி திறமாகநீங்கிடும்
குறிதப்பாது குறிக்குமருந்திது
சரியதாகவே சாற்றினர்தேறனே 873

மன்மதபாணபுருஷோத்தமலேகியம்.

கலிவெண்பா.

தொல்லுலகில்மார்தருக்குத் தோற்றும்புருஷோத்தமங்கேள்
அல்லலில்லாவில்வவேரறைந்திடவே வெல்லும்படி
சூரத்துசிவிதைவேறுந்தோற்றுமிருவேலியுடன்
சாரற்றமுட்க்காவேளைசாற்றிடவே நேரொத்த
நன்னாரிசூர்சுவேரும் நலமானகோரையுடன்
பன்னாரிமுக்கத்தாரிபகருஞ்சங்கன் சின்னியுடன்
மூலமாங்கற்றாழை மூழங்கும்பிரம்பின்மூலம்
தாலமாம்நுணாப்பட்டை சாற்றிடவே வேலமாம்
பட்டையரசின்பட்டை பகரும்பூரிப்பட்டை
கட்டையருகன் கருவாய்ப்பட்டையுடன் திட்டமுடன்
பெருமருந்துபட்டையுடன் பேசுமுருக்கைப்பட்டை
அருநெல்லிப்பட்டையழிஞ்சிற்பட்டை குருமுறைகேள்
செவ்வியமாங்கொடுவேலி சிறந்தபோராமுட்டியுடன்
அவ்வியமார்துத்திபதின்மூலம் ஔவியமாம்
வேம்பினிடபட்டை விரும்புஞ்சீந்திற்றண்டு
தீம்புசெய்யாமுட்டிசித்தாமுட்டி சோம்புடனே

பூனைக்காஞ்சோரி புகலுங்கழுதாழை
ஆனைபால்விட்டேயவித்தெடுத்து சீனமுடன்

மாமஞ்சள்பரங்கியுடன் மணக்கும்பஞ்சாங்கமுடன்
திறமானதூதுவளையெலுமிச்சங் காயுடனே

கண்டமாங்கத்திரியுங் கருதுங்தூதுவளையாம்
அண்டமுடன்மூதண்டமறைந்திடவே தண்டுசேர்

புகழான ஆணிலையாம் போற்றும்பனைக்கிழங்கு
நிகழுஞ்சடாமாஞ்சில் தாளிசமாம் இகழில்லா

குருவேராடாதோடை குறிக்குமைசாலக்கிடியாம்
கருமுள்ளிப்பிரமியிலைகருந்துளசி மருவில்லா

கடலாஞ்சிப்பட்டையுடன் காட்டுமசுவகெந்தி
திடமானபுள்ளடியுஞ்சிறுமூலம் தடமான

சிவனரின்வேம்புடனே சிறக்கவொருபலமாய்
தவமானபாண்டத்திற்றூள்பொதிந்து நவமாக

பத்துப்படிசலத்தைப் பாங்காகக்கொண்டுமேதான்
சத்துயிறக்கிடவேதான்காச்சு சத்தியமாய்

யொழத்தைப்பதனஞ்செய் கேளுஞ்சூரணத்தினுசு
நியாயமாய்க்கற்கவகைநிகழ்த்துகிறேன் உபாயமதாய்

தென்னம்பூபன்னீர்பூ தேர்ந்தவாவாரம்பூ
கன்னல்காமேஸ்வரன்பூகணக்குடனே நன்னயமாய்

செப்புந்திரிகடுகு சேர்ந்ததிரிபலாதி
ஒப்புமெலுமிச்சம்வேருடனே மெய்ப்புடனே

நிலத்தின்பனைக்கிழங்கு நேருமசுவகெந்தி
கலப்பைக்கிழங்குகருஞ்சீரம் புலப்புடனே

சிறுதேக்குசோம்புமல்லி சேர்ந்தகுராசானியோமம்
மறுவாக்கில்லாதமணப்பூவாம் குருவாக்கு

கானகத்திநற்சீரங் காட்டுவெந்தயமுடனே
போனகத்தினேலம் புகர்முள்ளி மானேகேள்

ஜாதிக்காய்ஜாஜீரா சாற்றும்லவங்கமுடன்
சோதியாம்சாம்பிராணிப்பூவுடனே மேதினியில்

முல்லியாம்லவங்க முறையும்லவங்கப்பத்திரி
வல்லியம்பட்டை வால்மிளகு மெல்லியரே

அன்னாசிப்பூவுமறையும்பூளைக்காவித்தும்
சன்னாசிப்பூண்டுடனேசண்பகமும் மின்னேகேள்

மேவுஞ்சலாம்பிசினுமேன்மையுள்ளகேக்குவிரை
தாவும்பேதானாஇஸ்கோல்விரையாம் பூவுலகில்

பார்த்துமேருமஸ்து பகருந்துத்திவிரையாம்
ஆர்த்துமாவாரையருமுருங்கை சேர்த்தியதாய்

காட்டுமுருங்கைவித்து கருதுமரசன்வித்து
நீட்டுமேயத்திவிரை நிலாவரையாம் தாட்டிகமாய்

ஆலந்துளசிவிரை யறையுங்கஞ்சாவித்து
சாலம்பிசினுடனே சாற்றுகொத்தான் வேலம்பட்டை

கொத்தான்பத்திராட்சி கூறுஞ்சமுத்திரர்வும்
பத்தானசூரிவித்துபருத்திவிரை சுத்தமதாய்

பூவரசன்பட்டை புகலுஞ்சோசிவித்துடனே
நாவற்பட்டைசெம்பருத்திநெருஞ்சிபுடன் பாவையரே

கூறும்விளாம்பிசினுங் குறிக்குமிலவம்பிசின்
வீறுமுருங்கைப்பிசின் விரும்பிடவே சீருடனே

சிறுநாகப்பூவுடனே சேர்ந்தபீசுபந்து
கருவானதிராட்சிப்பழங்கூட்டி மருவான

பூமிசர்க்கரையுடனே புகலுங்கருடக்கிழங்கு
தாமிதமாம்பேரீச்சங்காய்கூட்டி நேமமுடன்

ஏலரிசிதாளிசமு மெழிலாமகிமதுரம்
கோலமுடனக்ரோட்டியக்ராரம் சீலமுடன்

கூகைநீர்சதகுப்பை குறிக்கும்லவங்கப்பத்திரி
வாகைபெருவாகைவறையுமதம் தோகையரே

கல்காருகுங்குமகுங் கர்க்கடகச்சிங்கியுடன்
சொல்லுஞ்சலாசத்துவாய்விளங்கம் மெல்லியரே

கார்போகவரிசிகழறும் ரேவல்சின்னியுடன்
ஓரிதழின்தாமரையு மொன்றாக நேரிழையே

சிந்திற்சர்க்கரைவகைக்குச் சிறக்கவொருபலமாய்
போந்தமுடன்சூரணித்துப் புகலக்கேள் ஏந்திழையே

சூரணத்தையப்பாரிசுருக்காய்ப்பதனஞ்செய்
காரணத்தைச்சொல்லுகிறேன் காரிழையே பூரணமாய்

இரசவகை.

பாடுகிறேன்மூலிரசம் பகருமுருங்கைப்பூ
தேடுஞ்செவ்விளநீர்நெல்லிக்காய் தோடயமாய்

நீடுந்தேங்காய்ப்பாலுடனே நெருங்குஞ்செங்கரும்புரசம்
தேடுந்தண்ணீர்விட்டான்பசும்பாலும் கூடிபெடு

உத்தமனேகியாழமதையோங்கச்சுண்டக்காச்சியேதான்
பத்தியுடன்ரசவகையைப் பாலிவீடு சத்தியமாய்

சீனிச்சர்க்கரையுடனே சிறந்தசூரணம்யாவும்
தேனுநெய்யும்விட்டுக்கிளறிடவே மானேகேள்

பதமாமெழுகுபதம் பாங்காகக்கிண்டிடுகில்
நிதமாம்பச்சைப்பூரங்கஸ்தூரி சதமுடனே

சாம்பிராணிப்பூவுஞ் சாற்றும்பன்னீர்வாசமுடன்
தாம்பணிந்துலேகியத்தைத்தானிறக்கி பாம்பணியும்

பரமனடிதாள்பணிந்து பகர்ந்திட்டலேகியத்தை
கிரமுடனேயந்திசந்திமண்டலந்தான் கிரமமுடன்

தின்றுவரில்மாந்தருக்குத் திறமாமதகரிபோல்
என்றுபலங்குன்றுதியம்புற்றேன் பன்றியுடன்

பத்தியமோகாடை பகருமுடும்பாகும்
நித்தியமிறைச்சியுடன்பாலாகுஞ் சத்தியமாய்

கோழியுடன்முட்டை குறிக்குமயிலாகும்
பாழுடனும்பொன்னும் பாவையரே ஆழியுடன்

விந்துறுங்கேணியாம் விரும்புநாற்சாதியுடன்
அந்தமுடன்போகிப்பா யனங்கன்போல் சொந்தமதாய்

எந்நாளும்லீலையிலே யெழில்மாதர்சோர்வார்கள்
உன்னுமெல்லாங்கழிப்பாயுத்தமனே நன்னயமாய்

அரனெனக்குயிர்தமுறை யாச்சியுமையாள்கொடுத்தாள்
திறமுடனேயென்னாளுந்துதி. 874

வேறு.

கன்மத்தால்வந்தவினை தீராவிட்டால்
காயமழிந்தேபிறக்கும் கன்மநோய்வருகும்
சென்மத்தில்விந்துவிட்டுச் செனித்தவுடன்வருகும்
சீக்கிரமாய்நிவர்த்திசெய்து தீட்சைசெய்வாய்
பன்மத்தில்துன்மார்க்கப்பாவிகள்தானாலே
பாராமற்பொருளறியார் பாழ்வினைக்கிடாவார்
கன்மத்தைநிவர்த்திசெய்யக் கடுகக்கேளு
கனத்ததயாநிதிகிடைத்தால் தருகாதுநோயே 875

நோய்தீரத்தக்கதுதான் தங்கமோடு
நிலையானகாரீய மூன்றுந்தட்டி
வாய்தீர்த்தசிவசிதம் பரத்தைநன்றாய்
வளமாகத்தங்கத்தில் வகையாயெழுதி
போய்தீர்த்தசித்தறுபத்து நான்கும்
பூவுலகில்தானும் புதுமைமெத்த
நாய்போலேதிரிவார்கள் நாட்டில்மாந்தர்
நலமாககுருவறிந்து வடைத்திடாயே. 876

அடைத்தவினங்கணக்கோடு பியணவபீசாட்சரத்தை
அரைத்தோறும்பஞ்சாட்சரமடைத்தபின்பு
கடைத்தகுலம்சிவசத்திகணபதியும்
கனகபராமாநந்திவைரவர்பீசம்
திடத்துடனே அரிசத்தி சூலமிட்டு
திரள்கர்மதம்பணத்தை யுச்சாடனமாய்ச்சேர்த்து
நடத்தடாஐயாயிரமந்திரந்தான்
நலமாகவுருவதனைச்சொன்னோம்நாமே. 877

வேறு.

நாமேகலசம் நவிலும்பதினாறு
ஆமேவராக மறையுமாவமாம்
காமேபொலியுங் கருதுவெள்ளாடாகும்
தாமேதேரையன் சொன்னமொழியாரே. 878

வேறு.

சொன்னமஞ்சள்தெர்ப்பைபவல்வடையரிசி
சேர்த்தபொரியெள்ளுருண்டைசர்க்கரையும்
வின்னமில்லாத்தேங்காய் பழவர்க்கங்கள்
விருப்பமுள்ளநெய்புட்பதினுசெல்லாந்தான்
சொன்னமுள்ளசாம்பிராணிகூடன்மாவிலையும்
சொகுசானகுருவேரும்வாடைகெந்தம்
நன்னதமாய்ப்பலகாரந் தயிரும்பாலும்
நலமானசொர்னபுஷ்பமடைக்காயிலையே. 879

இலைபானமாம்பொடியும் நோக்கிப்பாரு
இதமாகக்கன்மவுச்சாடனத்தைப்பாரு
புலைபானபெலியும்வஸ்து வைத்திட்டாக்கால்
பூரணமாய்க்கன்மமதுதீருமப்பா
கலைபானவுச்சாடனமூலிகையோடு
கருவாகவிந்நூலிற்பாடிவைத்தேன்
சிலைபானயித்தொழில்வித்தையெல்லாஞ்
சிறப்பாகமானிடர்க்குத் திறந்திட்டேனே. 880

வேறு.

திறந்தமாந்தற்க்குத் தீரவுரைப்பேனுன்
துறந்தவாதமும் ஞானமும்யோகமும்
நிரந்தரமான நேருமாந்தரீகம்
சிறந்தவதர்வண வேதமுறைத்தோமே 881

உரைத்தமூலி யுபயகருமூலி
திரைத்தமூலியுஞ் சிறந்தவிஷமூலி
வரைத்தவெண்சாரை வகுக்குங்கருஞ்சாரை
குரைத்தமுப்புவும் கூறுஞ்சிததாந்தமே 882

வேறு.

சித்தாந்தமறிந்தபின்பு வேதாந்தம்புகுந்தால்
சிவன்பாதங்கைலாயஞ்சேர்ந் தடைவாரொடுக்க
வத்தாதவயித்தியர்தான் மருந்துவைக்குந்தொழில்கள்
வளருமந்த்ரமயேந்திரமும் வழலைகுருமுடிக்க

கொத்தானசாஸ்திரமுஞ் சூஸ்திரமும்பார்த்து
குணமானயினஞ்செயநீர் திராவகமுமிறக்க
அத்தானதொழில்வாய்த்த குருவைக்காணேம்
அறிந்தவர்களறிவோமென் றுரையார்தானே 883

முறையானவயித்தியர்கள் பார்க்கவென்றால்
மீளாதபிணியாளனுடை பேர்நாளுங்கேட்டு
பறையாதேயொருவருக்கும் வசைமூலியுண்டு
பகரக்கேள்வாதமுந்தி வருமாதவாராம்
சிறைதொட்டாக்கால் வாடிநரிமிரட்டி
சிவரூபநிலைத்தபிரான் மந்திரமோதி
குறையாமல்வேர்பிடுங்கிக் கொண்டுநோய்கள்
குறையெழுபத்திரா யிரத்துக்கெல்லாம் 884

வேறு.

எல்லாலோக மெழிலாவலோகம்
புல்லாமணக்கு போற்றும்பஞ்சாட்சரம்
சொல்லாவுருவு தோற்றுமாயிரமாம்
நில்லுங்குளிசம் நோனாசியே 885

வேறு துத்தக்குளிகை.

நாசியேமயில்துத்தம் பலந்தானென்று
நாட்டிலுள்ள்தாளகமும் பலந்தான்மூன்று
பேசியேகற்சுன்னம் பலந்தானுனு
பிணங்கலேவாழைமரச் சாற்றாலரைத்து
தேசியாங்குகையில்வைத்துச் சீலைசெய்து
சேர்த்துநீருக்குடத்தி லெரித்தெடுத்து
ஆசியேதுளசியிலைச் சாற்றரைத்து
அப்பனேமிளகுபோ லானதொக்கும் 886

ஆனதோருண்டைதனை யிஞ்சிச்சாற்று
லருந்தவேசீதசுர மகலுமப்பா
போனதோரெருக்கம்பால் கோதுமைமாவில்
புகட்டியேபுதைத்துவைத்துப் பின்பெடுத்து

காணகத்துச்சதுரக்கள்ளிப் பாலிலாட்டி
கையடைபோல் தட்டியேநெய்யிற்பூசி
தானமாமடைசுட்டு வைத்துக்கொண்டு
சாப்பிடுவாய்கழற்பருப்பு வெல்லம்நெய்யே 887

நெய்யாகுஞ்சோறுடனே மோருமுண்ணு
நேர்த்தியாய்ப்பாண்டுகா மாலைபோகும்
நையுமேகெந்தகமுங் காட்டுப்பாகல்
நற்கிழங்குகடுக்காயுஞ் சமனாய்க்கூட்டி
கையினாற்செம்பிலைச்சாற் விட்டுஆட்டிக்
கதிக்கவேநீசேர்த்து தன்னிலாட்டி
மெய்யாகவுழுந்தளவு வுண்டைசெய்து
வெய்யில்வையாதெடுத்துநீ நிழலிலுலர்த்தே 888

உலர்த்தியதோர்குளிகைதனைத் திரிகடுகிலிட்டால்
ஓடும்பதின்மூன்றுசன்னி சுவாசகாசம்
பெலர்த்திட்டபாண்டுவுடன் கிராணிவாய்வு
பேரானபுண்ணுபதி னெட்டுகுட்டம்
துலைத்திட்டயேழுவகை சுவாசகாசம்
சுருக்கானவற்புதமாம் வாதந்தீரும்
மலர்த்திட்டுப்போகாம லின்னங்கேளு
மகத்தானசுரக்குளிகை வணங்கிச்செய்யெ 889

வணக்கமுடன்துத்தமைந்து பிரதமொன்று
மயிலாகுந்துருசுவொன்று நாபிமுக்கால்
இணக்கமுடன்தாரமொன்று கூடச்சேர்த்து
இயலானபாகலிலைச் சாற்றாலரைத்து
கணக்குடனேபயரளவு வுண்டைசெய்து
இயாழம்விஷ்ணுகாந்தியிலை யுரைத்துக்கொள்ள
பிணக்கொன்றுமில்லையப்பா சுரங்களெல்லாம்
பேசாமலோடிவிடும் பேணிச்செய்யே 890

பேணியேபிரதமுட னப்பிரேசஞ்சேர்த்துப்
பிசகாமற்சமன்கூட்டி மருக்கொழுந்துச்சாறு
ஏணியாயிருவேலிச் சாறுங்கூட்டி
இதமாகத்தானரைத்துக் கடுகுவுண்டை

துணிவாகவிடாச்சுரமும் போகவேண்டி
துடிப்பாகவிருவேலி நீசுத்தண்ணீர்
ஆணியாமுண்டைதனை யுரைத்துக்கொள்ளு
அஞ்சிவிடுந்தோஷசுரமானெருக்கஞ்சாரே 891

சாறுமிரதங்கெந்தகமுந் தாக்கும்தாமிரமனோசிலையும்
வேறேயாகவெண்காரம் விளங்கும்வகைக்குவோர்கழஞ்சு
கூறுவதற்குமெட்டெடையாங் கூட்டுமிளகுபொடிசெய்து
திரவடித்துவடிகொண்டு தின்னப்பணவிடைசூரணமே 892

வேறு.

சூரணமாம்வெற்றிலையில் மடித்துவுண்டு
சுகமாகவெந்நீர்தான் குடிக்கத்தீரும்
காரணமாய்ப்பாண்டுவுடன்சோகைதீரும்
காமாலைகுன்மமுடன் வறட்சிதீரும்
வாரணமாம்வலிப்புடனே பசிப்புதீரு
மகத்தானகுளிர்காச்சல் மாறிப்போகும்
பூரணமாம்பின்னையுமோர் பித்தந்தீரும்
புகழானகுளிகைரதம் புகலக்கேளே 893

வேறு.

இரதங்கெந்தகம்வெண்கார மேவுந்தாரமனோசிலையு
மருவுந்தாம்பரபற்பமுடன் வண்மைதிப்பிலிமிளகுடனே
உரிமைமொச்சிக்கண்டங்காலி யோங்குமாடாதோடையிலை
பெருகுசாற்றால்தானரைத்து பேணிப்பயராளவுண்டைசெய்யே

வேறு.

செய்துமாயன் திருவடிபோற்றியே
சைதுமேநிழல் தனிலவுலர்த்திடு
கொய்துமேயிளம் பதமாயிடித்திடு
பெய்துசீசாவிற் பேணிப்பதஞ்செய்யே 895

வேறு.

செய்தவுண்டைக்கனுபானந் தேனேசர்க்கரையிஞ்சிபிற்கேள்
ஐயாகுழையாச்சுவாசமற்று வானவிலையிருமல்சுரம்

வெய்யுங்குன்மம்பிளியுடன் மிகுத்தசுரவகைதானனைத்தும்
உய்யவிடமுமில்லையென்று வோடிப்போகுங்கண்டாயே 896

கண்டேபிதற்குப்பத்தியந்தான் கருதுந்துவரையரைக்கீரை
அண்டர்புகழுமிஞ்சிசுண்டி யாகுமென்றார்தேரையனும்
தொண்டர்புகழும்பராபரனார் சுகிர்தபாதம்போற்றியபின்
மிண்டிவினைபோஞ்சராங்கிஷந்தான் மிகுத்தவதிசாரந்தீர்ந்திடுமே

தீரும்நெல்லிதிப்பிலியும் திக்கோரொன்றுமுக்கழஞ்சு
பாருகெந்திராபியுடன் பகர்வோரொன்றுகழஞ்சாகச்
சேருமிஞ்சிச்சாறரைத்துத் தெளியுங்குன்றிப்பிரமாணம்
நோயுலர்த்தியிஞ்சிலிட நிகழும்வியாதியினிகேளே 898

கேளீர்சுத்திப்பிரமேகங் கிளர்ந்தசன்னிபதின்மூன்றும்
நாளுமுடலில்வாதம்பல நன்றாய்த்தீருந்தப்பாது
ஆளுமாவின்பாலுடனே யரிசிகூடத்தான்போட்டு
மூளும்பசிக்குத்தான்கஞ்சி முன்னோருரைத்தமொழியிதுவே 899

வேறு.

மொழிந்தவாயுறு வேதமிதுவாகும்
அழியுமேனிக் ககலும்பிணிபற
லழியுந்துறையும் வகுக்குமிந்நூலிது
மொழியுமாமுனி முறையாய்வகுத்ததே 900

வேறு.

இதுவேகேளுவெண்கார மிதமனோசிலைமத்தவிரை
பொதுவாம்நாபிவகைகழஞ்சு போற்றுந்திரிகடுகறுகழஞ்சு
மெதுவாந்தேசிச்சாறரைத்து மீறுங்குன்றிப்பிரமாணம்
அதுவாந்தேசிச்சாற்றிலிட வானசுரங்களகன்றிடுமே 901

அண்டசுரக் குளிகை.

அகன்றரோகணிதிரிகடுகு வானவிலுப்பைப்பூவுடனே
புகன்றகோழிதன்னதனிற் புகழுமஞ்சட்கருவெடுத்து
அகன்றவிதுவுஞ்சரிசமனா யானமுலைப்பால்விட்டரைத்து
இகன்றசுண்டைக்காயளவு யிஞ்சிமுலைப்பால்குணமாமே 902

குணமாந்திப்பிலிசுக்குடனே கூட்டுமிளகுகடுகுடனே
மணமாஞ்சாயமோமமுடன் மறங்காதிப்பிலிக்கட்டையுடன்
தணலாமிஞ்சிச்சாற்விட்டு தாங்காதரைத்துமுழுங்கிடவே
இணமாம்வாய்வுமிருமலறும் எல்லாச்சுரமும்விட்டோடும் 903

வேறு-இருமலுக்குச் சூரணம்.

ஏகுமேகற்கடகச் சிங்கிதேக்கு
இதமானதிப்பிலியு மமுர்தந்தான்றி
போகுமேசடாமாஞ்சி சுக்குகோஷ்டம்
பொருந்தியதோர்வழுதிலையுமிளகுயிர்து
ஆகுமேதூதுவளை கண்டங்காலி
யடுத்தநெல்லிபருப்புடனே பொரிபுங்கூட்டி
வாகுபெறவறுத்துநீ பொடியதாக்கி
வளமாகத்தேனிலுண்ண விருமல்தீரும் 904

சுரங்களுக்குச் சித்தாமணிக்கியாழம்.

தீருமேசுக்குடனே சீந்தில்கூட்டி
திறமானயிருவேலி விலாமிச்சோடு
பாருயிருநாழிநீ ரெட்டொன்றாக்கிப்
பதறுமல்திப்பிலியை வறுத்தக்கொண்டு
சேருநீகியாழத்தின்மேலேதூவி
செலுத்துவாயிருநேரங் கியாழந்தன்னை
மாறுமேசுரங்களெல்லாம் விட்டேபோகும்
மயக்கமுடன்தாகமெல்லா மாறிப்போமே 905

வேறு.

சுரங்களுக்குப்பூபதிக்கியாழம்.

போமேதான்றிகடுகுநெல்லி போற்றுந்தாமரையிலவங்கம்
ஆமேகொன்றைத்தோலுடனே யரியகழஞ்சுக்கோரொன்று
நாமேசொன்னேயிருநாழி நல்லநீரில்வெந்திறக்கி
நாமேதிப்பிலிதூவியுண்ணத் தாங்காச்சுரமுந்தாங்காதே 906

வேறு.

சண்டமாருதக்கியாழம்.

தாங்கர்ததாமரையின் கிழங்குச்சாறு
சம்மட்டிமதுரமுட னேமங்காயம்
பங்கமில்லாநன்னாரி வேறுமிந்து
பகரிலுப்பைப்பூவுடனே சமனதாக
சிங்காரமானதொன் றிருகழஞ்சு
சேரவேகாச்சிநீ யெட்டொன்றாக்கி
பங்கமில்லாத்திப்பிலிமேற் பொடியைத்தாக்கி
பாவனையாய்க்கொள்ளசுரம்பாழதாமே 907

இதுவுமது-வேறு.

பாழாச்சுரமும்பாழுடலை பகரும்வெளிவிட்டேதற்கு
நீழாய்க்கிராம்புமதுரமுட னெருக்குக்கோஷ்டம்பேய்ப்புடலை
தாழாய்ச்சுக்குசிற்றரத்தை சாற்றுந்தேவதாரமுடன்
மீழாய்க்கியாழம்விரும்பியிடில் மீளாச்சுரமுந்தான்போமே 908

போமேசுரமுந்திரிதோஷம் பொல்லாச்சன்னிபதின்மூன்றும்
ஆமேபித்தகாற்பதுவு மறையும்வாதமெண்பதுவும்
வாமேசேத்துமந்தொண்ணூறும் வரையும்சாத்தியபிணியாகும்
போமேமுனிவர்சித்தர்களும் புகன்றார்புகன்றார்புகன்றாரே 909

வேறு.

புகலுமாயுறு வேதமிதுவாகும்
நிகலும்வயித்தியர்க் கெழிலாகுமின்னாலு
பகலுநட்சத்திரம் பானுகித்தல்போல
சகலமார்க்கமுஞ் சாற்றினார்தேறனே 910

தேறன்மாமுனி தெளியவுரைத்தநூல்
கூறவாயுறு குறிக்குமிக்காவியம்
தீரமாந்தரே தியங்கித்திரியாதீர்
சேரமாமுனி தெளிந்ததிந்நூலாமே 911

வேறு-சுரங்களுக்கு சௌபாக்கிய சுச்சிதக்கியாழம்.

ஆமேநெல்லிகடுகுதான்றி யாகுமமிழ்ஞ்சியிருவேலி
தாமேசொல்லுமிலாமிச்சு தமர்த்தர்தாமரைக்கிழங்குடனே

ஓமேயோரொன் றிருகழஞ்சு வெள்ளியுரீரிலெட்டொன்றாய்
வேமேவெந்துகுடிப்பீராய் வெதும்பிமில்லைவிதியெனவே 912

விதியேயெனும்வெண்காரம் வேண்டுந்தண்ணீர்பதக்காக
கெதியாய்நீரைவெதுப்புடனே கூட்டிக்கொள்ளகொள்ளுமதிற்
சதியாதிருந்ததெமக்கென்று தாமமதியச்சாருடனே
பதியேயல்லகாணுமிது பாரீர்சுரமும்பையெனவே 913

வேறு.

பையச்சுக்கு பகரும்வசம்புடன்
துய்யவருகு தோற்றுங்கிராம்புடன்
நையரோகணி நவிலும்பீதாம்பரம்
செய்யபீலியுஞ் சோவிலும்பையே 914

வேறு-சுரங்களுக்கு ரத்நசிந்தாமணிக்கியாழம்.

பய்யேசிறுகாஞ்சொரியுடனே பருத்தசீந்தில்தொடையிலையும்
செய்யசிறுவழுதலையுஞ் சேருஞ்சுக்குவன்னிவேர்
மையவிடிக்கவரைக்கழஞ்சு மருகக்காச்சியெட்டொன்றாய்
நையவெடுத்துக்குடிப்பீராய் நமனுஞ்சுரமுநாடாதே 915

சுரங்களுக்கு சர்வபாணப்பிரயோகக்கியாழம்.

நாடுஞ்சீந்தில்வேப்பீர்க்கு நல்லநெல்லிகடுதான்றி
போடாப்புடலும்ரோசினையும் போற்றுஞ்சிறுகாஞ்சொறியுடனே
பாடாப்பகருமபெருங்குருமபை பதித்தபட்டைவேருடனே
கோடாதிருந்துயெட்டொன்றாய்க் குடிப்பீர்கழஞ்சிதேனுடனே

தேன்சிறுதேக்குநிலவேம்பு திப்பிலிகோஷ்டமுத்தக்காசு
வான்சிறுகாஞ்சுபற்பாடக மதிக்குஞ்சீந்திகத்திரிவேர்
கான்சிறுசுக்குநாழிநீர் நண்பாய்க்காச்சியெட்டொன்றாய்
தானதுமூன்றுநாள்குடிக்கச் சகலசுரமும்வாராதே 917

வாராய்சுக்குசீந்தியுடன் மருவும்வழுதலைகத்திரிவேர்
நாராங்கோஷ்டமுடன்கழஞ்சா நண்பாய்த்தகர்த்திருநாழிநீர்
பாராய்கியாழமெட்டொணருய்ப் பருகக்காச்சிக்குடிப்பீராய்
சேராய்வந்தசுரங்களெல்லாஞ் சிதறிப்போருங்கண்டீரே 918

இதுவுமது-வேறு-மேகசுரந்தீரக்கியாழம்.

கண்டபோது கழறுஞ்சுரமற
விண்டுமேகூகை விரும்புமறுகனும்
நண்டுளவர்தனி மாலைக்கொன்றையாம்
பண்டுமெதுரம் பாவகாகக்கூட்டிடே 919

கூட்டியொன்றாய்க் குலாவியிடித்துமே
நீட்டிப்பாண்டத்தில் நோய்க்கியாழஞ்செய்
மூட்டிப்பஞ்சநாள் முறையாயருந்திடில்
பூட்டுமேக சுரம்பறந்தோடுமே 920

ஓடுமேக முறையுமரையாப்பு
நீடுங்கிரந்தி நெருங்கும்பிரமியம்
வாடுமுன்விரை வாதக்குடச்சலும்
ஓடுமேபுளி யுப்புநீதள்ளிடே 921

தள்ளடாபத்தியம் மூன்றுநாள்காரு
விள்ளடாமணக் கெண்ணெயில்தான்முழு
கொள்ளடாபுளி காடைகவுதாரி
அள்ளடாமுறை யருமுனிகண்டதே 922

வேறு.

கண்டதொருசந்தனம் நன்னாரிவேரு
காட்டில்கொட்டிக்கிழங்கு செவ்வழுநீர்கோஷ்டம்
மிண்டதொருமுந்திரிகை யுலுப்பைப்பூவு
மீறுமலிருகழஞ்சுகூட்டிக்காச்சி
சுண்டவேயெட்டொன்றாய்க்கியாழங்கொண்டாற்
சுரமனைத்தும்போவதுதான்சுருக்கேகேளு
பண்டுள்ளசுரங்களெல்லாம் பறந்துபோகும்
பாகமாய்க்கியாழமதைப் பகருவீரே 923

வேறு.

பகருங்கியாழம்பிணியறவே பறக்குமாந்தர்க்குப்பாவையரே
நுகருங்கண்டுபெறங்கியுடன் நோக்குஞ்சுக்குசதாவேரி
தகரும்வில்வம்நெற்பொரியாஞ் சாற்றும்புடலைபற்பாடம்
மகரப்பூவும்வெண்கடுகு மதிப்பாய்க்கியாழம்பருகிடே 924

பருகிப்பழத்தின்முந்திரியும் பறுத்தவிலாமிச்சிருவேலி
வரும்பேரீச்சுசரிசமனுய் மறாகக்காச்சிக்குடிப்பீராய்
குருகிற்சுரமும்பாதாபங் குதித்துவோடிப்போவதற்கு
மருகிக்கியாழந்தான்கொள்ளு மருண்டுபோகுங்கண்டீரே 925

வேறு.

கண்டதொருகியாழமொன்று சொல்லக்கேளு
கசடானசுரம்விட்டுப்போவதற்கு
மண்டலத்துசீந்திபதி னைங்கழஞ்சுகூட்டி
வகையானசுக்குநாற் கழஞ்சிகூட்த்
தண்டாம்லிடித்திடுவாய்த் தூளதாகத்
தனிநீரயெட்டொன்ருய்க்கியாழங்கொண்டாற்
பண்டுள்ளசுரங்களெல்லாம் பறந்துபோகும்
பாவனையாய்த்தேன்கூட்டிப் பருகநன்றே 926

வேறு.

நன்றேமதுரஞ்சுக்குடனே நறுக்குமூலந்தோடைவிலை
இன்றேநீர்தானிருநாழி யிடித்துக்காச்சியெட்டொன்றுய்
சென்றேகுடிக்கச்சுரங்கள்விட்டுத் தெறித்துப்போகுங்கண்டீரே
குன்றேமுலையாள்காந்திமுத்தங் கூட்டிக்கொள்ளக்குணமாமே

வேறு.

ஆமேதிப்பிலி யரையும்விடையமாம்
போமேவில்வமும் போற்றுங்கொடுப்பையாம்
தாமேநெல்லியுந்தான்றிகடுக்காயும்
நாமேசரக்கு நவிலுங்குணமாமே 928

வேறு.

குணமாம்ரோகணிசெவ்வியமுங் கூட்டுங்கடுக்காய்சுக்குடனே
மணமாஞ்சாரணைமரமஞ்சள் வைக்குந்தேவதாரமுடன்
பணம்போல்நீரிலெட்டொன்றுய்ப் பறக்கக்காச்சித்தானிறக்கி
உணவாய்த்திப்பிலிமேற்றாவி யுகந்துகொள்ளச்சுரமறுமே 929

அறுபேயிளகுகோஷ்டமுட னுணகுமிழுவேப்பலகு
குறுகுங்கொத்தான்முத்தமுடன் கொள்ளிங்தேவதாரஞ்சேர் [ன்
மறுகொங்காணிபெருங்குரும்பை வைக்கும்புடலோவிடையமுட
இறுநாஞ்சோதிசிற்றெல்லி சேர்த்தேகியாழஞ்சாமதனும் 930

அகலுங்கொன்றைதான்றியுடனுரும்ரோசினைவேப்பலகு
புகலுமுத்தக்காசுசுக்கு பொதுவாமூலஞ்சிரகமும்
வகையாய்க்கழஞ்சுதான்வாங்கி வற்றக்காச்சிக்குடிப்பீராய்
தகையாத்திப்பிலிமேற்பொடியாங் தக்காதெடுத்துக்குடிப்பீரே 931

குடிக்குஞ்சுக்குமுத்தக்காசு கூட்டுசாரணைவேப்பலகு
முடிக்கக்கேளாய்யோரொன்று முருகுமெள்ளுமுக்கழஞ்சு
படிக்குப்படியேமேலிட்டுப் பையக்காச்சியெட்டொன்றாய்
மடிக்கப்பொடியேமேலிட்டு மதித்துக்குடிசுரம்வாராதே 932

வேறு.

வாராதையா வருத்தமுறைபிது
தீராரோகமுந் தீரச்சுரமற
பூராதோடையும் புகலும்வெண்குன்றியாம்
சீராமுத்தஞ் சிறந்தயிருவேலி 933

வேலிகோஷ்டம் விரும்புமக்ராகரம்
மூலிவெட்பாலை முகிழுங்கருநொச்சி
பாலிகையான் பகருந்தழுதாழை
சாலிவாகனன் சாற்றுமூலிகூட்டே 934

கூட்டியொன்றாய்க் குமுறக்கியாழஞ்செய்
பாட்டுதப்பாமல் பாகையருவேளை
நீட்டுபத்திய நோயருந்திடில்
வாட்டுமேசுரம் வரைந்தோடிப்போகுமே 935

போகுமேசுரம் பொல்லாவிஷச்சுரம்
ஏகுங்காந்த லெழிலாய்ப்பறந்திடும்
நோகுமேவாதம் நுவலும்பிரமியம்
வாகுங்கானகம் வரையும்வறைவாரே 936

வேறு.

வாராய்சிவதைக்கண்டங்காலி வளருஞ்சுக்குமிளகுடனே
ஏராதென்னச்சொல்லுகிறே மிதுவுமோரொன்றாமுக்கழஞ்சு
காராய்குழலேயெட்டொன்றாய்க் காச்சுதிப்பிலிமேற்பொடியாம்
சீராய்மலையாயிப்போதிற் றிசமுப்பருகிற்றிண்ணமதே 937

திண்ணமதுவேதோடையிலே சிந்திற்கொடியும்வழுதலையும்
தண்ணுஞ்சுக்குவகையொன்று தாகைக்கொள்ளுமுக்கழஞ்சு

வண்ணம்புதியநீரிலிட்டு வற்றக்காச்சிவெட்டொன்றாய்
தண்ணுத்திப்பிலிமேற்பொடியாய்த் தாக்கச்சுரமுந்தருநாதே

வேறு.

தருகாதகடுக்காயுஞ் சிவதைவேருந்
தாக்குசுக்குரோகணியுங் காந்தங்கூட்டி
முருகியதோர்களிப்பாக்கு சீந்திற்றண்டு
மோதுகண்ணிச்சாறுடனே மொருக்கிரண்டாய்
உறுதியாய்நீரிலிட்டு வெட்டொன்றாக்கி
யுடனுகத்திப்பிலிமேற் பொடியுக்கொள்ளு
தறுகாதுசுரமேகும் வயிறுபோகும்
தனிக்குளிகைகெந்தகத்தைச் சாற்றுவோமே 939

வேறு.

கெந்தகம்பச்சைநாபி கேளுநீமிளகுசுகம்
வெந்தநேர்வாளந்தன்னை விஷமதுதள்ளிக்கூட்டி
புந்திபூசினிப்பருப்பு பொருந்தமேவதானுங்கூட்டி
இந்தவுளுந்துவளவாக விஞ்சிச்சாற்றிலரைத்துருட்டே 940

உருட்டுக்குளிகைசுக்கிலிட்டு வோடுஞ்சுரங்களனைத்தினுக்கும்
இறக்குஞ்சன்னிபதின்மூன்று மேகுமிஞ்சிச்சாற்றிலிட
அறக்கும்வயிற்றிநோயெல்லா மழிக்குந்தேனுமிஞ்சிரசம்
குறுக்குமுந்திமலக்கட்டு கோழையறுக்கும்விளக்கெண்ணை 941

விளங்குந்துத்தநாவுடனே வெண்பாஷாணமூன்றாகும்
களங்கமற்றவாளம்ரண்டு காட்டுசாத்திரபேதியொன்று
பிளங்கமோருவிட்டரைத்துப் பேணிக்கடுகுபோலுருட்டி
உளங்கள்குளிருஞ்சுரமனைத்து மோடியொழியமோரிலிடே 942

மோராமத்துவிரைநாலு முனிவெண்காரமஞ்சாகும்
பாராய்கெந்தகமாறாகும் பகரும்நாபியேழாகும்
கூராயிரதமெட்டுடனே கூட்டிச்சேர்த்துநிரைகொண்டு
வேராஞ்சித்திரவேர்ச்சாற்றில் விளங்கக்குன்றிமுத்தாகும் 943

மூத்தாமுண்டைதனையெடுத்து மோதுஞ்சுரத்திலிஞ்சியிடு
மெத்தவலிக்கும்வலிகுன்மம் வெள்ளையுள்ளிச்சாற்றிலிட
பித்தமிகுந்துதலைசுழற்றல் பேணிநொச்சிச்சாற்றிலிட
சத்தவாதபிடிப்புக்குத் துலக்குநொச்சிச்சாற்றருந்தே 944

அருந்தும்வெள்ளைப்பாஷாண மானகழஞ்சிரண்டாகும்
பொருந்துஞ்சந்தனமுக்கழஞ்சு போதக்குழிக்கல்தன்னிலிட்டு
வருந்திமுலைப்பால்விட்டாட்டி மறுகன்மூன் றுகாளரைத்து
திருந்தமிளகுஅளவுவெண்ணீர் தீரும்வெண்ணைசாமீறும் 945

சாமார்துத்தம்பத்துடனே தாலகபாஷாணகாலாகும்
வருமேபிரனையிடைகொண்டு மற்றுமொருக்கஞ்சாற்றரைத்து
பருவமாகவிரண்டுநாள் பாகாயரைத்துக்கடலையைப்போல்
சருவசுரமுமாவின்பால் தன்னிலருந்தச்சாந்திபதே 946

சாதிலிங்கம்வெண்பாஷாணந் தானேயூமத்தஞ்சாற்றரைத்து
மேதமாகச்சாமமரை விளங்குமுளுந்துப்பிரமாணம்
போதவுநட்டிக்குளுந்தண்ணீர் பொருந்தக்குடிக்கவல்லீராய்
மாதேகுளிருஞ்சுரமாறும் மன்னும்விருமாசத்திரமிரதம். 947

இரதஞ்சுத்தியறுகழஞ்சு யேமத்தேசிப்பழச்சாற்றால்
நிருதமாககாளொன்று நிகழ்ந்தசத்திச்சாரணையும்
மரிதேசுக்குதிப்பிலியு மதற்குக்கழஞ்சுவகைகொண்டு
பருதுவாகவெலுமிச்சம் பழமுஞ்சிச்சாற்பகரே 948

பகலுமுதலாய்காள்மூன் று பரிந்தேயரைத்துப்பயரளவாய்
ஏகமாகக்குளிகைசெய்து யிஞ்சிதேனிற்றுளிளவே.
தோகைசன்னிவாதமுடன் சொல்லுங்கைகால்குளிர்ந்தசுரம்
ஆகுஞ்சன்னிவிஷமறும் அதிசாரமுமஞ்சியதே 949

அஞ்சுமிஞ்சிச்சாற்றிலிட வாகுமாடாதோடையிலை
மிஞ்சும்பூசனிகொத்தமல்லி மிகுந்தகற்றுழஞ்சாறுசுக்கு
விஞ்சும்பற்பாடகமிவை விளங்கச்சமனுய்த்தான்காச்சி
அஞ்சாதோருண்டைதானிடவே யாகுஞ்சுராக்ஷேஷமதுசாதி 950

சாதிலிங்கம்பெருங்காயந் தானேகாழியெலிகாரம்
ஏதமிளகுசமகை யென்றும்வாளமுக்கழஞ்சு
போதக்கற்றுழஞ்சாற்றிலுண்டை பொருந்தமிளகுப்பிரமாண
மாதேயிஞ்சியிவையன்றி வருந்துங்கருப்புக்கட்டியுண்ணு 951

உண்ணுஞ்சுரங்கள்தான்தீரு மோடுமதிசாரமொழிந்துவிடும்
பண்ணுஞ்சீதசுரமாறும் பரதாபசுரங்கள்பயந்தோடும்
எண்ணும்வாதசுரமேகும் ஏகபித்தசுரந்தீரும்
திண்ணமிதுவேயனுபானஞ் செய்யகுளிர்சுரந்தீர்ந்திடுமே 952

வேறு.

தீரும்ரோகஞ் சிறக்குங்கயரோகம்
ஊறுபீளை யுயர்ந்தபீனிசமும்
ஆருங்கண்ட மாலைப்பிணி தானறும்
தேறுமாமுனி தெளியவறைந்ததே. 953

அறையுமேசுரம் ஆறவேமாந்தர்க்கு
நிறையுங்கோஷ்டமு நேர்ந்தவா லுழலை
பறையுமதாரம் பகருநெற்பொரியும்
திறையும்ரோகணியுந் தீரவெடுத்திடே 954

எடுத்துபாண்ட மெழிலாகக்காச்சிடு
தொடுத்தக்கியாழந் தோன்றவேகொடுத்திடு
அடுத்துமேசுர மகன்றோடிப்போம்
வடுத்ததேரையன் வாக்குபொய்யாதிதே 955

வேறு.

தீர்த்திடுஞ்சாதிக்காய்குடைந்து தீரநறும்பிசினிறையவிட்டு
சேர்த்திடப்பின்னுங்காய்குடைந்து சீரகம்நிறையத்தானமுக்கி
போந்தவாழைத்தண்டுரித்துப் பொருந்தநாரால்தான்சுற்றி
வாந்தமாகப்புடங்களிட்டு மறுத்தும்வாழைத்தண்டதுதான் 956

வாழைத்தண்டுமருந்தோடே மகிழச்சுட்டுத்தானரைத்து
மீளச்சுண்டைக்காயளவு மிகுந்தக்கியாழஞ்சிறுகீரை
தாளவெட்பூலாவேறிலையுந் தக்கக்கியாழத்தோருண்டை
ஆளவமைக்குஞ்சுரங்களெல்லா மதிரிட்டோடுமதுகேளே 957

கெந்தகமிரதமதிவிடையங் கிளர்ந்தகடுக்காய்முத்தமுடன்
குந்துகற்கடகச்சிங்கியுடன் கூறுஞ்சவக்காரமிலவம்பிசின்
மூந்துவசம்புசமனுக முனிந்தகஞ்சாயிலைச்சாற்றால்
அந்தம்பெறவேதானரைத்து அப்பாற்கரிசால்சாறொருநாள் 958

ஒருநாளரைக்கவெனுமிச்சை யுகந்தசாற்றிலொருநாளாம்
வருமேதேற்றும்விரைபோல மகிழவுலர்த்தியனுபானம்
பருகும்வாய்வுதேனிலிட மங்கும்பித்தமெருமைத்தயிர்
தருமேசேட்டுமந்தன்னிடத் தங்குந்திப்பிலிமேற்பொடியே 959

பொடியாமிந்துதிரிகடுகு புகழும்விடையம்காயபின்
விடியுங்கல்மதஞ்சீரகமு மேவுமோதகம்வெண்காரம்
துடியாங்கெந்தகமுமத்துவிரை துலங்கும்லிங்கமாங்கொட்டை
படியாம்புளியவிரைத்தோலும் பகருங்குகைநீறுமே 960

நீருஞ்சந்தனஞ்சாதிக்காய் சேரும்வசம்புகிராம்புடனே
போரூங்காஞ்சொறிவசுவாசி பின்னும்நெச்சியிஞ்சிகஞ்சா
கோரைசாத்திரக்குன்றியுண்டை சேர்ந்தசர்க்கரைதயிர்தேனில்
கூறுயருந்தக்கிராணிகடு கூட்டுவிசுளிகுடிப்போகும் 961

போகுங்குரும்பைபாண்டுடனே புகழும்பாளையப்படியே
ஆகுங்கெந்தகமந்திடையே யாருகழஞ்சுசுக்காகும்
வாகுமுத்தமந்திடையே வளர்காரீயமாறுகும்
பாகமாவாரைபன்னிரண்டு பாளைச்சாற்றிற்கிராணிக்கிடே 962

இடுநீரிரதம்காயிகெந்தி யியன்றகருவாய்த்தோல்வசம்பு
திடமாமிவையொன்றொருகழஞ்சு தீர்ந்தமிளகுயிருகஞ்சு
அடமாதளைப்பழச்சாற்று லரைத்துவுழுந்துப்பிரமாணம்
படுபாவிநோய்களனைத்தினுக்கும் பறக்கவடிக்குமிதுவடமாம் 963

அடவாம்வாதசுரத்துக்கு ஆருநொச்சிச்சாற்றிலிட
அடவாம்பித்தக்கொத்தமல்லி யானசன்னிசுரத்துக்கு
அடவாந்திரிகடுகிந்துப்பு அந்தப்பொடியிலமைத்துண்ண
அடவாக்கண்ணுநோயுக்கு ஆகுமெருக்கம்பழுப்புச்சாற் 964

சாறும்நீலகாசமுடன் சாற்றுமாலினீராகும்
திராமெரிப்புக்காமாலை தீர்க்கவாவின்பாலாகும்
பாராயுதிரவியாதிகள்போம் பாலாஞ்சீனிசந்தனமாம்
சோரவாதம்வாயுடனே தீருமாமணக்கெண்ணெயிடே 965

இடுவாய்சயிந்தலைவலிக்கு யேகுமகத்திச்சாற்பகரும்
தொடுமேதிரிபலைதிரிகடுகு தூளாஞ்சேத்துமந்தான்மாளும்
விடுமேமூலகெந்தகத்தை விளங்குகழஞ்சிபொடியதனிற்
கொடுநீகிராணிதான்றீறக் கொள்வாய்வாழைப்பழமதனில் 966

அதனமானவிக்ஷளிக்கு ஆகுமிளகுசூரணமாம்
விதனமானவயிற்றில்நோய் விளங்குவெள்ளுள்ளித்தயிலமதாஞ்
சுதனமானசீதசுரத்துக்கு சுக்குயிஞ்சித்தேனுகும்
பதனமானமாத்திரையாம் பறக்கும்ராமபாணமிதே 967

வேறு.

பாணமாமிது பகர்ந்தாரேமாமுனி
பாணமாமிது பகர்ந்தாரேசித்தரும்
பாணமாமிது பாலித்தார்ரிஷிகளும்
பாணமாமிது பகர்ந்தனர்தேரனே 968

வேறு.

நிதமாயிரதமாட்டியுட னேகுங்கெந்திதிரிகடுகு
பதமாந்திரிபலைவெண்காரம் பருகுந்துருசுதுத்தமுடன்
நிதமாந்தாரமோதகமும் நிகண்டாய்சமனும்பழச்சாற்றில்
மிதமேயொருநாள்தானரைத்து விளங்கக்குழிக்கல்தனில்வையே

வைத்தமருந்துமிதனோடே வழங்குந்தாம்பரபற்பமதை
அத்தோடிதையுஞ்சரிகொண்டு ஆனதேசிப்பழச்சாற்றில்
மத்தநாளுந்தானரைத்து மருவமூன்றுநாள்வைய்யில்
உத்தபுடததில்தான்வைத்து வுகந்தகடலையளவிஞ்சி 970

இஞ்சிச்சாற்றில்தானிடவே யியங்கும்வியாதிகூறக்கேள்
வஞ்சகக்குன்மகாசமுடன் மருவும்பித்தஞ்சயகாச
மிஞ்சப்பாண்டுகாமாலை மிகுத்தகிராணிபஞ்சகுன்மம்
அஞ்சியோடுமிதுவெல்லா மலைக்குங்வியாதிபலவாய்வும் 971

வாய்வுமற்றும்பலநோயு மருவும்வாதமென்பதுடன்
ஆயுக்குமலாய்தீர்ந்திடுங்கா ஞனபத்தியம்பகரக்கேள்
நேயபித்தமதனுக்கு நெய்பால்பலாவிஞ்சிஞ்சுடனே
காயமென்னும்பூசனிக்காய் கருதுமெள்ளுமிவைகூட்டே 972

வேறு.

எள்ளுபச்சைப்பயர் வுல்லிநெல்லியாம்
தள்ளுவகத்தி தானருந்தவரக்காய்
கொள்ளுமுள்ளங்கி கூறும்பொன்னுங்கண்ணி
விள்ளுமுருங்கை விரும்பிடுமபால்கூட்டே 973

வேறு.

கூட்டேயுப்புப்புளிப்பதுதான் குலாவும்பித்தர்க்காகாது
வாட்டமில்லாச்சயரோக மருவுங்கைப்புவிடக்தீரும்
திட்டும்பசுவினெய்கழஞ்சு திடமாமுருங்கைப்புடலங்காய்
ஆட்டுவற்றல்தானகு மானேர்பீர்க்கங்காயாகும் 974

காயம்பகரும்வாழைக்காய் காடையுடனேமானிறைச்சி
ஓயாதுலர்த்தியுண்டுவிடு வுகந்தபிரண்டைசிறுபயறு
தாயாமுள்ளங்கிப்பசுவின்பால் தாக்குங்கரணைதானகும்
பாயுஞ்சம்பாவரிசியுண்ணப் பறக்குமவியாதிபதிவிட்டே 975

வேறு.

விட்டேயேகும் வியாதிபிணியறும்
கட்டுநோயுங் கலங்கப்பறந்திடும்
இட்டமாகவே திறந்திட்டேன்மாந்தர்க்கு
சட்டமாய்த்தேறஞ் சாற்றிவிட்டதுவே 976

வேறு.

விட்டேசாதிக்காய்லிங்கம் விளங்குங்கிராம்புசுக்குடனே
கட்டும்ராபிபொன்மத்தை கதித்தவிரையுந்திப்பிலியும்
திட்டமுத்தக்காசுடனே சேரவோர்நிறைதான்கொண்டு
தொட்டமிஞசிச்சாறதுதான் றுலக்குமத்தையிலைச்சாறே 977

இச்சாறென்றமுப்மூன்று யியன்றகானுந்தானரைத்து
வைச்சகுன்றிப்பிரமாண மருவும்ஞ்சிச்சாற்றிலிட
அச்சமிலலாச்சேத்துமமு மானசூலைசுரமனைத்து
பிச்சக்கரையின் தன்னிலிட யிபங்குமவியாதிபறஞ்சுரமே 978

வேறு.

சுரமுமேவுஞ் சிறந்தமே தோர்மாந்தர்க்கு
கரவாருசன்னி கதறியலறிடும்
பரமாமேகம் பறந்திடுஞ்சாசமும்
அரனெனக்கு அறைந்தவாறிதுவே 979

அறைந்தார்மாமுனி யாயுறுவேதத்தில்
திறந்தார்சூட்சங்கள் தெளிந்திட்டார்மாந்தர்க்கு
உறமாம்காலாயிரத் துச்சில்வாணத்தில்
பறமாய்ப்போகவே பகர்ந்திட்டாசுரத்துக்கே 980

வேறு,

சுறமதிசாரஞ்சூலையுடன் சுக்கிலமாகுமிந்திரியம்
இரவிக்குரியகிராணிக்கு யிலுப்பைப்பட்டைநாற்கழஞ்சு
அரவங்குழலாய்சுக்குரண்டு ஆனயிருநாழிநீருழக்காய்
பரவுங்கியாழங்குளிகையிடப் பறக்குங்கிராணிவகைசெல்லி 981

செல்லிமுள்ளிக்கியாழத்தில் நிகழுந்தயிருமதனுலும்
வல்லாதிச்சார்சுரத்துக்கு மருவுங்குளிகைதானிடவே
நல்லாய்க்கியாழம்நாம்சொன்னோம் நயந்தவியாதிக்கனுபானம்
எல்லாந்தீரும்வச்சிரமா மேகுமானந்தவைரவனே 982

வயிரமானவெண்காரம் வளருநற்பிரசமிளகு
கயாஞ்சுக்குதிப்பிலியும் கனத்தலோகசெந்தூரம்
பயிராமூமத்தைவிரையுடனே பாங்காய்ரண்டுபங்குமிட்டு
உயருங்கெந்தகமொருபங்கு ஊமத்தஞ்சாற்றிலரைக்குன்றி 983

குன்றிபோலவுண்டைசெய்து கொம்புத்தேனிற்கவனமிட
நன்றுஞ்சுவாசகாசமுடன் நயந்தமந்தாரஞ்சேட்டுமமும்
என்றேயரியபத்தியமு மியன்றவாதமதுவெல்லாம்
சென்றதிற்சார்கிராணியுடன் றீரக்குளிகைவெக்கிரகம் 984

வேறு.

நவமாரோய்களும் நவிலுஞ்சுவாசமும்
கவமாமீளையுங் கருதும்மருமலும்
பலமாம்பாண்டுடா பகருகாமாலையும்
சவமாமுடலைவிட் டேகுமொக்ரகமே 985

வேறு.

இரகதாம்பரமெட்டுடனே கெந்திரண்டிரசமொன்று
தாரகமஞ்சிலைமூன்றுருகுஞ் சொல்லரிதாரநாலாகும்
விரகநாபிரண்டுடனே மேவியதனேர்சிறைகொண்டு
உரகனையானசாறுகு மோகும்பொச்சிச்சாறதனுல் 986

நாலுநாளாய்த்தானரைத்து நன்றாக்குன்றிப்பிரமாணம்
மேலாமதிரிகடுகுபொடியுடனே விளங்குந்தேனிற்றானிடவே
பாலாமகோதரம்பஞ்சசயம் பருத்தகவிசைபஞ்சகுன்மம்
மாலாமசாத்தியசாத்தியவினை மாறுஞ்சூதராடசதகுளிகை 987

குளிகையிரதங்கெந்தகமும் கூட்டுபிருவிவெண்காரம்
அளவாம்காயமரிதார மானதிரிபலைதிரிகடுகு
புளகதுத்தம்பெருங்காயம் போற்றுமவிடையஞ்சாதிக்காய்
தளமாங்கிராம்புயெட்டிவிரை தாகுங்காரம்நவச்சாரம் 988

சாரந்துருசுவாளமுடன் சமமாயிதனைச்சரிகொண்டு
சோரவிடித்துதூளாக்கித் துகககச்சீலைவடிகொண்டு
தீரக்கற்றாழஞ்சாறுருநாள் திகைக்கக்கையாணுள்பத்து
மீரப்பழுத்தமிளகளவு மமையதனைநிழலுலாதம்தே 989

வேறு.

உழர்த்திச்சூரண மோங்கும்பதமாய்
அலாத்திடாம லரும்பசுமபாலதனிற்
பலத்தசட்டியிற் பாககாகபபுடாவிசெய்
நிலத்திலாவியில நோயுலாததிடே 990

வேறு.

உலர்த்துங்குளிகையோமம்பொடி யுடனுஞ்சீதகக்கழிச்சலுக்கு
குலர்த்துநாபிபொசித்தாக்காற் கொள்ளையாமணக்கெண்ணைதனில்
நிலத்துச்சற்பம்வேபபெண்ணை நின்றவாயுவுக்கிஞ்சிரசம்
பெலத்தசொரியுஞ்சிரங்குக்குப் பின்னும்பசுவினெய்யெழே 991

ஏழுநாள்கொள்சொரிபறங்கி யீளைகையாந்தகரைச்சாற்
வாழும்பிரமியமெட்டுக்கும் வளருங்குறிஞ்சாயிலைச்சாற்றில்

தாழும்பித்தஞ்சினிதனில் தாக்கப்போகுமதுவல்லால்
மீளுமேகயனேத்தினுக்கும் வெண்ணேயாவின்பால்தயிரே 992

தயிராம்போடபசுவின்மோர் தாங்காபித்தம்வெல்லமுடன்
அயிராமேழுநாள்கொள்ள வாகாதிருமல்கீழ்நெல்லி
முயிராஞ்சிரணம்பெருங்காய முற்றும்வசுவாசிவசம்புடனே
தயிராம்பாண்டுகாக்கணம்வேர் துலங்கக்குடிக்கச்சுகமாமே 993

வேறு.

சுகமாமேக சுகசன்னிதானரும்
இகமாம்பித்த மிருபலீளையறும்
தகமாம்வாதந் தனிக்கழல்வாதம்போம்
பகமாந்தேரையர் பாடினதுண்மையே 994

உண்மையாக வுரைக்கிறேன்மாந்தர்க்கு
தன்மையான தனிப்பெருங்காவியம்
வண்மையாக வறைந்தாரிந்நூலினில்
கண்மையாஞ்சித்தர் கருதஞ்சுகமிதே 995

வேறு.

சுகமாமூத்திரகிரிச்சிக்குந் துலங்குங்கோமயமொருமோதம்
தகமாமருந்துமரையாண்டு சயமுங்குன்மந்தான்றீரும்
அகமாம்பித்தந்தான்கழிய வாமணக்கெண்ணேயதிற்றீரும்
பகமாமந்தாக்கினிக்குப் பகருங்கடுக்காயிளநீரே 966

நீராஞ்சருவவிஷம்போக நிச்சயமாவினெய்பாகும்
பாராயகண்டசொறிசிரங்கு பகருமாவின்பாலாகும்
நீராப்பித்தக்கற்பூரஞ் சேருங்காசசுவாசத்துக்கு
கூராய்திப்பிலிபொடியாகுங் கொள்ளுமூஷ்ணஞ்செண்பகச்சாற்

சார்ந்தவைசூரிவருவதுமுன் தாக்குங்குளிகைதேனிலிட
வார்ந்தபலபலவியாதிகட்கு வையேவெற்றிலைச்சாறதனில்
போர்ந்ததலையின்வலிதனக்குப் புகட்டுமணிதக்காளிச்சாற்
சேர்ந்தசூலைதான்போகத் தேடுமாவினெய்யாமே 998

ஆமேகுன்மமிந்துப்பு ஆகாவாய்வுலாதசன்னி
போமேயூமத்திலைச்சாறு பொல்லாவிஷம்போம்கறுந்தாளி
தாமேபிரமியமாவின்பால் தாக்குங்கண்ணோயதுவாகும்
காமேமூலவியாதிபோங் கரணைபிரண்டைபொடியிடவே 999

இடவேசர்க்கினிடாக்கினி போ மேகுஞ்சோத்திரத்தானிடவே
தொடுமேவாய்வுமுசிலனிலை துலக்கும்வாய்வுபலமனைத்தும்
விடுமேகொச்சிச்சாற்றிலிட விளக்குமந்திரவாய்வதுவாங்
கடுகுந்தீபனவசமோதங் கழறுமுள்ளங்கிவாய்காற்றம் 1000

காற்றமிருமலீளைபோம் நன்றாய்ச்சாத்திரபேதியினில்
கூற்றனுதிரந்தான்சாய்ந்தாற் கொல்லுஞ்சன்னிபசுவினெய்
ஏற்றமானவாய்வுக்கு மேவுஞ்சயத்தின்வாய்வுக்கு
நீற்றஞ்சிறுகீரைச்சாற்றருந்த நீயனுபானமாதுகேள் 1001

ஆனவாவின்பால்நெய்யா மாகாப்புளிப்புகைப்புவிடு
போனகாயசுவாசமுடன் பொருந்துங்காந்தைச்சாறுகும்
ஏனம்பாங்கிகால்பிடிப்பு யெடுக்குந்தூலைபெரும்பாடு
தானுமாவின்சாணகஞ் சந்தனநீருந்தானுகும் 1002

ஆகுஞ்சருவவியாதிகட்கு ஆனபசுவினெய்யதிலும்
போகுங்கொத்தமல்லியுடன் பொருந்துமாங்காய்கூட்டியுண்ணு
வேகுஞ்செண்பகப்பட்டைச்சாற் விளங்கும்ரத்தப்பிரமியம்போம்
தாகம்பார்வைகுறைந்திருந்தால் தாக்குமெள்ளுத்தோல்போக்கி ( )

வேறு.

போகும்ரோகணி பொருந்துமிந்துப்புடன்
தாக்குநந்தியின்பூச் சாற்றரைத்திடு
போக்கில்லாமற் பொருந்துநேத்திராஞ்சனம்
வாக்குதப்பாமல் வாகாகப்போட்டிடே 1004

போட்டிடும்பில்லம் புழுநெட்டுத்தானறும்
நீட்டிடுங்கண்ணீர் நேருமாணிப்பூவும்
பூட்டிடும்புகை புகலுந்திரைமறை
மூட்டுப்பீனச முகிழப்பறக்குமே 1005

பகருஞ்சாட்டரணைச் சாற்றில்தீட்டிடு
நிகழுப்விழிக்கு நேருஞ்சீனக்காரம்
தகரும்பட்டியின் தானேபொதிந்திடு
சகருங்கண்ணோய் தனிவனம்பொகுமே 1006

வேறு.

போகுங்காதுசீழ்வடிந்தால் புகட்டுசிறுநீர்குளிகையுடன்
தாக்குங்கண்ணிற்பலத்துக்குத் தாக்கக்கதலிசாற்றிலங்கு
ஏக்குஞ்சூரிதான்வந்தா லேகுந்திரிபலைச்சாற்றிலிட
ஆர்க்குங்குளிகையனைத்தினுக்கு மடவாமெழுவர்குளிகையிதே

இதுவாம்லிங்கம்வெண்கார மேருங்கெந்திரசியுடன்
அதுவேதிரிபலைதிரிகடுகு ஆகப்பதின்கழஞ்சடவாகப்
பொதுவாந்தாரம்பத்தின்கழஞ்சு புகழும்வாளம்பதின்கழஞ்சு
மெதுவாமருந்துபணிரண்டு விளங்குங்கழஞ்சுமுப்பதுவே 1008

வேறு.

கழஞ்சுமுப்பது கருதும்படிகாரம்
வழிஞ்சுயிந்துப்பு வரையுங்கல்லுப்புடன்
தழஞ்சுமேயிடை தாக்குஞ்சமனதாய்
முழஞ்சுமுப்பு முயலமுப்பதெடே 1009

வேறு.

முப்பதுகழஞ்சுவடவாக முருக்கிலைப்பூசனிலைச்சாற்றால்
தப்பாதொருநாள்சாமந் தானேயைந்துநாளரைத்து
மிப்பார்புகழும்இளகளவாய் மீறுங்குளிகைநிழலுலர்த்தி
ஒப்பாம்வியாதிக்கனுபான முறைப்போமிஞ்சிச்சாற்றிலிடே 1010

இஞ்சிச்சாற்றிற்சீதசுர மியன்றதாபசுரம்பசும்பால்
மிஞ்சும்வெள்ளுள்ளித்தயிலத்தில் மேவும்பழஞ்சுரமதர்க்காகும்
வஞ்சச்சயத்துக்காச்சலுக்கு மகிழுஞ்சுக்குநிலையாமீர்
அஞ்சாவிஷபாகசுரத்துக்கு ஆகுமுலைப்பால்சர்க்கரையே 1011

சர்க்கரைப்பசும்பால்காமாலை தானேபாம்புகடித்தாக்கால்
மிக்கதேசிப்பழச்சாற்றில் விரையவுரைத்துக்கலிக்கமிடு
தக்கதிரிபுரச்சாற்றரைத்து தானேதேள்கொட்டுவாயிலிடு
ஒக்குமாம்பட்டைச்சாற்றிலிட வோடுங்கிராணியதுகொள்ளே

கொள்ளுத்தண்ணீர்தானிடவே கூசாதோடும்வாதமெல்லாம்
மெள்ளப்பத்தியம்பாற்சோறு மிளகுநீருந்தானாகும்
உள்ளவாதங்காச்சலுக்கு வுகந்தகஞ்சிதானாகும்
கொள்ளுங்கிராணிதயிருடனே கொண்டேசோறும்வெந்நீராம்

வெந்நீர்நீக்கிச்சாதிக்காய் விளங்கநறுக்கித்தான்வெதும்பி
தின்னீர்பொடியைத்தேன்கலந்து தியக்குவயிற்றில்நோயறுமே
பின்னீர்வெள்ளைக்கழிச்சலுக்குப் பெருத்தகழற்சிப்பொடியுடனே
மன்னீர்வெண்ணெதான்கலந்து மதித்துத்தின்னமாறிடுமே 1014

வேறு.

மாறிடும்பேதி வயிறுகழிச்சலும்
தூறிடும்பேதி தோன்றுமலபேதி
கூறிடும்பேதி குறிக்குநீர்பேதியாம்
வாறிடுமென வறைந்தனரிஞ்சியே 1016

வே று.

இஞ்சிச்சாற்பூசனிக்காய் சாறுங்கூட்டி
இட்டமுடன்கொண்டிடவே மூலம்போகு
மிஞ்சியதோர்பீனிசமுங் கபலாக்கட்டி
விழுகின்றசீயெல்லாம் விட்டேபோகக்
கஞ்சாவினிலைச்சாறு சீலையூட்டி
காயவைத்து அதன்மேலே மருந்துகேளு
அஞ்சாமல்மூந்திரிகைப் பழத்தின்சாற்று
லணைத்திடுநீபோகல்விரை யுளுந்துங்கூட்டே 1016

உருட்டியதோர்திரிபுகையை மூக்கிலேத்த
வோடிப்போம்பீனிசமுஞ் சீயுவாறும்
பிரட்டியேவயிற்றிலே யெரிவுகண்டால்
பேணியதோர்நெல்லிவிரை சூரணித்து
சுருட்டியதோரிஞ்சிச்சாற் வெற்றிலையின்சாறு
சுகமாகலேகித்துத் துலங்கவுண்ணு
மருட்டியேபசியெல்லா மந்தமாகில்
மாசற்றபொருமனுக்கு மருந்துசொல்வோம் 1017

சொல்லுங்கோஷ்டக்கரந்தை யறுகம்வேரும்
துளிரானபுளியிலையுங் கியாழம்பண்ணி
கல்லுபோல்குளிகைதனை யொன்றுரைத்து
கலக்கியேகுடித்திடுவாய் ரோகந்தீரும்
நில்லாதபலகரப்பான் பிரமிச்சாற்றால்
நிலைக்கவேசரீரசுத்தி நினைவாய்க்கேளு
வெல்லவேவருஷமது மூன்றுமாதம்
விளங்குபட்சமூன்றுடனே நாளுமொன்றும் 1018

ஒன்றானநாளொன்றுக் குளிகையொன்று
வுடனீச்சத்தண்ணிதனி லுகந்துகொள்ள
நன்றாகத்தம்பனமும் வசியமுண்டாம்
நாட்டிடுவாய்குளிசத்திற் சிரசிவப்பா
பன்றுள்ளதலைதிருப்பி நடுக்கமானால்
பதறாமல்பூசனிக்காய் சாற்றிற்கொள்ளு
என்றசிறுதசவாய்வு சந்துரோகவு
ஏகமந்த்ரவாயுவுடன் வாதந்தானே 1019

வே று

தாரணவாதந் தனியுடல்விட்டேகும்
மானேகேள்வரை யாயுறவேதமாம்
தேனேமாந்தர்க்குத் தெளியவுரைத்திட்டேன்
வேனேதேரையன் விரும்பியுரைத்ததே 1020

உரைத்தேன்காவிய மோங்கும்பெருநூலாம்
இரைத்தேரையிரத் தைஞ்னூற்றில்யாவற்றும்
குரைத்தேனைஞ்னூற்றில் கூறியதுண்மையாம்
வரைத்ததேரையன் வறைந்தாரிதுதானே 1021

வே று.

தானேமுருங்கைவேற்சாற்றில் தளம்பத்துவரலைதானிட்டு
மானேயதுதானுள்ளுக்கு மருந்துதிரிபலைதிரிகடுகு
தேனேநிம்பப்பழச்சாற்றில் திரட்டியரைத்துவுள்ளருந்த
நானேசொன்னேன்மருந்திட்டால் நாடிமுறியுங்கோவையிஞ்சி 1022

வேறு.

இஞ்சியாந்திரிதோஷஞ் சாமுஞ்சன்னி
யிசிப்புக்குத்திரிபலையுந் திரிகடுகுகூட்டி
அஞ்சாமற்சூரணித்துக் குளிகையொன்று
அன்றுடங்கொடுக்கவே அடங்காநோய்கள்
மிஞ்சியதோர்மிருதசன்னி திரிதோஷங்கள்
விட்டோடுகொச்சிச்சாற் சங்கஞ்சாற்றில்
கொஞ்சியதோருப்பிசமும் பயித்தியமுந்தீரக்
கூட்டுவாம்விளக்கெண்ணெயில் நசியமாமே 1023

ஆகுமேகண்ணுக்கு நசியம்பண்ண
அப்பனேவேப்பிலைச்சாற் நசியமையாம்
போகுமேசமுத்திரத்தின் பாலைவிரைச்சாறு
பொய்யல்லநசியபஞ் சனமுமாகுந்
தாகமாய்ச்சித்திரையைக் கொண்டபேர்க்கு
தவறுமலேலரிசி தன்னிற்கொள்ளு
மோகமுடனண்டத்து வாதந்தீர
மிளகுபொடிகொண்டிடவே விட்டுப்போமே 1024

பிரலாபசன்னிக்கு இராமசக்கிர பூபதிமாத்திரை.

வேறு.

போமேதாரம் பொலிந்தவெண்காரமும்
ஆமேலிங்க மறையும்விந்துவுடன்
மாமேசத்தி மகிழுமனேசிலை
காமேபூரமுங் கருதச்சமனெடே 1025

எடுத்துக்காந்த மெழிலானகாரமும்
தொடுத்துமேசமன் தோன்றச்சமனெடு
கொடுத்துத்தேனிற் குலாவியரைத்துமே
சடுத்தமாக்குன்றி மாத்திரைசெய்திடே 1026

செய்துநீழலிற் சிறக்கவுலர்த்தியே
னைதுதேனில் நவிலவருந்திடில்
பெய்துமேபிரலாப சன்னிமுதல்
கொய்துமேனி குடிவிட்டுநீங்குமே 1027

வேறு.

பொருந்தவேவயிற்றுக்கட்டிச் சங்கிலேயுஞ்சாறு
போட்டிடுகோரோசினையுஞ் சந்தனவசியம்
திருந்தவேமுட்டில்லா ஸ்திரீகள்தங்கள்
தேடியதோராலவிரை தின்னத்தீரும்
வருந்தியேபுருஷன்பெண்ணை மருவவேண்டி
வாழாதபெண்புருஷன் மயக்கிவைக்க
சிறந்ததோராவமது தீண்டாதற்கு
தேசத்துக்கொளிவாகு மதற்குவசியம் 1028

வசியமாமாணுக்கும் பெண்ணுக்காகு
மகத்தானகுளிகைரண்டு யெடுத்துக்கொண்டு
ரசிவேளை தானறிந்து தீபதூபம்
நேயமுடன்பெலிகொடுத்து வொருபோதாக
பொசியாமற்கொட்டைக் கரந்தைவேரும்
பிடிங்கியேகுளிகையுடன் சேர்த்துக்கொண்டு
ருசியானபொன்குளிசத் தடைத்துக்கட்டு
நோக்குமடாபுருஷருடன் பெண்ணுஞ்செரும் 1029

பெண்ணகரிஷிபோலே முட்டில்லாட்டால்
போட்டிடுவாய்பழச்சாற்றி லஞ்சனமுவசியம்
கண்ணுனமுந்திரிகைப் பழமுவசியம்
காட்டுபென்றிவசியம் கண்ணுக்காகும்
எண்ணும்வொருதலை நோயுக்கப்பா
ஏகிவிடுங்குன்றிமணி யிலைச்சாற்தேய்க்க
உண்ணுகின்றசாரணைச்சாற் குலைசதெர்ப்பைச்சா
றுண்டையுடனீகூட்டி யுலைரக்கத்தேயே 1030

தேயடாவாய்நாற்ற முருங்கைச்சாறுந்
திராட்டால்முருங்கைச்செண் பகப்பூச்சாறு
பேயனைநாம்புக்கால் சிலந்திவந்தால்
பிசகாமல்நெல்லிக்காய்ச் சாற்றிற்கொள்ளு
நாய்போலேதிரிந்துநீ யலையவேண்டாம்
நாலாயிரத்துச்சில்லான நோய்கள்யாவும்
மாயமாய்ப்பறந்துவிடுங் குளிகைகண்டால்
மகத்தானசித்தர்சொன்ன மார்க்கந்தானே 1031

பித்தத்திற்குச் சூரணம் வேறு.

தானும்பித்தந் தனியப்பறப்பதற்
கானுமதுரங் கழறுநற்சீரகம்
வேணுங்கோஷ்டம் விரும்புநல்லேலமும்
ஆனநெற்பொரி யதுவுஞ்சமனெடே 1032

எடுத்துச்சூரண மொன்றுயிடித்துமே
வடுத்தசாக்கரை வாகாய்கலந்துமே
தொடுத்தமண்டலந் தோன்றவருந்திடில்
நடித்தபித்தம் நவின்றோடிப்போகுமே 1033

வேறு.

மாசற்றசூரணந்தா னின்னங்கேளு
வகையானபெருக்கிலைவேர் சித்திரமூலம்
தேசுற்றநாய்க்கோட்டா னழிஞ்சிவேரு
செமபூரான்பட்டையுடன் வண்டுகொல்லி
பாசற்றதலைச்சுருளி வேப்பம்பட்டை
பளுகாமல்பெருமரமு முசிலம்பட்டை
வாசற்றமலைவேம்பு பெருவாகைப்பட்டை
வளமானமுட்புரண்டி குப்பிவேருமாமே 1034

குப்பியுடன்வெட்பாலை பலகம்பாளை
கூசாமல்வீழிமலை வீழிகூட்டி
செப்பியதோர்கார்போகி கடுக்காய்தான்றி
சேருஞ்சீரகமுடனே யோமங்கூட்டி
தப்பாமற்சேங்கோட்டை சுக்குசேரு
தனிக்காட்டுச்சீரகமுஞ் சரிநிரையாய்ச்சேரு
ஒப்பியேயிளவறுப்புச் சூரணித்து
இருவேளைவென்னீரி லுகந்துகொள்ளே 1035

உகந்துநீகொண்டாக்காற் றீருநோய்கேள்
உறுதியாமேற்றடிப்பு சிவப்புவெள்ளை
தகர்ந்திடுசம்பூரானும் விஷங்களெல்லாந்
தழுதணையுங்குட்டமெல்லாந் தவறிப்போகும்
செகந்தனிலேசொரிசிரங்கு மேசவூறல்
திரேகத்திலுள்ளநோய் தெளியுமபாரு
இகழ்ந்திடாதிம்மருந்தை புளிபுகையைத்தள்ளி
இட்டமுடன்மண்டலநீயிசைந்துகொள்ளே 1036

கண்புகைச்சலுக்குத்தயிலம்.

வேறு.

கொள்ளுமாந்தர்க்குக் குறிக்குமொருபாகம்
விள்ளுங்கீழ்க்காயி னெல்லிசமூலமாம்
துள்ளக்கியாழந் துடிப்பாகச்செய்திடு
எள்ளுகெண்ணெ யெழிலாகக்காச்சிடே 1037

காச்சிமண்டலங் கருதிமுழுகிடில்
போச்சுவியாதி புகலுங்கண்புகைச்சல்
வீச்சுபித்தம் விளம்புந்தசவாய்வு
ஆச்சுதயில மறையவிசைந்ததே 1038

வேறு.

இசைந்தவொரு கண்புகைச்சல்தயிலங்கேளு
இளநீரும்பாலுமிரு நாழிகூட்டி
பிசைந்தகாரெள்ளெண்ணெய் படிதானென்று
பண்பானவதிமதுரங் கோஷ்டமோமம்
உசந்ததோராவின்பால் படடூட்டி
உண்மையாயதிற்க்கரைத்துப் பதமதாக
துசந்ததோர்சனிபுதனு முழுகிவந்தால்
தூரத்திலிருக்குமருந் தறியுந்தோன்றும் 1039

வேறு.

தோணுந்தொப்புள்முறுக்குண்டாந் துவளுங்கடுப்புரத்தம்விழும்
மாணுமலங்கள்கறுத்துவிழு மப்பாலிளறுநுரையுண்டாம்
பூணுங்குருதியதிசாரமென்று பிரித்துச்சொன்னேமலர்தங்கும்
வேணுமிதற்குக்குறிப்பறிந்து வேண்டதிசாரபித்தம்போம் 1040

பித்ததிசாரந்தானென்று பெருக்கக்குறிதான்கண்டபின்பு
உத்தகிரிகைசெய்தவர்க்கு முரைப்பேபோங்கற்பமுண்மையென
மெத்ததிப்பிலிக்காடிவேலி மிகுத்தவசப்புவெட்பாலை
உத்தமூலமிலந்தைவேரு முத்தம்விடையஞ்சேர 1041

விடையஞ்செவியம்ரோகணியு மிகுத்ததேக்குதிரிகடுகு
அடவேகுரும்பைவேப்பலகு மாகுக்டுகுகருஞ்சீரம்
தொடுகீழ்நெல்லிவிளாவேருந் தொடுதங்காயந்திவ்வியமா
யிடுநீசமனுப்பொடியாக்கி யிதமாக்கியாழப்வெருகடியே 1042

வெருகடியளவதாக வென்னீருமிகுத்துக்கொள்ள
பருகவேயுருகக்காச்சி பரிந்துகொளதிசாரம்போம்
பெருதீபனம்போசனமாம் பெருத்தவயிறுபொருமலுடன்
முருகுகாயிசூலையுடனேடுங்கடுப்பு மிருமலும்போம் 1043

வேறு.

போகுமதிவிடையமிரு வேலிமுத்தம்
புகழானகூவிளத்தின் பழமுங்கூட்டி
ஆகுமிருகழஞ்சியிடை தூளதாக்கி
யானவிருநாழிநீருழக்கதாக
தாகுமேதிப்பிலியுஞ் சுக்குங்கூட்டி
தவிடாகயிடித்துமே தூவிக்கொண்டு
ஏகமாய்க்கலக்கிநீ யொழங்கொண்டா
லேகுமதிசாரமுடன் வாதசூலை 1044

சூலையாமதிசாரம் போவதற்குத்
துலங்குமரமஞ்சளுடன் மஞ்சள்கூட்டி
வேலையாமதுரங் கூவ்ளமும்வெட்பால்
வேண்டுநீரிருநாழி யுழக்கதாக
காலமேவிடையமேற் பொடியாய்த்தூவி
கண்ணவேகுடிக்கவதி சாரம்போகும்
நீலமாங்கிராணிவகை யாறும்போகும்
நிச்சயமாய்ப்பிரண்டைசுண்டிக் கறியாஞ்சூதம் 1045

வேறு.

சூதமேபெட்டுகாபி துலங்கெழுகெந்தியாறு
நீதமாந்தாரமஞ்சு நிறுத்துவாளமீராறு
ஓதுவெண்காரமூன்று வுகந்ததோர்சுக்குரண்டு
ஏதமோர்மிளகுமத்தை விரையரையேத்திடாயே 1046

ஏற்றிடுசித்திரமூல மிசைந்தசாற்விட்டரைத்து
மேற்றிடுமிளகுபோல விளங்கவேயுண்டைசேர்த்து
வூற்றமாய்நிழலுலர்த்தி யுரைத்திளநீரிலிட்டால்
ஆற்றியசுரங்களெல்லா மகற்றிடக்கடுகுகொள்ளே 1047

வேறு.

கடுகுசுத்திசேர்வாளங் கனத்தபிரகமிவைமூன்று
இடையோரொன்றுஜங்கழஞ்சு யிதற்குச்சர்க்கரையிருபலமாய்
திடமாய்முலைப்பால்விட்டரைத்து திருந்தப்பயறுஅளவாக
இடவேமுலைப்பாலிஞ்சியது யிடுநீராமபாணமிதே 1048

இதுவாங்கெந்திவெண்கார மிருக்குநாபியிரதமுடன்
அதுவாந்திப்பிலிதிரிபாலை யானதொவ்வோர்கழஞ்சுகொண்டு
மெதுவாஞ்சுக்குவரிதாரம் வேண்டுமொவ்வொன்றுமுக்கழஞ்சு
பொதுவாஞ்சுத்திசேர்வாளம் பொறுக்கக்கழஞ்சிநிரைகூட்டே 1049

கூட்டிநருக்கிக்குழிக்கல்லில் கோலப்புரசனிலைச்சாறு
மீட்டுமிந்தமருந்தையெல்லாம் வேண்டுஞ்சாராயந்தனிலரைத்து
நீட்டுந்துவரைப்பிரமாணம் நிச்சயமிஞ்சிச்சாற்றிலீட
ஓட்டுங்குளிரும்பரதாப மொழியுஞ்சரமுமோடிடுமே 1050

வேறு.

ஓடுமேகசுர மிருபதுவும்
நீடுமீளை செருக்குக்கபரோகம்
கூடுஞ்சன்னி குறிக்கும்பிறவலி
ஆடும்வாத மறையுங்காமாலையே 1051

மாலைபாண்டு வருக்குநீராம்பனும்
மேலைவியாதி விரும்புஞ்சொரிசிரங்
காலைகிரந்தி கருதுமரையாப்பு
மூலைவிட்டு முயன்றுதானோடுமே 1052

வேறு.

ஓடும்வெண்காரலிங்கமுகந்தசாதிக்காய்மிளகு
வாடுமிரதமிந்துப்பு வழங்கும்நாபிமத்தம்விரை
தேடுந்திப்பிலிபலகரையுந் திரும்பச்சுக்குவரிதாரம்
நாடுஞ்சமனுயுகவிரிச்சாற் நன்றாகயரைத்துக்குன்றிபோல் 1053

வேறு.

குன்றிபோலுருட்டியே யிஞ்சிச்சாற்றூற்
கூறுகேள்பெருவாதஞ் சேதம்வாத
மின்றியதோர்மூத்திரக் கிரிச்சிவெக்கை
வெடிசூலைபதிசாரக் கிராணிகுன்மம்
அன்றியிடுபலபல வியாதியெல்லாம்
அதிர்ந்தோடுமாத்திரையைக் கண்டபோதே
பன்றாள்ளவாழைக்காய் சுறுவின்கண்டம்
பால்மோருங்கூட்டிடே பத்தியங்காரே 1054

கார்போகதிரிகடுகு காயமோமம்
கடுஞ்சீரகங்கடுக்காய் குப்பைமிந்து
பேரனசங்கம் வேர்சங்கக்குப்பி
பெரியதொருகுருந்தவேர் சூரைவேரும்
சீரானதவசிவே ரெல்லாங்கூட்டி
சிரக்கவேபட்டைதட்டி சமனதாக்கி
கூராகவிவையெல்லாங் குழிக்கல்லிட்டு
குயிறிடவேவென்னீரைக் கூட்டியாட்டே 1055

ஆட்டியதோர்கடைமருந்து ஒருகிரையாய்க்கொண்டு
அடவாகக்கருங்கோழி வயிற்றுக்குள்ளே
தேட்டியதோர்கள்ளிப்பா லாழாக்குவிட்டுத்
திடமானகாடி யாழாக்குக்கூட்டி
வாட்டமறவெள்ளாட்டு நீருபடிரெண்டு
வார்த்திடுவாய் சட்டிக்குள்ளெல்லாங்கூட்டி
மூட்டியதோர்கோழியதை யுள்ளேவைத்து
மூடுவாய்சீலமண்தான் மூடிப்பூசே 1056

பூசியேயெரித்திடுவாய் வற்றுமட்டும்
பிறகெடுத்துலேகியம்போ லிடித்துநன்றாய்
வாசமிட்டுக்கலயத்தி லடைத்துக்கொண்டு
வயிற்றுநோய்குடல்வாத மலட்டுப்பூச்சி
காசினிலெரிகுன்மம் பித்தகுன்மங்
கழல்வாதசகலமும்போம் கழஞ்சுரண்டு
தேசிகனேபத்தியம்வைத் திருபதுநாட்கொள்
தெறித்தோடும்வியாதியெல்லாம் பஞ்சுபோலே 1057

வேறு.

பஞ்சலவணமெவாச்சாரம் பருத்தஅழிஞ்சில்கொடிவேலி
அஞ்சாங்காட்டுக்காணையுடன் ஆனபிரண்டையசமோத
மிஞ்சிச்சீரகம்பெருங்காய மின்றவாளம்விழாவரிசி
தஞ்சந்திரிபலைதிரிகடுகு தானேயுள்ளச்சமன்பொடியே 1058

பொடியேசமனுங்கள்ளிப் பால் பொருந்தவரைத்துக்கடலைகள்போல்
மிடிதீர்நெய்பால்தனிற்கொள்ள மேவுங்குளிர்ந்ததண்ணீர்குடி
படியிற்றீரும்வியாதியெல்லாம் பறக்கக்கேளிப்பாரிலுள்ளோர்
திடமேதீருமெனமுனிவன் செப்புமூத்திரக்கிரிச்சிபோம் 1059

மூத்திரக்கிரிச்சிருன்மமுடன் மூசியாமூத்திரஞ்சலக்கூறும்
ஏத்தசயமுஞ்சுவாசமுட னேய்ந்தவத்திலாய்வுபல
போற்றுமர்சுகிராணிசேழ பொருத்தும்பாண்டுகாமாலை
தீர்த்தேனேகுமென்றுரைத்தார் திருந்தபஞ்சாக்கினிகுளிகை 1059

வேறு.

குளிகையாகாரமிருந் மனோசிலைகெந்திலிங்கம்
அளுருவெண்காரங்கூட்டி யந்திடையெல்லாஞ்சேர்த்து
பழநிம்பச்சாறுவிட்டுப் பண்புடன்சாமம்நாலு
தெளிபவேயரைத்துநன்றாய்த் திரட்டிடு உடுருபோலே 1060

வேறு.

கடுகதுபோல்மாத்திரையைச் சன்னிவாதங்
கண்டத்திலேயெல்லாம் போவதற்கு
மூடுகியதோர்கொழுஞ்சியின் சாற்றன்னிற்கொண்டால்
மோசமில்லைதீர்ந்துவிடு முணர்ச்சியாகப்
படுபாவிசன்னிக்கு முலைப்பாலிலுண்ணப்
பறந்துவிடுஞ்சன்னியென்ற தெல்லாம்போகும்
திடமுடனேயிந்தமுறை செய்துபாரு
செகத்திலானந்தத் தாண்டவன்சாதியே 1061

சாதிலிங்கமெலிகார மிளகுநாபி
தற்சமனாய்ப்பழச்சாற்றி லரைத்துநன்றாய்
ஏதமறக்குன்றியள வுண்டைசெய்து
இஞ்சிச்சாற்றாலரைத்து யிடுவீராகில்
பேதமுள்ளசுரமேகுஞ் சன்னிபோகும்
பித்தேருக்தேள்விஷமும் பேசியோடு
காதமதுபிரமானந்த வயிரவனுமென்றே
கவில்வார்களெல்கெங்கு முறுதிதானே 1062

உறுதியாந்திரிபலையுங் காந்தங்காய
முகந்தலிங்கம்வெண்கார மிர்துதிரிகடுகு
பிறிதியாம்வசம்புடனே வாய்விளங்கமோமம்
பின்னுமொருகுருசாணி கழஞ்சுவகையொன்று
அறுதியாமிந்திடைக்கு வாளஞ்சேர்த்து
அப்பனேநொச்சிச்சாற் றன்னிலாட்டு
குறுதியால்கைபானின் சாற்றினாலுங்
குமுறவேமூன்றுநா ளாட்டிஆட்டே 1063

மூன்றுநாள் தானரைத்து கடலைபோல
முழுக்கவேமிழ லுலர்த்தி வைத்துக்கொண்டு
ஏன்றதொருவிரோசனமாம் வெல்லமாகு
மெடுத்திட்டமோருஞ்சோ றுண்ணத்தீரும்
சென்றதொருகுன்மமது நொச்சிச்சாறுந்
தீருமேயாவின்பாலாற் சோறுநல்கும்
வென்றசிரசஞ்சுக்குக் கியாழங்கொள்ள
வெறுப்பானசுரங்களெல்லாம் விட்டுப்போகும் 1064

வேறு.

போகுங்காயம் புகலுமங்காரமாம்
ஏகுமூஷ்ண மெழிலானசூடறும்
பாகும்வாய்நீர் பருகவருகலும்
வாகுடன்ரோகம் வறைந்தோடிப்போகுமே 1065

வேறு.

போகுமடாசேத்துமங் குமட்டியின்சாறு
பொருந்தவேமாதளையின் சாறுமாகும்
ஏகுமேகாசமெல்லாந் தோடைசுக்கு
மிதுகண்டங்காலியுடன் தூதுவளையின்சாறும்
ஆகுமேயெரிவுடனுட் காந்தல்போக
அப்பனேநெல்லிக்காய்க் கியாழங்கொள்ளு
தாகமேயெடுத்தாக்கா லாவின்மோராந்
தணியுமேநோயென்ற வாயுவெல்லாம் 1066

வேறு.

வாயுகுன்மம்வயிறுடம்பு மருவுங்கைகால்சிறுத்திருக்கும்
மேவுஞ்சிறுநீர் துளிதுளியாய் விழுமேயிதற்குப்பிரமாணம்
பேயினத்திப்பிலைச்சாற்றில் பெருகும்பத்தியமோர்சோறும்
ஐயமந்தம்பயித்தியமு முகந்தகுன்மம்நெஞ்செரிவு 1067

நெஞ்சேயெரிக்குந்தலைவலிக்கும் நெகிழ்ந்தகுளிருமுட்காச்சல்
பஞ்சுபோலச்சந்துகள்நோம் பருகுமுருங்கைச்சாற்றிலிட
மிஞ்சுமாவின்பாலுஞ்சோற் மிகுந்தபேய்ப்புடல்முசுமுசுக்கை
தஞ்சமென்றேகுளிகையிடத் தவறுச்சோற்றிற்றயிருந்தே 1068

அருந்துங்கிராணிக்கோர்குளிகை யசனம்பண்ணும்போதுகொள்ளு
வயிறுகுன்மநீர்க்கோவை மகிழுஞ்சுக்குவெண்ணீர
பசிநீர்ச்சோறுதானுகும் பகருங்குடிநீர்சுக்குபலம்
கதிரோன்றில்லாவேப்பிலையுங் கருதும்பாண்டுமிவைதீரும் 1069

வேறு.

தீரும்ரத்தப் பிரமியந்தானறும்
சிருங்கழிச்சல் சிறங்கக்கழிந்திடும்
வீரும்விலாவில் விளம்பிடுரோகமும்
பூருமேபிணி புகலவேதீருமே 1070

வேறு.

தீரும்காழிநீருழக்காக்கிச் சிறந்ததிப்பிலிமேற்பொடிகொள்
பாருமருந்திட்டடேனுப்பும் பகரும்வெள்ளையோக்காளம்
மாரோவணையாரோசிக்கும் வாயாலெடுக்கும்நுரைதள்ளும்
சேரும்நிம்பப்பழச்சாறு சேர்த்தேமோருஞ்சோறுமுண்ணு 1071

வேறு.

உண்ணுமந்தாக்கினிக்குக் காயம்வெந்நீர்
உள்நெஞ்சுதினவுக்கு வாளைமேவாம்
திண்ணம்வெட்டி வேராகுங்கூடச்சேரு
திரும்பவேகருப்பஞ்சாற் குளிகையொன்று
பண்ணுபுந்திமேற்சொரியு மரியமஞ்சள்
பகாவேபொடியாக்கிக் காச்சியுண்ணு
கண்ணவேயரியுடன் மஞ்சள்தூளுங்
கைம்முறையாய்க்காச்சியுண்ண மூலந்தீரும் 1072

வேறு.

திருமூலர் திறமாம்நலமூலம்
கூறும்வாய்வு குழிக்குந்தசவாய்வு
நாறும்வாய்ப்புண் ணவிலப்பறந்திடும்
தேறுந்தேறையன் தெளியுமூலமிதே 1073

வேறு.

மூலவியாதிக்கோர்குளிகை முனிந்தகரந்தைச்சாற்றிலிட
சாலப்பத்தியம்பாற்சோறு தயங்குசுவாசகாசத்துககு
ஏலச்சிவதைபேரீச்சு யேழிலொன நிற்றுனிடவே
பாலாமாடாதோடையில்ல பரிந்துஙயா முந்தனில்வையே 1074

வையேவயிறுகற்போல மகிழவீங்கித்தொப்புளின்மேல்
ஐயேசுளித்தகயமுமில்லை யானபசியுந்தாகமில்லை
னையுமலங்கள்தான கழன்று நாடுநொச்சிச்சாற்றிலிட
செய்யும்பத்தியம்பாற்சோறு திருந்தக்கூட்டிநீர்க்கருக்கே 1075

கருவேப்பிலையும்ரண்டுபலங் கன்றச்சுக்குமேவார்பலந்தான்
மருவகாழிநீருழக்காய் மகிழ்ந்துதிப்பலிமேற்பொடிகள்
திருவேரீனயாமுசுமுசுக்கை திகழ்ந்தவெல்லமதிற்கூட்டி
உருவேமிக்கவொளிசிறக்குமுணர்வாயபத்தியமுணர்சொல்வோம் 1076

சொன்னவனுபானந்தப்பாமல் சுகிக்கமருந்துதான்கொள்ள
வன்னபத்தியமீறாமல் மகிழ்ந்தேயுண்டுநடந்தாக்கால்
அன்னம்போலநடையுடையா ளலைக்குப்வியாதியடவெல்லாம்
நன்மையாகும்நாளுக்குநாள் நன்றாய்த்துலங்கும்வயிரவனே 1077

வயிரம்வெள்ளைபவளமுடன் வழங்கும்லூட்டுக்கால்சேர்த்து
அயிரமுள்ளும்பன்றியிரை யாகுநண்டுக்கல்காந்தபற்பம்
பயிராம்வகைக்குயிடைமூன்று பண்ணிக்கல்லுப்போற்நவடி
கயராங்குராங்குக்கல்லுடனே கண்டதொலிக்கு வொவ்வொன்றே 1078

ஒன்றேபாம்புக்கல்லரையா முபர்ந்தமுத்துப்பவழம்பத்து
நன்றேருக்குமங்கஸ்தூரி நாட்டுரோசினைமூன்றிடையாம்
சென்றேபிராந்திதனைவிட்டுச் சேர்த்துப்பத்துநாளரைத்து
அன்றேமிளகுபோலுருட்டி யாகும்பிராந்திதனிலருந்தே 1079

அருந்தச்சன்னிபதின்மூன்று மானசேத்துமமிருபதுவும்
வருந்தும்பித்தம்நாற்பதுவும் வாதவகையோரெண்பதுவும்
இருந்திடங்களற்றுப்போய்ப் பின்னிகழ்ந்திடும்நோய்களெல்லாம்
திருந்துமென்றானுந்துபோலச் செய்யுங்கஸ்தூரியுண்டை 1080

வேறு.

உண்டையாந்தாளகத்தை யிஞ்சிச்சாறு
உகந்தபிச்சம்பழச்சாறு முள்ளிச்சாறு
தண்டாதபூவரசம் பட்டைச்சாறு
தருகாமலரைத்திடுவாய் நாலுசாம
மிண்டவேயடைதட்டி பூவரசஞ்சாம்பல்
மிகுத்ததொருகுகைபிடித்து வுலரவைத்து
பண்டானதாளகத்தை யுள்ளேவைத்து
பதனமாங்கீழ்மேலுஞ் சாம்பலையுமிட்டே 1081

இட்டுநீசட்டிக்குள் மேலேமூடி
யிதமாகத்தீயெரிக்கப் பறபமாகும்
புட்டுப்போலதையெடுத்துப் பரணிவைத்துப்
புகட்டுவாய்சயமீனை யிரைப்புததீரும்
திட்டமொருபணவிடைதான் திரிகடுகுபொடியிற்
தீருமேசயகாசமீளைபோகும்
தொட்டதொருவியாதியெலா முடனேபோகுஞ்
சுதமாதவினவமொரு யிருவிக்களே 1082

வேறு.

இருவிகாயிபரிதார மிதத்தெந்திசாதிலிங்கம்
வருமேதான்றிக்காய்சுக்கு மருந்துமிளகுதிப்பிலியும்
தருமேயோரொன்றுகழஞ்சாகத் தானேவாளம்ஐங்கழஞ்சு
அருமையாகச்சுத்திபண்ணி யரைக்கவேண்டுங்கையான்சாற் 1083

கையாந்தகரைச்சாறதனல் கதிக்கவேழுநாளரைத்து
மெய்யேயொருநாட்கொருசாம மிதமாயிராமற்றனரைத்து
உய்யும்பயறுப்பிரமாண முண்டையாக்கிநிழலுலர்த்தி
ஐயாசஞ்சீவிக்குளிகையென்று அறைந்தார்தேரையனகமாக 1084

வேறு.

அகத்தியமாய்சொல்லுகிறோம் பவுத்திரமூல
மாகுமேசாதிக்கா யதனிற்கொள்ள
மகத்தானவாய்வுக்குச் சிறுநீராகு
மாசற்றபழச்சாறு விஷத்துக்காகும்
சுகமில்லாச்சூலைக்கு முருங்கைப்பட்டை
சுத்தவலிகுன்மத்துக்குக் குடிநீர்நொச்சி
எகத்திலேபிறமேகம் பஞ்சுமேக
மேகுமேகறுந்தாழி சாறுகொள்ளே 1085

கொள்ளுமடா அஞ்சியதோர் குளிர்வெதுப்பு
கூறுங்கள்நெல்லிக்காய் கியாழம்வென்னீர்
தள்ளுமேபிரண்டைவெண்ணெ மலக்கட்டப்பா
தாங்காதயெரிகுன்மஞ் சீந்திற்சாறே
வள்ளலேசம்பத்து போகவென்றால்
மகத்தானவெள்ளாட்டுப் பாலிற்கொள்ள
மெள்ளவேவயிற்றிலுள்ள குன்மமெல்லாம்
விட்டோடுந்திரிபலையுந் திரிகடுகிற்றூனே 1086

வேறு.

கடுக்கும்வயிற்றிற்குறிப்பறிந்து கண்டுசெய்வாயனுபானம்
எடுக்கும்வியாதிகுறிப்பறிந்து யெல்லாநோயுந்தீர்ந்துவிடும்
தொடுக்கும்பேதிமாம்பட்டை துலங்கும்உப்பிலியிஞ்சிச்சாற்
கடுக்குஞ்சஞ்சீவிக்குளிகைகண்டால் காடாதோடுங்கெந்தகேள் 1087

கெந்தகம்பன்னிருகழஞ்சு இளர்ந்தரசமும்பதுகழஞ்சு
வந்தரப்பொடியைங்கழஞ்சு மருவுமருந்துநிரைகொண்டு
விந்தகுமரிச்சாற்றரைத்து மேவுந்தேங்காய்தனிலிட்டு
அந்தப்பெறவேசட்டியுள்ளே யடவாய்த்தேங்காய்தனில்வையே 1088

வைத்தமருந்தைமூன்றுநாள் மகிழவரைத்துப்பொடியாக்கி
நித்தம்நாலுபணவிடைதா னிரையாய்செய்யிற்றூன்கொள்ள
அத்தசோகைபண்டுவகை யானகழிச்சலதிசாரம்
இத்தனையெல்லாந்தீருமென்று யிசைவாய்த்தேரையனியம்பியதே 1089

கோரோசினைக்குளிகை.

வேறு.

இயம்புந்தேற னிசையுமொழியிது
சுயம்புலிங்கஞ் சுருதியாம்நாரமும்
நயம்படவே நவினுமனோசிலை
கயம்பெறவே கருதுமிளகேடே 1090

எடுத்துமேயிடை யேகச்சமனதாய்
தொடுத்துத்தேனிற் றுநாளவரைத்திடு
கொடுக்கமூன்றுநாள் கூறுஞ்சுரமறும்
வடுத்ததேரையண் வாக்குபொய்யாதிதே 1091

பொய்யாதையா புகலுங்குருமொழி
அய்யர்வாக்கு அவனியில்பொய்யாது
துய்யாக்காவியந் தோற்றுபெருநூலாம்
மையாம்விழியாட்கு மகிழவியம்பினர் 1092

வேறு.

இயம்பியதோர்நாபிரசம் கெந்தகமுந்தாரம்
இயன்றமனோசிலையுடனே வாளங்கூட்டி
செயம்பெறவேவப்பிரேக செந்தூரங்கூட்டி
சேராலிங்கமுடன் சமனதாக
வயம்பெறவேகொச்சி யூமத்தஞ்சாறு
வகைவகைச்சாற்றாலரைத்துக் குன்றிமுத்து
நயம்பெறவேயுருட்டியதை நிழலுலர்த்தி
நன்றாகச்சட்டியிட்டு வேடுகட்டே 1093

கட்டியேவெயிலில்வைத்து யெடுத்து அப்பா
கைபார்த்துமுகம்பார்த்துக் குணங்கள்பார்த்து
திட்டமுடன்மாத்திரைதா னரண்டெடுத்து
திறமானவனுபானம் வைத்துக்கொள்ள
வட்டானஆலைவெல்லக் கட்டிதன்னில்
வைததருந்தவெறுவெனனீர் சுரத்துக்காகும்
இட்டமுடனவாதசுரம் பித்தசுரமெல்லா
மேருமேசீதசுர மெல்லாதீர்க்கும் 1094

வேறு

நீற்றுங்கெந்தகம்வெண்காரம் நின்றநாபிசமனாக
ஒக்கக்கூட்டிப்பழச்சாற்றி லுருளத்திரட்டிவைத்துக்கொண்டு
மெய்க்குங்கிரில்வாயில்வைத்து வேண்டும்வாலைசுருட்டியடை
தக்கபானைதன்னிலுப்பை தானேகொட்டில்மேல்வையே 1095

வைத்துஅதுமேற்கொட்டுவுப்பை வாயைமூடிச்சீலைசெய்து
உத்தஅடுப்பினனலையிட்டு ஓயாதெரிக்கநாற்சாமம்
கைத்தாழ்வில்லாத்தீயெரித்துக் கலசத்தெடுத்துமத்தஞ்சாற்
மெய்த்தார்நொச்சியிஞ்சிச்சாற் விளங்கப்பிசறியுலர்த்தியிடி 1096

உலர்த்திவைத்துச்சூரணத்தா னொடுங்குசுரமும்நசியமிட
பெலத்தயிடமும்வலமாகிற் பேணிச்சுரமுமிகவடித்தால்
வலத்தேநாசிதானூத மாறுமிடமுமப்படியே
நிலத்தேயேகசுரமானல் நிகழும்ரண்டுநாசியுமே 1097

வேறு.

நாசிகாபீட நாற்றமும்ரோகமும்
சூசிகாவாயு தோன்றுமிருமலும்
வீசுநாற்றமும் மேவும்சுவாசமும்
பாசுமேபிணி பகரவேமாறுமே 1098

வேறு.

மாறுங்கறுத்தசீரகத்தை வாகாய்க்கியாழந்தான்கூட்டி
கூறாய்த்தக்கிராணிக்குக்கொடுக்கத்தீருமதுவல்லால்
ஏறுந்தாபசுரத்துக்கு மிடுகீழ்நெல்லிச்சாறதனில்
மாறுநாலாமுறைக்காச்சல் வாங்குங்கையான்தகரைச்சாற் 1099

சாறுங்காரைச்சாறதனில் தாக்கவசீரணந்தான்போகும்
பாராய்தயிர்வடிதண்ணீரிற் பருத்தவயிற்றுக்கழிச்சல்போம்
தீராச்செவ்வெட்டைசடிதனக்குத் தேசிப்பழச்சாற்மேற்பூசு
நேராய்க்கற்றாழஞ்சாறதனில் நெருங்கிப்பூசியுள்முழுங்கே 1100

முழுங்குமூத்திரக்கிரிச்சிமஞ்சள் முனிந்தசாற்றில்வெண்காரம்
பிழங்கப்பொரித்துக்குளிகையுடன் பேணியுண்ணவதுதீரும்
களங்கமானயிருமலரும் காட்டுத்துளசிச்சாற்றிலிட
விளங்கும்பித்தமதுதனக்கு மீறுமூமத்தைச்சாற்நசியம் 1101

நசியம்பண்ணவெறிபித்தம் நன்றாமூமத்தையிலைச்சாற்றில்
இசையவெள்ளாட்டுப்பாலதனில் இடுமோர்குளிகைதலைதனக்கு
அசையர்ம்வெள்ளாட்டுப்பாலரைத்து அதுவுந்தலையிற்றப்பிடவே
நிசமாம்பிரமிகியாழத்தில் நிச்சயம்பித்தந்தீர்ந்திடுமே 1102

தீர்க்கிடும்வேப்பிலைச்சாறதனால் தெளிபுக்குட்டமனைத்தினுக்கும்
ஆர்க்கிடுவெருக்கின்பாலதனை லானசிலைகாணுநட்டி
வார்த்தகுளிகைதானரைத்து மடித்துத்திரியுந்தானுநட்டி
போர்க்கநெருப்பிற்றன்கொளுத்திப் புகைபகாசிதனிலேற்றே 1103

வேறு.

ஏற்றியதோர்புகையதனை நாசிக்கேற்ற
எழுக்தோடுக்தலைநோயுமெங்கேயென்று
சாற்றியதோர்சன்னியெல்லாந் தவறுண்டேபோம்
சண்டாளசிலேத்துமநோய் தலம்விட்டேகும்
கோர்த்திடுமேகோவையிலைச் சாற்றினாலே
கூறுபடக்கஞ்சனமா நோய்கடீரும்
போற்றியகோர்மாதர்கிட்டுபோகவுண்ணு
புகழாகயின்னமொரு மருந்துகேளே 1104

வேறு.

கேளுக்கிப்பிலிகேளுடனே கேட்டும்விக்கல்சத்திபல
வாழுக்கேள்கள்கொட்டமணக்கால் மகிக்குயிஞ்சிகன்னிலிடு
தாழுங்கொத்தான்சிறுநீரிற் றக்குமணிச் சக்காளிச்சாற்
அழும்பூரானட்டுவாய்க்காலி யதுவுமிஞ்சிச்சாற்சசியம் 1105

சசிபாமகோதரமணிக்கக்காளி காட்டுர்வயிற்றிற்பூசிவிடு
வசையாக்கண்ணேய்கேசிப்பழ மனுஷர்முலைப்பாலஞ்சனமா
மசையாதிருமல்தான்தீரு மானகொள்ளுக்கிரிபலையும்
பிசகொன்றில்லாச்சூரணத்திற் பேணிக்குளிகைபொடித்துண்ணே 1106

உண்ணும்வாய்வுமணலிச்சா றுரைத்துக்குளிகைதானுண்ண
இண்ணவாய்வுடன்தீருக் தெளியாக்குன்மானைக்கினுக்கும்
நண்ணும்நொச்சிச்சாற்றிலிடு காட்டுக்கண்ணீர்சூட்டுக்கு
எண்ணுமெள்ளிலைச்சாற்றிவிட யேகுஞ்சூடுதான்கரையும் 1107

கரைக்குமழுக்கறுசூரணத்தில் கலந்துகுளிகைவென்னீரும்
உரைத்துக்குடிக்கச்சந்துநோய்களுடனேவாதம்பலதீரும்
திரைக்கும்வயிற்றுவாய்வுக்குத் தீருப்விழிபிலைச்சாற்றில்
குறித்துச்சொன்னேம்பலதீருக் குணமாயின்னத்திரிபலையே 1108

திரிபலைசூரணம்வெந்நீரிற் றிறக்கவைத்துவுண்டையிட
குறியாமுப்பிசந்தான்போகுக் கொண்டேதாதுவர்த்திக்கும்
நிறையார்தழுதாழைவெண்குன்றி நிகலச்சாற்றிற்றுனிடவே
குறியாஞ்சயரோகந்தனக்குக் கொண்டேபொசிக்கத்தீர்த்திடுமே 1109

தீர்த்திடுமோமம்வெண்ணீருந் தெளியுங்காசுக்கட்டியுடன்
பார்தமாகக்கலக்கியுண்ணப் பறக்குஞ்சயகாசநோயெல்லாம்
வார்ந்திடுவயிற்றில்நோய்கட்கு மஞ்சுமாவின் றயிரிலிட
ஏந்துங்கிராணிக்காவின்மோ ரியன்றவிரோசனம்விளக்கெண்ணெ 1110

எண்ணும்பசுவினெய்யிலிட விருக்காதோடும்வாய்வெல்லாம்
நண்ணும்பிரமியம்வெள்ளாட்டுப்பால் நாட்டமுடம்புயெரிப்புக்கு
உண்ணும்பச்சைசழுநீரி லுகந்துகுடிக்கத்தான்றீரும்
திண்ணம்நரைதிரைமாறலுக்குத் தீரும்ஆட்டுப்பாலாகும் 1111

ஆகுங்கற்சுண்ணந்தொனிப்ப வமலையும்பல்லுத்தானிறுகும்
போகுஞ்சன்னிபூமத்திலைச்சாற் புகட்டுதீப்பட்டபுண்ணுக்கு
ஏகும்வெல்லத்துடன்கொள்ள விதமாம்வல்லாரைச்சாறதனால்
வாகுபெறவேயனுபான மருவிக்குடிக்கத்தீர்ந்திடுமே 1112

சுரங்களுக்குக் கியாழம்.

வேறு.

தீருமேசுரந் திறமாகமாந்தர்க்கு
கூறுந்திப்பிலி குறிக்குமதுரமாம்
தூறும்பற்படம் தோற்றநன்னாரியாம்
வேறுங்கோஷ்டம் விளங்குங்காஞ்சோரியே 1113

சோரிதன்னுடன் தோற்றுஞ்சிறுதேக்கு
பூரிகோரையின் புகலும்தேவதாரம்
சாரிபேய்ப்புடல் சாற்றுமிளகுடன்
வாரிசுக்கு வகுக்கக்கியாழமே 1114

வேறு.

திருஞ்சூதரோகணியுஞ் சிலையோரிடையுமொன்றாக
வாருநதான்றுதிரிகடுகு வகைக்கொண்டுவிடையாகும்
சேரும்வாளஞ்சுத்தியிடை சேர்த்துமூன்றுகழஞ்சாக
பாரும்பாகலிலைச்சாற்றாற் பருத்திவிரைபோறுருட்டே 1115

உருட்டிகுளிகைசீதசுர மோங்குமிஞ்சிச்சாற்றிலிட
திருட்டுப்பித்தந்தீருதற்குத் தெளிவாந்தேசுப்பழச்சாற்றில்
வெருட்டுவாதந்தான்றீர வெண்ணொச்சிச்சாற்றிலிடவாகும்
பிரட்டுக்குன்மமாவின்பால் பேசாதோடும்வாய்வெல்லாம் 1116

எல்லாந்தீரும்லிங்கமுடனேகும்காய்வெண்காரம்
நல்லதிப்பிலியவாச்சாரம் நாடுமிளகுகாந்தங்கெந்தி
சொல்லுமியிலையதுசமனாய்த் துலங்கவிஞ்சிச்சாற்றாலரைத்து
மெல்லக்குன்றிப்பிரமாணம் விளங்குமிஞ்சிமலவாறுமே 1117

அருமேகஸ்தூரிபணவிடை யஞ்சு ஆகும்ரோசினைபணமரையும்
பெருமேகிராம்பு அரைப்பணமும் பின்னுக்குங்குமமப்படியே
இறுகுஞ்சாதிபத்திரியு மிதவும்பணவிடையரையாகும்
குறுகுங்காட்டுமிருகாத்தல் குறையாதந்தயிடைசேரே 1118

வே று.

சேருநீவெள்ளறுகு செருப்படிச்சாற்கூட்டி
தேடுநீர்மேனியின்சா றுடுதின்னுப்பாலை
வாருநீபொடுதலையுங் கரிசலாங்கண்ணி
வகையானகரந்தைகொட்டான் சாறுங்கூட்டி
போானயேழுவகைச் சாறுங்கூட்டிப்
பிசகாமலரைத்திடுவா யேழுநாளும்
கூராகத்தானரைத்துக் கடுகுபோலக்
குளியவேநிழலுலர்த்தி வைத்துக்கொள்ளே 1119

கொள்ளுவாய்குளிகைதனைப் பதனம்பண்ணி
கூறறிந்துகொடுத்திடுவாய் கூற்றன்போல
தள்ளரதசன்னிவகை யனைத்தினுக்குந்
தாங்காதசுரங்குளிர் காச்சலெல்லாம்
மெள்ளவேதிரிதோஷம் பிணதோஷமும்
விளங்கவேயனைத்தினுக்கும் விருப்பமாக
உள்ளபடிதேனிலே குளிகையொன்று
உரைத்துநீகொடுத்திடவே யொழிந்துபோமே 1120

ஒளிவானமனோசிலை சலாசத்துந்தா
னுதவுகின் றருங்கிலியங் கற்பூரங்கூட்டி
தெளிவானயிருவிகெந்தி தாளகந்தாரந்
தெகட்டுமேபடிகார மிந்துருசுகூட்டி
வளியாகவகையொன்று விராகனென்று
வாளஞ்சுத்திபலமொன்று வகையாய்க்கூட்டி
களியாகஅரைத்திடுவாய் சாமமட்டுங்
கறுத்தநிறக்கம்பிளிபோற் காணும்பாரே 1121

பார்த்துநீவெல்லமொரு பலமும்போடு
பாங்கானகொட்டைகச்சிக் கரிபலமுமாகும்
சேர்த்திடுவாய்தேங்காய்ப்பால் விட்டு ஆட்டி
சிமிழ்மாட்டுக்கொம்பதனி லடைத்துக்கொண்டு
கூற்றறிந்துவெற்றிலையிற் பயறதாகக்
கொடுத்திடயெண்பதுவாதம் வாய்வுதீரும்
விற்றிருந்தசன்னிபதின மூன்றுந்தீரும்
விஷமெல்லாய்பறந்துவிடு மேன்மைதானே 1122

கற்ருழைக்கிரதம் வேறு.

காணுங்கற்கன் கற்ருழைக்கிருதமாம்
ஊணும்பட்டை யுயர்ந்தாற்ப துவாம்
ஈணுமேபனை யெழிலாம்பிலப்பனை
தோணுஞ்சிரகந் தோன்றப்பலமெடே. 1123

எடுத்துச்சர்க்கரை யெழிலாம்பதமுடன்
தொடுத்துக்கிரகந் தோன்றக்கிளறிடு
அடுத்துசலாசத்து வறையும்பற்பமுடன்
கொடுத்துவொன்ருய்க் குமுறயிறக்கிடே. 1124

இறக்கிமாய னெழில்டிபோற்றியே
உறக்கமண்டல முவர்துவருந்திடில்
பறக்குமேகம் பகருமிருபதும்
சிறக்கப்போமெனத் தெளிந்தனர்சித்தரே 1125

மேகங்களுந்கு ஈன்ஞரிக்கிருதம்.

சித்தர்வாக்குத் திசையினும்பொய்யாது
உத்தவோரா முறையுநன்ஞரியாம்
சத்தமேபலந் தாவயெடுத்திடு
கத்தசுக்குடன் கழறவரையெடே 1126

எடுத்துச்சூரண மெழிலாயிடித்துமே
தொடுத்துமேபனை வெல்லப்பாகுதனில்
அடுத்தசூரண மன்பாகக்கொட்டியே
விடுத்துநெய்பலம் விரும்பக்கிளறிடே 1127

கிளறியம்பாள் கிருபைக்கண்போற்றியே
தளறிடாமலே தாக்குங்கிருதத்தை
வளமுடன்மாந்தர் வருந்தமேகம்போகும்
பளம்பெறுமேனி பாங்காகக்காணுமே 1128

வேறு.

கண்டதோர்முசுக்கையுடன் தேவதாரம்
கற்பூரமிருவேலி முத்தக்காசு
மண்டல்கமழ்செங்கழுநீர்க் கிழங்குநல்ல
வளர்கடுகுரோசனை கச்சோலந்தானும்

நன்றெனவேஒரிரண்டு கழஞ்சதாக
நல்லெண்ணெயிருநாழி நயமாய்த்தேடி.
ஒன்றுபடவிட்டெரித்துப் பதத்திற்காச்சி
வுச்சிதனிலெண்ணெய்தனை யூற்றிக்கொள்ளே 1129

வேறு.

கொள்ளேயெண்ணெய்சிரசில்வைக்கக் கூறும்பித்தங்கிறுகிறுப்பு
கள்ளேதாழும்கண்ணெரிவு கத்தபிழைகள்சாடுதல்போல்
இள்ளேமேனிவெளுப்பிடுதல் மெய்யிற்றுபாயிகுதியும்போம்
தள்ளேபொதிந்தமொழிமாதே தவலுமின்னீரெண்ணியிதே 1130

மகாகன்னி எண்ணெய்.

கன்னிச்சாறுநாழி கருதும்பசும்பாலிருநாழி
தின்னுமாஞ்சில்மத்திஷ்டி சிதவும்நன்னார்முத்தமொடு
மன்னக்கடுகுரோகணியும் வளர்கச்சோலம்சாதிக்காய்
அன்னேகண்டில்வெண்ணெயுடன் அழகுதான்றிநெல்லியுமே 1131

தான்றிமதுரம்விலாமிச்சை தக்கபுனுகுசட்டமுடன்
நீண்டத்தாமரையின்வளையம் நிறமாம்பச்சைக்கச்சோலம்
கூண்டயேலமிலவங்கம் கொடியஅடவிதக்கோலம்
பூண்டயிருவேல்சண்பகப்பூ புகழுமரத்தைசெவ்வள்ளி 1132

வள்ளிக்கொடியேகற்பூரம் வளர்செங்கழுநீர்கற்கிழங்கு
தெள்ளுமலையிலிருவேலி சிறக்கும்கொந்திதிறமாக
கொள்ளேசாக்கோரொருகழஞ்சு கூட்டிபரைத்துக்கியாழமதில்
எள்ளினெண்ணெய்நாழிவிட்டு இதுவுபெழுதுபதம்வடியே 1133

வடித்தேயெடுத்துச்சிரசில்வைக்க வளருமுடலில்வுட்சுரமும்
தடித்தயெலும்பின்காச்சல்விடும் தக்கசுரமுமாறிவிடும்
இடித்தநெஞ்சிற்றுமாறும் யிரைத்தேபெரியநவசுரம்போம்
படித்தோர்சொன்னகன்னியெண்ணெய் பகாக்கேளுமடபயிலே 1134

மூளு உளுந்தெண்ணெ.

மானேவுளுந்துயிருநாழி வார்க்குந்தண்ணீர்பதினாறு
சேனோர்நாழிதனிலூறிச் சிறுகக்காச்சிநாழி
தானேவடித்துக்கொதிதள்ளி சதையாங்குப்பையிலவங்கம்
தேனேயிந்துஅரத்தைசுக்கு செய்யமிளகுதிப்பிலியே 1135

செய்யகாளம்தேவதாரம் சிவந்தமடவிக்கச்சோலம்
வையம்புகழும்அதிமதூரம் வளர்நைச்சோலம்பீறறி
கையும்திப்பிலிபிலிகையும் கற்சீரகமும்வெட்பாலை
துய்யக்குறுஞ்சிவிளாவரிசி சொல்லுங்கடுகுரோகணியே 1136

கடியதகரம்செண்பகப்பூ காணும்வெள்ளிலோத்திரமும்
துடிசேர்சரக்குவோரொன்று சொல்லுங்கழஞ்சிதான்கொண்டு
படிகோளெண்ணெயிருநாழி பசுவின்பாலுமிருநாழி
வடியுங்காணுமெழுகுபதம் வழங்குமூச்சித்தனிப்பொறுத்தேன் 1137

பொருத்தியெண்ணெயுமக்குகொண்டு பூசிநையவிடுவீராய்
திருத்தும்பக்கவாதமுடன் திமிரும்நடுக்குவாதமும்போம்
கருத்தாங்கன்னச்சூலையுடன் காதிலிரைச்சல்தலைநடுக்கம்
இருத்துங்கேளாய்செவிதானும் இளகுமுளுந்துசண்ணெயிதே 1138

கொசுமெழுகெண்ணை.

வேறு,

சீர்சேருமெழுகெண்ணெய் கழுகுகூந்தல்
  செய்யதாமரைவளைய மிருவேல்நன்னூர்
கூர்சேருமோரிரண்டு பலமேகொண்டு
  கொண்டிடித்துயிருமரக்கால் தண்ணீர்விட்டு
கார்சேருமூன்றுநாள் காச்சியூறிக்
  கருதியேஅரைமரக்கால் தண்ணீராளுல்
வார்சேருமூலத்தை வடித்தபின்பு
  வளரிளநீரிருநாழி வருத்துக்காணே 1139

வேறு,

வருத்தேமெழுகுபதமாக வடித்தேபதமாயிருநாழி
தொகுத்தேயுரியதண்ணீரில் சுகமாய்க்காய்ச்சிநாழியதாய்
மிகுத்தநியாழந்தனில்வார்த்து விரும்புமெண்ணெய்நாழிவிட்டு
பகுத்தஅரத்தைசதகுப்பை பரிவாங்கோஷ்டம்குளவிந்தம் 1140

குளஞ்சேர்பெரியகுரும்பையுடன் கொள்ளுங்கடுகுரோசனையும்
வளஞ்சேர்முத்தக்காசுஅதில் மருவுங்தேவதாரமுடன்
உளஞ்சேர்அரியதாளமுடன் வுதவுங்களஞ்சிஓரிரண்டு
விளஞ்சேரரைத்துக்கரைத்தெடுத்து மெழுகுபதமாமெல்லியதே 1141

பதமாமெண்ணெய்தனையெடுத்து பகருஞ்சிரசின்மேற்பூச
விதமாம்பழையவெதுப்புவிடும் மேவுஞ்சிரங்குதானுலரும்
மதமாம்பனுவலாட்டியுடன் மாயவரட்சிவிதுவெல்லா
மிதமாமென்றேசொல்வார்க ளியம்பும்பெரியமுனிவோரே 1142

ம்சுப்பிரமண்யம், பாமப்பாவாலையுடன் புவனைகூட பரிவானதிரிபுடை யின் பாங்குண்டாமே 1335

உண்டாகும்வீரருடன் வடுகன்தீட்சை உத்தமனேநந்தியுட தீட்சையாகும், நன்றானசிதம்பரந்தா னிருபத்தைந்து நலமானயெண்பதது வொன்றுவீடும், ஒன்றானமேருவின் கோணமப்பா உத்தமனே வாலை தீட்சை யோகதீட்சை, வன்றானவாயுவின் பிராணாயாமம் வகையாகச் சிவயோக மனுட்டித்தாரே 1336

அனுட்டித்தார்முக்குளிகை புசுண்டர்தந்தார் அப்பனேயிவர்களுக்கு கௌனமாச்சு, கனுட்டித்தகாயமது சித்தியாச்சு காணவேசிதமபரததின் ஆட்டமாச்சு, வனுட்டித்தவாதமது சித்தியாச்சு வகையாகவினைததெல்லாம் வசியமாச்சு, தனுட்டித்தகற்பமெல்லாஞ் சித்தியாச்சு தாகாகதேவிபதங் காணலாச்சே 1337

ஆச்சப்பாயிவர்களுட கணக்கைக்கேளு அப்பனேகும்பதனங் கேளுகேளு, காச்சப்பாநடுமூலங் கண்டபோகள் நலமானசைவசித்தாந்தரபபா, ஓச்சப்பாஒருநூறுகோடியாகும் உத்தமனேசித்ததிக முறுதியாலே, பாச்சப்பாபரையினுட பார்வைகாண்பார் பாங்கான சோதியவர் காண்பார்பாரே 1338

பாரப்பா காசிக்கு வடக்கேயப்பா பரிவானயோசனைதான் மூன்னூறுக்குள், நேரப்பாவாலைசுஷ்ய பருவதந்தான் நிலையானபர்வதத்தில் சித்தர்கேளு, காரப்பாகாருண்ணியம் ஆகவப்பா கடிதானசிதம்பரத்தினுட்டத்தாலே, நேரப்பாகெவுனத்தின் குளிகைபெற்ற நிலையான சித்த ரெல்லாம் நிகழ்த்துறேனே 1339

இடைக்காட்டுவர்க்கம் கந்தராணந்தனர் வர்க்கம் தேரையர்
வர்க்கம் யூகிமுனிவர்க்கம் நகரிமலை.

நிகழ்த்துகிறேன் இடைக்காட்டுத் தேவர்வர்க்கம் நிலையாகப் பனிரண்டு கோடியப்பா, அகழ்த்துகிறேனனுமார்தான் போகும்போது அப்பனேசித்தரைத்தான தெரிசித்தாரே, இகத்துகிறேன்கணக்கதனைக் குறிப்பாய்க்கேளு இகபரத்தின்கந்தராணந்தர்வர்க்கம், மகத்துகிறேன் மனமேவகசித்தரப்பா வகையானகோடியடாவிருபததஞ்சே, 1340

அஞ்சப்பாதேரருடவர்க்கங்கேளு அப்பனேபதினேழுகோடியாகும், மஞ்சப்பா யூகிமுனிவர்க்கங்கேளு வகையாகக்கோடியடாயெட்டுமாகு டி, துஞ்சப்பாவாதசத்தின் சித்தரப்பா தூக்கானகோடியாயிருபத்தைந்

து, முஞ்சப்பாமுனேயொளியைக்கண்டபேர்கள் மூக்கணனர்கோடிசித்த
ரெழுநூருச்சே, 1341

ஆச்சப்பா அம்விடத்திலிருந்தபேர்கள் அப்பனேகணக்கெல்லாம
றியக்கேளு, நாச்சப்பாநடுமூலங்கண்டபேர்கள் நலமான ஆயிரந்தான்
கோடியாகும், மாச்சப்பாமகத்தான மேருக்குள்ளே மகத்தானசித்தரு
டன்வகையைக்கேளு, பாச்சப்பாபத்தினிடவாயிரந்தான் பாங்கானகோ
டியெல்லாம்பகுந்துவிட்டேன். 1342

பகர்ந்துவிட்டேன்கரியென்ற மலைதானென்று பாங்கா நகரிக்கு
ளிருநூறப்பா, உகர்ந்துவிட்டோமவர்களுக்குயிருப்பிடந்தான் உத்தம
னேயதிலொருவர்மாயாசித்தர், அகிர்ந்துவிட்டுமண்ணையெல்லாம்பறித்து
ப்போட்டு அப்பனேபாறையிட்டுயிறுத்திட்டாரே, வகிர்ந்துவிட்டவரு
ஷமடாகணக்கைக்கேளு வகையானசதுருகந்தான் பதினறுச்சே. 1343

சதாசிவமலை-புண்ணுக்குமலை.

ஆச்சப்பா அதற்கடுத்தநேரேகேளு அப்பனேசதாசிவத்தின் மலை
க்குள்ளே சித்தர்கேளு, மூச்சப்பாயோகநிஷ்டைஞானநிஷ்டை முடிக்
கினறசித்தரிஷி நானூருகும், பூச்சுத்தும்புண்ணுக்குமலைதானப்பாபுக
ழானரிஷிசித்தாள் நூறுமாமே. 1344

அருணைமலை.

ஆமப்பா அருணையென்றமலைதானப்பா அப்பனேயதனுடையபெ
ருமைகேளு, மாமப்பாமாலயனுக தர்க்கமாகி வகையாக ஒருகாலம் பா
ததைக்காண, தேமப்பாயிருவருந்தான்தேடிதேடி திகைத்துநின்றுரப்
பொழுது பரந்தான்கண்டு, சாமப்பாசாபமது ஒருவர்க்கீய்ந்து சகலகலை
நூல்களெல்லா மொருவர்க்கீய்ந்தார் 1345

ஈய்ந்ததொருமலையினுள்ளேயிருப்பைக்கேளு யிகபாமாநாதாக்களி
ருப்பதப்பா, ஆய்ந்ததொருசித்தருடனைஞ்ஞூறுகும அப்பனேயம்மலையி
லடங்கினர்கள், வாய்ந்திருக்குமதைச்சுதந்மலைதானுலு வகையானசித
தர்தாமுங் கவுனத்தினகுளிகையெல்லாங் கட்டினரே. 1346

கட்டினர்சில்லரையின் மலைதான்கேளு காணவே அஞ்ஞூற்றுயெ
ழுபதப்பா, ஓட்டியதோர்சித்தர்வர்க்கபட்சமாகும் உத்தமனேகாணக
தகுளிய ஷ்டுலட்சப் பட்டிருக்குங்குளிகைதோறயிலட்சமாகும், பாங்கரி

னவூர்தோறுமிலட்சமப்பா, தொட்டிருக்குந்தோப்பினுட வோரந்தோறும் துகையாகசித்தரப்பாலட்சமாமே 1347

ஆமப்பாஒருநகரஞ் சொல்லவில்லை அப்பனேபுவனத்துள் நகரமெல்லாம் நாமப்பாமலைதோறுக்குகைகள்தோறும் நலமானவூர்தோறும் நாடிச்சொன்னேன், தோமப்பாதோப்பிலுள்ளவூர்கடோறும் தூக்கான சித்தருடதொகுப்புச்சொன்னேன், வாமப்பாவகைவரிசையாகச்சொன்னேன், வரிசையாயின்னூலைப்பாருபாரே 1348

## சாதிவர்கம்.

பாரப்பாபள்ளர்களிலாயிரந்தான் பரிவானபறையர்களி லஞ்ஞூறப்பா, நேரப்பாபட்டணவர் மூனனூறாகும் கிராகரிக்குஞ் செம்படவரிருநூறப்பா, வாரப்பாவள்ளுவரிலேயாயிரந்தான் வகையானசாணாரிலேம் பதப்பா, சாரப்பாசக்கிலியில மூன்றேம்பரு சதுரானசாதிவர்னரு கூட சந்தானே 1349

## பனிரண்டுசாதிகள் அடுக்காதே,

சூட்சமாம்வண்ணாரிலேஞ்ஞூறப்பா, சுகமில்லாநாவிதரில் மூன்னூறப்பா, காட்சமாங்காதகரிலிருநூறப்பா கடையானகரையாரி லம்பதைந்து, பாட்சமாம்பணிசவரில பததேயாகும் பாங்கானசாதிவகை பனிரண்டாகும், மோட்சமாமூன்றுவகை பெரியோராலே முன்பாகயிவர்களுக்கு கூட்டுமாமே 1350

கூட்டுமாயிவர்களுக்கு முன்பெலத்தினாலே கூதெல்லாந்தள்ளிவிட்டு கிறையாய்நின்றார், ஆட்டுமாம் சமுசாரம்வகையெல்லாம் அப்பனே தள்ளிவிட்டு அடங்கினார்கள், நாட்டுமாமிவர்களுக்கு நாள்தோறும்தா நலமானகர்த்தவ்விய முண்டாச்சப்பா, பூட்டுமாம்வர்களுக்குச் சித்தரப்பா புகழான மனதுவந்து உபதேசித்தார்பாரே 1351

பாரப்பாபறையருடன் பள்ளர்கூட பரிவாக சக்கிலியும் நாவிதன் மூன், நேரப்பாசாணானும் வண்ணானுந்தா னிலேயாதபணிசவனும் கரையானுந்தான, வாரப்பாவள்ளுவனும பட்டுணவர் வகையில்லாச் செம்படவன காதன தான, ஆமப்பாயிவர்களுடன பனிரண்டாகும் அப்பனே மெய்யஸ்பரத்தி லடுக்கவேண்டாம 1352

வேண்டாமேயென மறுமே கேளுகேளு விதிமுறையாய்க் கரிகாலச்சோழனபிள்ளை, ஆண்டாக்கக்குருவைத்தான மேதடிமதடி அப்பனே நாளதோறும ஆலோசுமின முன, ...

கப்ரமாயவனுக்கு உபதேசித்தார், தாண்டாகத்தள்ளினதோர் சர்திக்கு
ள்ளே தாக்காகாவிதன்தான் கலந்தான்பாரே 1353

வண்ணான்வந்து பாத்திரம்வாங்கினதற்கு பரிகாரம்.

பாரப்பாயிப்படியே பண்ணுந்தோறும் பரிவாக மயேஸ்பாத்தில்
கலப்பார்பாரு, கேரப்பாவொருநாள்தான் வண்ணான்வந்து நிலையாகதே
வியுட பாத்திரந்தான், வாரப்பாவாங்கலுமே வாலைகேளு வகையாகச்சா
பமிட்டு சபித்துப்போனாள், ஊரப்பாயிப்படியே செய்தாராகில் உத்தம
னேசாபம்வந்து நேரும்பாரே 1354

நேருமடாமயேஸ்பரத்திலிவர்கள்வந்து நிதிதப்பிநின்றுக்கால் நிக
ழ்த்துரேன்கேள், மாரப்பாமறுநாள்தான் மாறிசித்து வகையாகநிவர்த்தி
யடா வருக்கிறேன்கேள், கோரப்பாகோமியமுஞ் சாணமூந்தான் கொ
திப்பான வஸ்துவுடன் சுத்திகூட்டு, ஆரப்பாஆவின்பா லாவினெய்தான்
அப்பனேயாவினுட தயிர்தான்கூட்டே 1355

கூட்டப்பாபாத்திரந்தானொன்றுக்குள்ளே குறிப்பாக யேழையுர்
தான்கூட்டிவந்து, ஆட்டப்பா அகஸ்தியனேடொன்பதாகும் அப்பனே
சித்தருடசாபந்தீர்த்து, நாட்டப்பாபிரணவத்தோ டஞ்சகூட்டி நலமா
னவகைபொன்றுக்காயிரந்தான், மாட்டினால்சாபமது நிவர்த்தியாச்சு வ
கைபானகிரமத்தின் வரிசையாச்சே. 1356

துலுக்கர்சித்துவேண்டியபேர் இரண்டுவருஷத்தில்
சோதிகாணும்.

ஆச்சப்பாதுலுக்கரில் வண்மைகேளு அப்பனே ஆதிசத்திபார்
வைமெத்த, காச்சப்பாகைகுவித்துதினந்தோறுந்தான், காண்கவேகிரு
பையதுகாணுங்காணும், மூச்சப்பாபெரியோர்கள் உபதேசத்தால் முடி
வில்லாவானத்தைப் பெற்றபேர்கள் வாசப்பாஐஞ்ஞூறு பேர்தான்கேளு,
வகையாகச்சித்தடைந்து ஆடூரூர்பாரே 1357

பாரப்பாசித்ததுதான் வேண்டினோர்க்கு பரிவாகப்பதினைந்து வய
துக்குள்ளே, கேரப்பாவாலையுட தீட்சைபெற்று நிலையாக விக்கினர்கள்
தீட்சைபெற்று, ஆரப்பாஅறுகோணஞ் சடகோணந்தான் அப்பனேயடு
கனுடன் வீரனதும், கேரப்பாசிதம்பரத்தினட்டத்தாலே நிலையாகவாலை
யைத்தா னிகழ்த்துவாயே 1358

நிகழ்த்துவாயிப்படியே தினந்தோறுந்தா, னின்னயமாய்ச்சமாதி
யிலே கடிகைமூன்று, அகழ்த்துவாயந்திசந்தி ரண்டுகாலம் அப்பனே
அப்படியே அகழ்த்துந்தோறும், வகழ்த்துவாய்வருஷமடா பத்துக்கு

ள்ளே, வகையாகஆதிசத்தி சோதிகாணும் இகழ்த்துவாயிப்படியே யிரு
ந்தாயாகி விசுபரமாய்ச்சித்தர்வந்து குளிகையீவார் 1359

ஈவார்தான்மனம்புத்தி ஆங்காரஞ்சித்தம் இயலாகமனதினுள்ளே
ஆங்காரங்கள்ளி, காய்வார்தான் முறைமையுந்தா னென்றப்க்கூட, கா
ணவேவருஷமடா ரண்டுக்குள்ளே, மாயவான்மாய்கையது நீக்கிப்போ
கும் வகையாகச்சாதியிலே சோதிகாணும், ஆயவான் அண்டமெல்லாம்
வெளியாய்க்காணும் ஆதிசத்திகடனமெல்லாங் காணலாமே 1360

வருஷம் 2½-வருஷமூன்றில் சோதிகாணும்.

. காணலாமிருபதுக்கு மேலேகேளு காணவேகுளிகையது வேணு
மென்றால், பூணலாமுன்சொன்ன வுபதேசமெல்லாம் புகழாகப்பொரு
ந்திவிட்டால் பெருமைமெத்த, வாணலாம்வருஷமடா ரண்டரையுமாகு
ம் வகையாகச்சோதியது காணும்பாரு, தோணலாந்துரிதமது கடந்து
நிற்குந் துலையாத ஆங்காரந்தள்ளிநில்லே 1361

நில்லப்பாவருஷமது முப்பதானால் நிலைபானகுளிகையது வேணு
மென்றால், அல்லப்பாஆதிசத்திஉபதேசந்தான் அப்பனே பெரியோரால்
தியக்காணும், மல்லப்பாமவுனத்தில் நின்றுபாகில் மந்திரத்தோடெல்லா
ந்தான்சித்தியாகும், சொல்லப்பாவருஷமது மூன்றுக்குள்ளே சூட்டும
டா சோதியது காணும்பாரே 1362

காணுமடாவருஷமது நாற்பதானால் காணவேசிதம்பரமும் வாலைக்
கிட்டும், தோணுமடாசிவயோக நிஷ்டைதோணுந் தூக்காகவாசியைக்
தான்பாருபாரு, பூணுமடாஉன்மனதை வாசிக்குள்ளே புரியஷ்டகாய
த்தைப புகழ்ந்துபாரு, நாணுமடா உன்மனதை சிவயோகத்தில் நாட்டி
யேவாசியைத்தா னயந்துபாரே 1363

வருஷம் 5

பாரப்பாவருஷமது அஞ்சுக்குள்ளே பாங்கானதாயினுட் சோதி
காணும், ஆரப்பாசோதியைத்தா னறிந்தபேர்கள் அப்பனேசிதம்பரத்தி
ன் ஆட்டங்காணும், வாரப்பாநினைத்ததெல்லாம் வசியமாகும் வகைபா
கக்குளிகையது கிட்டும்பாரு, காரப்பாமனம்புத்தி ஆங்காரம்சித்தம் கடி
தானகான்கையுந்தான் காருகாரே 1364

சோதிகாண.

காரப்பாவருஷமது ஐம்பதாகில் கருத்தானசிதம்பரத்தை உபதே
சித்து, பூரப்பாவாலையுந்தான் புரிந்துபாரு புரியஷ்டயோகத்தின் வாசி

பாரு, கோப்பாநினைத்ததெல்லாஞ் சித்தியாகும் நிலையான அஷ்டாங்கம் ஆடும்பாரு மூரப்பாமூக்குருடு புருவம்நெற்றி மூணரியசமாதிக்கு ளிருந்துபாரே 1365

வருஷம் 6.

இருக்கவேவருஷமது ஆறுக்குள்ளே யிகபரமாயண்டத்தில் சோதி காணும், அருக்கவேவருஷமது அறுபத்தானல் அப்பனே சித்தாகக் கடினமப்பா, பெருக்கவேசிதம்பரத்தை யெண்பத்தொன்றால் புரியடா பென்னோம் புரிந்துபாரு, மருக்கவேமாயையெல்லாந் தள்ளிப்போடு வகையானசமுசார நீதிநீக்கே 1366

நீக்கவேயிப்படியே யிருந்தாயாகில் நிகழ்த்துமடா வருஷமது எட்டுக்குள்ளே, ஏர்க்கவேவருஷமது எழுபதாகில் எளிதல்ல சித்தாகக் கடினமெத்த, பார்க்கவேசிதம்பரத்தை யெண்பத்தொன்றால் பாங்கான மோகனத்தைப் பாருபாரு, கார்க்கவேசமாதிக்குள் காத்துநின்றால் கடிதாகக்காணுமடா பத்துக்குள்ளே 1367

உள்ளேயடா யான்சொன்ன சமாதிநிஷ்டை உத்தமனே யென்னோம் புரிந்துபாரு, அள்ளேயடா மயேஸ்பரத்தில் ஆத்தாள்காணும் அப்பனே யிதுகளைத்தா னெடுத்துக்கொள்ளு, வள்ளேயடா யிவைக ளெல்லாஞ்சித்தியாகவகையாகச்சமாதியது காணும்பாரு, கொள்ளேயடா சிதம்பரந்தா னெண்பத்தொன்று குறிப்பாகக்காணுமடா குறித்துப்பாரே 1368

பாரப்பாமுன்சொன்ன பதினைந்துக்குப் பாங்காகச் சொல்லிவிட்டேன் வருஷம்பத்து, நேரப்பாகாமியத்தி லழுந்தினோர்க்கு நிலைகெட்டு நின்றோர்க்கு நிகழ்த்தினேனே, ஆரப்பாயறிந்துநன்றாய் நடந்தோர்க்காகும் அப்பனேமற்றோர்க்கு ஆகாதப்பா, மாரப்பா மட்டையென்ற மாட்டுக்கெல்லா மதிகெட்டு நின்றோர்க்கு மாட்டவேண்டாம் 1369

பதினைந்துவயதுக்குத் தமர்வாசல்திறக்கவருஷம $\frac{1}{2}$

பாரப்பாபதினைந்து வயதுக்கப்பா பரிவாகசிவயோகம் பண்ணும்போது, கோப்பாபிராணயம் அஷ்டாங்கயோகம் நிலையாக ராத்திரிக்கு யிரண்டுசாமம், ஆரப்பாயறிந்துநன்றாய்ச் செய்தபேர்க்கு அப்பனேதமர் வாசல் திறத்தல்கேளு, வாரப்பாவருஷமது அரைதான்பண்ண வரியாக நிளநீர்போலிருக்கும்பாரே 1370

இளநீர்முப்பதில்பாலேடுபோல் இரண்டுவருஷத்தில்

கீழ்நீர்போல்பாயும்

இருக்குமடா தமர்வாசல் திறந்துநிற்கும் இகபாமாயமூர்தமது சொரிக்கும்பாரு, மருக்குமடா மனங்களெல்லாம் நிர்த்தியாகும் வகையாக முப்பதிலே கேளுகேளு, அருக்கமடா யஷ்டாங்க பிராணபாமம் அப்பனே சிவயோகம் பண்ணுர்தோறும், பெருக்கமடா பாலேடுபோ லிருக்கும்பாரு பேரானதமர்வாசல் புதுமைகேளே 1371

நாற்பதில் கஞ்சியேடுபோலமூர்தம் பாயும்பருவம்

கேளப்பாவருஷமது ரண்டுக்குள்ளே கீழ்நீர்போலென்னேரம் அமூர்தம்பாயும், வாளப்பாவாசலது திறந்துநிற்கும் வகையான அண்டமெல்லாங்காணும்பாரு, நாளப்பாநாற்பதுமேகேளு கலடாகக்கஞ்சியுடயேடுபோல்நிற்கும், மூளப்பாவருஷமது மூன்றுக்குள்ளே முன்பாகத் தமர்வாசல் நிறக்கும்பாரே 1372

பாரப்பாவருஷமது ஐம்பதானல் பரிவாகஅஷ்டாங்கயோகம்பாரு, நேரப்பாவாசியுட யோகம்பாரு நிலையாகச்சிவயோகம் நிகழ்ந்துபாரு, ஆரப்பா அதிரசம்போல் வாசல்நிற்கும் அப்பனேவருஷமடா அஞ்சக்குள்ளே, தேரப்பாவாசலது திறந்துநிற்கும் திறமாக அண்டமெல்லாந் தெளிவாய்க்காணும். 1373

காணுமடாவருஷமது அறுபதானல் கடினமடாவாசலது திறத்தலாக, பூணுமடாபிராணபம் வாசியோகம் பெரிதானசிவயோகம் புரிந்துபாரு, ஓணுமடா ஓட்டைபோல் வாசிநிற்கும் உத்தமனேவருஷமது வெட்டுக்குள்ளே, தோணுமடாவாசலது திறந்துநிற்கும் திறமாக அண்டமெல்லாந் தெளிவாய்ப்பாரே 1374

பாரப்பாவருஷமது யெழுபதானல் பரிவாகத்தர்மவாசல் திறத்தல்காணும், சேரப்பாஅஷ்டாங்க யோகப்பாரு நிலையானவாசியுட யோகம்பாரு, சேரப்பாசிவயோகம் பிராணபாமம் செயலாகமனம்புரிந்து பாரு பாரு, தேரப்பாதேங்காய்போ லிருக்கும்பாரு தெளிவாகத்திறக்கிறது கடினமாமே 1375

ஆகுமடாகுருமுறையால் கற்பங்கேளு அப்பனே மண்டலந்தா னூறுகொள்ளு, வாகுமடாவருஷமது பத்துக்குள்ளே வழியாகவாசல துதிறத்தல்காணும், பாகுமடாபரவெளியும் பரந்துகாணும் பரிவாக அண்டத்திற் சோதிகாணும், ஏகுமடாயென்னாலைப் பார்த்தபேர்க்கு இகபரமாய்க்காயமது சித்தியாமே 1376

ஆமேதான்வருஷமது பதினைந்தப்பா அப்பனேஆத்தாள்தா னமூர்தமீவாள், பாமேதான்பின்பக்கம் பாயும்பாரு பாங்கான அமூர்தமது சொரிக்கும்பாரு, தாமேதான்வருஷமது முப்பதாகுந் தாக்காகஅமூர்தமது என்னேரந்தான், வாமேதான்வழியாக வருதல்காணும் வகையாசப்பசிதீரும் வாய்வுகாணும் 1377

காணுமடா நாற்பதுக்கு மேலேகேளு கடினமாய்மனமடக்கி நின்றயானால், தோணுமடா அமூர்தமது யென்னேரந்தான் துலாவினுடமுள்ளதுபோல் தோணும்பாரு, பூணுமடாஐம்பதுக்கு மேலேகேளு போக்காகசிறுநீர்போல் பாயும்பாரு, ஆணுமடாஅறுபதுக்கு மேலே கேளு அப்பனேயமுர்தமது கடினமப்பா 1378

கடினமடாயென்னேரம் அமுர்தம்பாய காண்கவே நிட்டையிலே பொருந்திநின்றால், வடினமடா பனித்துளிபோலிறங்கும்பாரு வகையாகயெழுபதுக்கு பாய்தல்கேளு, ஓடினமடாநிஷ்டைபெற்று உறங்கினோர்க்கு உத்தமனே ஒருவேளை பாயும்பாரு, அடினமடா அறுபதுக்கு மெழுபதுக்கும் அப்பனேவருஷமது ஐம்பதாமே 1379

## இருக்கநடத்தை,

ஆமேதான்வருஷமதுஐம்பதானால் அப்பனே அவர்களுக்குஅதிககம்பாயும், பாமேதான்பரையினுடசோதிகாணும் பாங்காகயிவர்களுக்கு நடத்தைகேளு, தாமேதான்ரவிமுகத்தில் போகவேண்டாம் தாக்காகஒருவேளைபோனாராகில், காமேதான்காதடைக்குஞ் சுழன்றுகாணும் காணவேயிருப்பிடத்தில் வந்தாற்கேளே 1380

கேளப்பாயெப்போதும்போல் பாயும்பாரு கீழ்நீர்போலமுர்தமது சொரிக்கும்பாரு, நாளப்பாயிவர்களுக்கு அப்படியேசிற்க நலமாகவருஷமதுநாற்பதுதானப்பா ஆளப்பா அப்படியேநடந்தாராகில் அப்பனே காயமதுதேறும்பாரு, காளப்பாகற்பமுறையேறல்கேளு கடினமாய்க்கற்பத்தைக்கொண்டுவாநீ, 1381

## கற்பகங்கொள்ளக் காந்தக்கிண்ணம்.

கொண்டுவாகற்பத்தைக்காந்தக்கிண்ணம் கொப்பெனவே அதிகாஸம் உள்ளேதாக்கி, அண்டுவாய்மண்டலந்தான் திசைநூறப்பா அப்பனேகாந்தமது அடுக்காவிட்டால், துண்டுவாபேய்த்தேத்தான் பாத்திரத்திநிலே தூக்காகயெல்லாந்தான்கொண்டுவாநீ, விண்டுவாய் வேம்பதுதான் வருஷம்நூறு விளங்கினதோர்பாத்திரத்தில் கொள்ளுகொள்ளு. 1382

கொள்ளப்பாகாந்தத்திற்கொண்டாயாகில் கூடுமடாவருஷமதுபத்துக்குள்ளே, பொள்ளுமடாபேய்த்தேத்தான் பாத்திறத்திற்கொள்ளப் புகழானவருஷமதுயிருபதப்பா, வெள்ளுமடா வேம்பினுடபாத்திர்த்திற் கொள்ள விளங்கினதோர்வருஷமது முப்பதாகும், அள்ளுமடாயிதற்கடுத்த பத்தியத்தைக்கேளு அப்பனேயென்னோம்போகங்காணே, 1383

## கற்பத்துக்குப் பத்தியம்,

காணுமடாபச்சரிசியாகுமேதான்காணவேபுழுத்தலுடஅரிசியாகும், வேணுமடாமத்தியானகாலம்வேணும் விதிமுறையாயிடைநடுவேவேண்டாமப்பா, பூணுமடாஆவின்பால் ஆவிநெய்தான் பெருகியதோர்ஆவினுடதயிர்தான்தள்ளு, தோணுமடாகாய்கிழங்கு தள்ளக்கேளு தொக்குமான்கத்திரிக்காயாகும்பாரே, 1384

ஆகுமடாஅவரைக்காய் முருங்கைக்காய்தான் அப்பனேபீர்க்குடனே புடலுமாகும், வாகுமடாகொத்தவரைவண்டிக்காய்தான் வகையானஅரைக்கீரை சிறுகீரையாகும், போகுமடாபொன்னேயென்றகாணியாகும் புகழானசிறுபருப்புபச்சையாகும், வேகமடா அடத்தடுத்துக்கூட்டவேண்டாம் விளங்கினதோர்ராக்காலம்பாலுங்கூட்டே 1385

கூட்டப்பாவருஷமதுயிருபதாகும் கூறுகிறேனுப்பதுதான்பார்த்துக்கூட்டு, நாட்டப்பாயிப்படியேநடந்தாயாகில் நலமானகாயமது சித்தியாகும், ஆட்டப்பாஅப்புறத்தின்வித்தைகேளு அப்பனேபச்சரிபால்தானுகும், மாட்டப்பாயென்னோம்யோகசிட்டைவகையானபிராணயமாட்டுமோட்டே, 1386

மாட்டப்பாயிப்படியேவருஷம்நூறு வகையாகப்பாலன்னம்மாட்டுமாட்டு, ஆட்டப்பாஅப்புறந்தான்வருஷம்நூறு அப்பனே அன்னமட்டு

ம் அடுக்கவேண்டும், நாட்டப்பாகாய்கனியும்தேனும்நாட்டு நலமானபத் தியத்தி னடத்தையாகும், ஓட்டப்பாவென்னேரம் வாசியோகம் உத்தம னேசிவயோகம் ஒட்டு ஒட்டே 1387

ஓட்டைத்தானுயிலேதான் தள்ளிப்போடு உத்தமனே பிராசிலேயும் வாழைகூட்டு, நாட்டிடத்தான்காய்கிழங்கு தள்ளக்கேளு நலமானவா ழைக்காய் வாழைத்தண்டு ஆட்டிடத்தா னகத்தியுட கீரைதள்ளு அப்பனேவாழையுட பூவைத்தள்ளு, காட்டிடத்தான் கருணையென்ற கிழங்கைத்தள்ளு, கடிதானவுரலவள்ளிக் கிழங்குதள்ளே 1388

தள்ளடாவுருளையென்ற கிழங்கைத்தள்ளு தாக்கான செம்பினுட கிழங்கைத்தள்ளு, அள்ளடா ஆள்வள்ளிக் கிழங்கைத்தள்ளு அப்பனே வள்ளியுட கிழங்கைத்தள்ளு, எள்ளடாயெண்ணெயுடன் புண்ணாக்கு தள்ளு யியலானபூசனிக்காய் கடுகுந்தள்ளு கள்ளடாகலியாணக் காயை த்தள்ளு காணவேகூழ்பாண்டம் ஆகாதப்பா 1389

ஆகாதுபிடுங்கீரையாகாதப்பா அப்பனேமுருங்கையுட கீரையாகு ம், வாகாகவகைவிபர மாகச்சொன்னேன் வழியாகயிப்படியே நடக்கவே ணும், தூகாகனூதுவளை யிலைகாயாகும் தூக்குமடாசிவயோகந் தாங்கி ப்பாரு, காகாகற்பமுறை யெல்லாஞ்சொன்னேன் கடினமடா புகையி லைதான் தள்ளிப்போடே 1390

தள்ளியல்லோ யிப்படியே நடந்தபேர்க்கு தாக்குமடா சிவயோக ஞ்சித்தியாகும், அள்ளியல்லோ பிராணுடமாகும்பாரு அப்பனேவாசியு டயோகங்காணும், வெள்ளியல்லோகாயமது தங்கமாகும் விதிமுறையா யிப்படியே நடந்தோர்க்கப்பா, தெள்ளியதோர் ஆத்தாள்தா னமூர்த மீவாள் தெளிவாகவமூர்தமது திரளும்பாரோ 1391

பாரப்பாபொய்முகர்க்கு கேளுகேளு பரிவானமுகமதுதான் வேர் க்கும்பாரு, கோப்பாமனங்கலங்கும் வாய்பதைத்துநிற்கும் நெறியாகப் பொறிஐந்து மடங்கிநிற்கும், காரப்பாகர்மயிந்திரியமைந்துங் கடிதாக வெளியதுதான் காணும்பாரு, ஆரப்பாஆங்கார மடங்காதப்பா அப்ப னேயவர்களுடன் ஆடலாமே 1392

மந்திரம் சித்திப்பவர்கள் ஞானம்சித்திப்பவர்கள்
அவையோக கோனமழிலே.

ஆடலாம் அங்கமது பிரிந்தோர்க்கப்பா அப்பனேபல்லதுதான் போ குதுழந்தான், நாடலாங்காதுகண் ஒளி பின்னமாகில் நலமான கால்கைகள்

பின்னமானால், தேடலாஞ்சிதம்பரமும் பாலேகூட தெளிவானபிராணயங் கிட்டும்பாரு. ஓடலாஞ்சூனியத்தின் மந்திரங்களெல்லாம் உத்தமனே கிட்டாது ஓடிப்போமே 1393

போகுமடாகாயத்தில்பின்னங்கேளு பெரிதானபாயுருதான்பாணி பாதம் ஓசமடா உபஸத்தத்தோடாக்கி ரணமாகும் உத்தமனேசிக்ஙவை யும் தொக்குசட்சு. தோகவடாதோத்திரத்தோ டைம்பதாகத் தூக்கா கயிதுகளிலே பின்னமாகில், வேகமடாசிவவித்தை யெல்லாம்வேகம் விதியில்லாச்சூனியங்கள் விண்டுபோமே 1394

போமேதான்முன்சொன்ன சமாதிநிட்டை பெரிதான யோகநிட் டை வாசிநிட்டை, தாமேதான்தத்துவத்தில் நிட்டையாகும் தாக்கான சிதம்பரமும்பாலநிட்டை, காமேதானிவர்களுக்குகற்பங்கூடில் காணவே மஞ்சனத்தின் பெருமைகேளு, நேமேதானெல்லிக்காய் பலந்தானாறு நிலையாகநீர்மிளகு பலந்தானஞ்சே 1395

தலைமுழுக கற்பம்.

அஞ்சப்பாகடுக்காய்தான் பலந்தாநாலு அப்பனேவேப்பரிசி பலந் தான்மூன்று, மஞ்சப்பாமஞ்சளது பலந்தான்ரண்டு வகையாக யிவை களைக் கூட்டிக்கொண்டு, பஞ்சப்பாபசுவினுட பாலாலாட்டு பாங்காக வில்லைசெய்து ரவியிற்போடு, நெஞ்சப்பாநிழலுலர்த்திவாகவைத்து நிலை யாகப் பீங்கானில் வைத்துக்கொள்ளே 1396

வென்னீர்காண.

கொள்ளப்பா ஒருவாரங் கற்பமாடு குறியாகயிடைநடுவே பாலா லாடு, வெள்ளப்பா ஒருவாரம் பசுவினெய்தான் விதியாகயிப்படியே ஆ டிவாரீ, அள்ளப்பா ஆடுதற்கு தண்ணீர்கேளு அப்பனே நித்த நித்தம் வென்னீராடு, எள்ளப்பாயிப்படியே நடந்தாயாகில் இகபரமாய்க்காயம து தேறும்பாரே 1397

பாரென்றால்சும்மாதான் பார்க்கப்போமோ பந்தாடும்வாசியைநீ மாட்டிப்பாரு, தேரென்றால்சும்மாதான் தேறல்போமோ தெளிவோடும் வாசிவைத்து மாட்டிப்பாரு, ஊரென்றால்சும்மாதா னூரப்போமோ உத் தமனே வாசியைநீ மாட்டிப்பாரு, சேரென்றால்சும்மாதான் சேர்க்கப் போமோ செயலோடும்வாசியைநீ மாட்டுமாட்டே 1398

## யோகத்துக்கு ஆசனம்.

மாட்டப்பா ஆசனத்தை வகுக்கிறேன்கேள் வகையான கலைமானி னுசனந்தான், எட்டப்பாயெட்டியிலே வேங்கைகேளு மியலன்ன அங் கத்தில் பின்னமாகா, பாட்டப்பாபதினாறு அடிதான்வேங்கை பாங்கான வோலோடே கொண்டுவாநீ, கூட்டப்பாயோகத்துக் கிதுதான்கூட்டு குறியாகயோகமது காணும்பாரே 1399

பாரப்பா கலைமான்முன் காலில்வெள்ளை பாங்காக யிருந்தாக்கால் சிவயோகிக்காம், மாரப்பாமற்றதெல்லாம் வாதிஞானி வகையாகமற்றொ ருத்தர்க் காகாதப்பா, தாரப்பாதாக்தாமாய்ப் பிரித்துச்சொன்னேன் தாக்கானவேடருக்கு யீய்ந்துபாரு, ஆரப்பாஅறிந்தறிந்து நடந்தோர் காகும் அப்பனே ஆதிசத்தி பார்வைகாணும் 1400

## பாலதீட்சை.

காணுமடாபாலசிட்டைக் கருத்தைக்கேளு காணவேஓங்காரங் கூ ட்டிக்கொண்டு ஆணுமடா அய்காரங் கிலீங்காரந்தான் அப்பனே சவு காரங் கூட்டிக்கொள்ளு, ஓணுமடாஓங்காரம் றீங்காரந்தான் உத்தமனே நவீட்டிற் போட்டுக்கொண்டு, பூணுமடாபுருவத்தின் மத்தியப்பா புக ழாகப்பாலசிட்டை புரிந்துபாரே 1401

பாரப்பாமுக்கோண வளையம்போடு பரிவாகமூன்றுபக்கஞ் சூலம் போடு, காரப்பாவாசலது நான்குவிட்டு நலமாக நாலுபக்கஞ் சூலம்போ டு, வாரப்பாவடுகனொடு வீரன்காவல் வகையானகணபதியும் வேலு ங்காவல், ஆரப்பாஅறிந்தறிந்து நடந்தபேர்க்கு அப்பனே பாலையிலே சித்தியாமே 1402

சித்தியாங் கருவிகள்தான் தொண்ணூற்றாறுஞ் செயலாக மனம் புத்தி ஆங்காரஞ்சித்தம், பத்தியாம்பஞ்சயிந்திரியத்தோடும் பாங்கான பஞ்சயிந்திரியமைந்தும், அத்தியாம்ஆதாரமாறுமாகும் அப்பனே ஞான யிந்திரியத்தோடும், புத்தியாய்மனமடக்கி ஒன்றாய்க்கூட்டு பெரிதான காயமது சித்தியாமே 1403

## மூதண்டகியாழம்

சித்தியாம்முன்சொன்னகற்பத்துக்கு செயலாகவாகியது நடக்கும் பாரு, மத்தியாயிடைகடுவேவாசிதப்பில் வகையான பத்தியத்தில் தப்பா

ஞுலும், அத்தியாகற்பத்தில் பின்னமாகில் அப்பனே உபாயமது அறி யக்கேளு, பத்தியாயறுகினுடதட்டைகொண்டு பாங்கான மிளகதுதான் கலந்துகொள்ளே 1404

கொள்ளப்பா மிளகதுதானிருபத்தேழு குறிப்பான அறுகினுட கட்டையப்பா, பள்ளப்பாபலமதுதான் கால்தானும் பாங்காகத் தண் ணீர்தான் பகரக்கேளு, அள்ளப்பா படியதுதானரைதான்வாரு அப் பனே நாலொன்றுப் வாங்கிக்கொள்ளு, எள்ளப்பா யிப்படியே நடந்தா யானல் இபலாககற்பத்துக் கெய்துவாரே 1405

எய்தாது புளியதுதானெய்தாதப்பா மியல்பாகவொருவேளை பு ளிப்புதட்டில், கய்தாதுபோலேயடா யோகம்போகும் கடினமடா திரு ம்புவது கடினமப்பா, அய்தாதுவாசியுடயோகமப்பா அப்பனே யாட லதுமாறிப்போகும், மெய்தாது யிப்படியே விளங்கிச் சொன்னேன் வெளியில்லாக்கற்பத்தின் விபரமாமே 1406

சிதம்பரத்துக்கு வசியமந்திரம்

ஆமேதான் சிதம்பரந்தான் சித்தியாகும் அப்பனே யதற்கடுத்த வித்தைகேளு, காமேதான் கணபதியின்பூசையாலே காணுமடா சிதம் பரந்தானிருபத்தைந்து, வாமேதான் பாலையுடதீட்சையாலே வகையாக விபரமடா யெண்பத்தொன்று, பாமேதான் பழக்கமடா நித்தியம் பண் ணு பாங்கான சிதம்பரத்தை பாருபாரே 1407

பாரப்பாசிதம்பரத்தை யிருபத்தைந்தால் பரிவாகசிறுவீடாய்ப் பதிந்துகொண்டு, நேரப்பாவசியமென்ற வகாரத்தாலே நிலையாக முதல் வரையில் வரிசைகொண்டு, கோரப்பா மறுவரையில் அகாரத்தாலே கூட்டியல்லோ பதிந்துகொண்டு குணந்தான்பாரு, மூரப்பாமூவரையில் நகாரத்தாலே முடிவாகப்பதிந்துகொண்டு முயற்சிபாரே 1408

பாரப்பா நால்வரையில் மகாரத்தாலே பரிவாகப்பதிந்துகொண்டு பாருபாரு, ஆரப்பா ஐவரையில் சிகாரத்தாலே அப்பனே பதிந்துகொ ண்டு ஆட்டம்பாரு, நேரப்பாமேலரையில் ஓங்காரபீசம் நிலையான றீங்கா ரம் ஐங்காரந்தான், தேரப்பாயிப்படியே பதிந்துகொண்டால் தெளிவா ன சிதம்பரந்தான் சித்தியாமே 1409

## மோட்சக்குறி.

சித்தியாம்வாலையுட நிஷ்டைவேணும் சிதம்பரந்தானப்பவல்லோ வசியமாகும், பத்தியாம்பாத்தினுட சோதிகாணும் பரிவான சிதம்பரந் தான் பழக்கமாகும், மூத்தியாமோட்சவித்தின் குறிதான்காணும் மோ கனந்தான் கைவசியமாகும்பாரு, சத்தியாஞ்சிவசத்தி சக்கரந்தானப் பா சகலசித்துமாமேடா சதுராய்ப்பாரே 1410

பார்க்கவென்றால் சும்மாதான் பார்க்கலாமோ பாங்கானகுருவினு ட அனுக்கிரகம்வேணும், தேர்க்கவென்றாலவருக்கு கேட்டதெல்லாம் தெளிவாக அவர்மனதை திருப்திசெய்து, ஊர்க்கவென்றாலொவ்வொ ன்றாய்வாங்கிக்கொள்ளு உத்தமனே ஒன்றுக்கு வருஷம்பாரு, கோர்க் கவென்றாலப்படியே கோக்கவேணும் கோடிதனமீய்ந்தாலும் வாராத தப்பா 1411

வாராதுசிதம்பரந்தான் வகையைக்கேளு வரிசையாயஷ்டவித்தை யாடவென்றால், தோராதுசிதம்பரந்தான் தோராதப்பா துரிதத்தைக்கட ந்துநின்றால் தூக்கியாகும், ஏராதுசிதம்பரத்தை யீக்தபேரையெளிதாக நினைத்துவிட்டாலேறாதப்பா, பாராது சிதம்பரந்தான் பாராதப்பா பாங் காகவந்தவித்தை யெல்லாம்போமே 1412

போகுமடா அஷ்டாங்கயோகம்போகும் பெரிதானவாசியுடயோ கம்போகும், வேகமாங்குருவினுடவேகமெத்த விதிமுறையாய்ச் சொன் னமுறைமறந்திட்டாக்கால், காகமடாபோலேயது பறப்பார்பாரும் கா ணுதபருந்ததுபோலவார்பாரும், நாகமடாசிதம்பரந்தா னுநமப்பா நல் நாகம்போலேயடா பழக்கம்பாரே 1413

## சிதம்பரம் எண்பத்தொன்று,

பாரப்பாசிதம்பரத்தை யெண்பத்தொன்றால் பரிவாகநவீட்டில் வகாரமாட்டு, நேரப்பாவீடதுதா னெட்டுக்குள்ளே நிலையான அகாரத் தை மாட்டுமொட்டு, வாரப்பா பதினாறுவீட்டுக்குள்ளே வரிசையுட னகா ரத்தை மாட்டிக்கொள்ளு ஓரப்பா யிருபத்துநாலுவீட்டில் உத்தமனே மகாரத்தை மாட்டிக்கொள்ளே 1414

கொள்ளப்பாமுப்பத்திரண்டுவீட்டில் குறிப்பானசிகாரத்தை மாட்டிக்கொண்டு, நள்ளப்பாநடுவீட்டில் ஓங்காரந்தான் நலமான றீங்காரம் ஐங்காரந்தான், மூள்ளப்பா முப்பத்திரண்டுவீட்டில் வெளியாகச் சூலமது மிட்டுக்கொள்ளு, அள்ளப்பா அப்படியே ஆடுங்தோறும் அப்பனே சிதம்பரந்தானும்பாரே 1415

சிதம்பரமோகனம்.

ஆடுமடாமோகனத்தையறியக்கேளு அப்பனே சிதம்பரத்தை இருபத்தைந்தால், நாடுமடாமுதல்வரையில் மகாரம்நாட்டு நலமானவீடது தான் மூன்றுக்குள்ளே, ஓடுமடா ஓங்காரம் ரீங்காரந்தான் உத்தமனே ஐங்காரம் உயரப்போடு, வாடுமடாமறுவரையில் சிகாரமாட்டு வரியான மூன்றுவரைவகாரமாட்டே 1416

மாட்டப்பாவரைதானும் நாலுக்குள்ளே வரிசையுட அகாரத்தை மாட்டிப்போடு, ஆட்டப்பாவரைதானும் அஞ்சுக்குள்ளே அப்பனே நகாரத்தைமாட்டிக்கொண்டு, மூட்டப்பா முதல்வரையைத் தொட்டுக் கொண்டு வெளியெல்லாஞ் சூலத்தைமாட்டிப்போடு, நாட்டப்பா வுன்மனைதச் சக்கரத்துக் குள்ளே நலமாகப் பூரணத்தை நாட்டிப் பாரே 1417

சிதம்பரமெண்பத்தொன்று மோகனம்.

பாரப்பாசிதம்பரத்தை யெண்பத்தொன்றில் பரிவான மோகனத்தைப்பார்க்கவென்றால், நேரப்பாநடுவீட்டில் மகாரமாட்டு நிலையான வீடதுதானெட்டுக்குள்ளே, சீர்ப்பாசிகாரத்தை மாட்டிக்கொண்டு சிறப்பான சோடசத்தில்வகாரமாட்டு, ஈரப்பாயிருபத்துநாலுக்குள்ளே யிருப்பான அகாரத்தைமாட்டுமாட்டே 1418

மாட்டப்பா முப்பத்திரண்டுக்குள்ளே மனம்வரவே நகாரத்தை மாறிப்போடு, மூட்டப்பா முப்பத்திரண்டுக்குள்ளே வெளியாகச் சூலத்தைமாட்டிக்கொண்டு, நாட்டப்பாவரைதானும் நால்தான்போடு நலமாக வாசலது நால்தான்காணும், ஓட்டப்பாவரைக்குள்ளே சிரிங்காரமெட்டு உத்தமனே மோகனத்தி னுறுதிபாரே 1419

பாரப்பா மோகனத்தை பார்த்தபேர்கள் பரிவான ரிஷிகளிலே கோடாகோடி, நேரப்பா சித்தரிலேயனந்தங்கோடி நிலையான ஞானிக

ளில் நிலைத்தபேர்கள், ஊாப்பாயனக்தமுண்டு சொல்வேன்கேளு உத்தமனே மோசனத்தின் பெருமைமெத்த, ஆரப்பா அறிந்து நன்றாய்ச் செய்தபேர்க்கு அப்பனேமோகனந்தான் சித்தியாமே 1420

சித்தியாஞ்சித்தினுடவாலைகேளு சிதம்பரத்தில்மோகனமும் வசியம்வேணும், உத்தியாம் அகாரமது உள்ளேபோடு உத்தமனே ரீங்காரம் வளையம்போடு, பத்தியாய்க்கோணமது மூன்றேபோடு பாங்கான கோணத்திற்சூலம்போடு, சத்தியாயிடைப்பக்க ஐங்காரந்தான் சதுரான சிரசினில் கிலீங்காரந்தான் 1421

தானனவலப்பக்கஞ்சவுங்காரந்தான் தாக்காக அதின்பேரில் பிரணவத்தைப்போடு, வானனவலப்பக்கம் வங்கென்றுவாங்கு வகையான யிடதுபக்கம் நங்கென்றுமாட்டு, சீனனசிங்கென்று பக்கம்பூட்டு சிதையாமலதினெதிரேயங்கென்றேத்து, நானனவாசலது நாலுகாணும் நலமான அதற்குள்ளே சூலம்போடே 1422

போடப்பா சூலமதுயெட்டும்போடு பெரிதானசந்தனந்தான் வைக்கவேண்டாம், வேடப்பாசிதம்பரமும் சித்துவாலை வெளியில்லாச்சிவயோகங்காணவென்றால், ஆடப்பா அறிந்தவரைக்கண்டுவாங்கு அப்பனே சிலைகளைத்தான் வாஙகிக்கொண்டு, ஏடப்பா யிப்படியே ஏற்றிவாநீ எளிதல்ல சிவயோகக்காணும்பாரே 1423

நவசாபந்தீர்க்கைமுறை.

பாரப்பா மயேஸ்பரத்தில் பூசைகேளு பரிவான தேவியைத்தானிறுத்திக்கொண்டு, நேரப்பா நால்வரைத்தான் காவல்வைத்து நிலையாகவஸ்துவுக்குஞ்சுத்திக்கப்பா, ஆரப்பா சாபமதுயிட்டதென்றால் அப்பனே யடவாகச்சொல்வேன்கேளு, ஏரப்பா என்னுடைய சாபமொன்று யியலானகேசருட சாபமொன்றே 1424

ஒன்றான சுக்கிரன்றன்சாபமொன்று உத்தமனே வசித்தால் சாபமொன்று, அன்றானஐவருடசாபங்கேளு அப்பனே பைவரிலே பிரமாசாபம், நன்றான விஷ்ணுவுடசாபமொன்று நலமானருத்திரன்றன் சாபமொன்று, மன்றானமயேஸ்பரந்தான் சாபமொன்று வகையான சதாசிவத்தின் சாபம்பாரே 1425

பாரப்பாசாபத்தை நிவர்த்திபண்ண பரிவான கொங்கணர்தன் கா ண்டமூன்று, நேரப்பாகடைகாண்டம் அஞ்னூறுள்ளே நிலையான சாப த்தை நிவர்த்திசெய்தார், ஆரப்பா அப்படியே ஒவ்வொன்றாக அப்ப னே யாறிரண்டு ஆயிரந்தான், ஓரப்பாவொன்பதுபேர் சாபந்தீர்க்க உத் தமனே யெடுத்ததெல்லாஞ் சித்தியாமே 1426

ஆகுமடா லட்சத்தெண்ணூயிரந்தான் அப்பனே உருப்போட்டு அப்பாற்கேளு, வேகமதுதற்பனமும் பதிணாயிரந்தான் விதிமுறையா யெண்ணூறுவகுத்திட்டேனே, ஒகுமடா ஆயிரத்தெண்ணூறப்பா உத் தமனே நூற்றெட்டுப்பிராமணர்க்கு, ஏரமடாயிப்படியே யீந்தாயாகில் எடுத்ததெல்லாஞ் சாம்பிராணிவாடைகாணும் 1427

காணவேவஸ்துவுக்கு வடமாலைசூட்டு கருத்தாகயிருகையி லெடு த்துக்கொண்டு, பூணவே ஒன்பதுபேர் சாபந்தீர்த்து புத்தியுள்ளமைந் தனே புகலுறேன்கேள், தோணவேகுடத்தைவைத்து துவாதசாந்தம் தூக்காகப்பார்த்துநன்றாய் தூரியம்பார்த்து, வாணவேகாலதுதான் மூ ணுபேரில் வகையாகவைத்துவிட்டு வரிசைகேளே 1428

பூசைக்கு கும்பவ்ரிசை.

கேளப்பாபுத்திக்கு பூமாலைசூட்டி கெடியாகப்பாத்திரந்தான் ஆறு வைத்து தேளப்பாவஸ்துவது நிரம்பவிட்டு தெளிவாக வாலையைத்தான ர்ச்சித்தப்பா, நாளப்பாயிப்படியே நாள்தோறுந்தா நலமாகமயேஸ்பாத் திலழுந்துவாய்நீ, ஆளப்பா ஆதிசத்த பீடங்காணும் அப்பனே கும்பதி கம் வேண்டாம்பாரே 1429

பாரப்பா ஆதாரம் ஆறுண்டப்பா பரிவானதேவதைதான் ஆறேயு ண்டு, நேரப்பாயிதற்கதிகம் வேண்டாம்பாரு நிலையாகஇவரைத்தானிறு த்தலாகும் மூரப்பாமூவரவ ராகும்பாரு முன்பாகயிருவரவர் சிவமுஞ் சத்தி. ஓரப்பா ஒருவர்நின்று செய்தாராகில் உத்தமனே பலனதிக மொன்றுண்டாமே 1430

உண்டாகும்பாத்திரந்தா னாறுவாங்கு உத்தமனே யிருவர்நின்றால் தேவையில்லை, நன்றாகயிருவர்நின்று லுத்தமமாகும் நலமாகஆறுக்குள் நயந்துபாரு, ஒன்றாகஒன்றுக்கு பாத்திரந்தான்மூன்று உத்தமனேயிட க்கையில்கொடுத்துவிட்டு, வன்றாகவலக்கையில்சுத்தியீந்து வகையாகச் சாபத்தை நிவர்த்திபண்ணே 1431

பூசைக்கு நாள்.

பண்ணப்பாவாரமது கேளுகேளு பரிவானசுக்கிரவாரம் சோமவாரம், அண்ணப்பா அமாவாசை பருவந்தானும் அப்பனே கிராணவுச்சகாலந்தன்னில், கண்ணப்பாநவராத்திரி காலந்தன்னில் நலமானகலசத்திலாவானம்பண்ணு, ஒண்ணப்பா ஓமமது ஆயிரந்தான் உத்தமனேசெய்துநன்று யுறுதிபாரே 1432

பாரப்பா ஓமத்தின் சமர்த்தைக்கேளு பரிவானதாமரையின் பூவிற்கண்டு, நேரப்பாஒருசாண்தான் வைத்துநன்றாய் நிலையானநூல்களெல்லாஞ் சுற்றிக்கொண்டு, ஆரப்பா ஆயிரந்தான் ஆபூதிபண்ண அப்பனே பலனதிகம் கோடாகோடி, வேரப்பாநூலேத்தான் திரியாய்ச்செய்து விளக்கிட்டு நெய்விட்டு வெளியாய்க்காணும் 1433

காணுமடா சிதம்பரர்க்கு வில்வத்தாலே காணவேஆயிரத்து வெட்டுமீப, தோணுமடாசிவயோகம் அஷ்டாங்கந்தோன்றும் துரிதத்திலாத்தாள்தான் தெரிசிப்பாள்காண், பூணுமடா வுன்மனதை யதிலேபூணு புகழானமோகனமும் வசியுமாகும், நாணுமடாபுத்திரனுஞ் சம்பத்தாகும் நலமாகலோகமெல்லாம் நாட்டமாமே 1434

நாட்டமாயிப்படியே சிதம்பரந்தான்கோடி நலமான வாலையடா கோடிபண்ணு, வாட்டமாம்வாலைக்கு வாலைபீசன் வகையாகசிதம்பரர்க்கு சிவபீசந்தான, ஒட்டமாவுருப்போட்டு கணக்கைஎண்ணு உத்தமனே கெட்டதெல்லா மீவார்பாரு, ஆட்டமா ஆகாயசித்தர்வந்து அப்பனே குளிகையது யீவார்பாரே 1435

நித்திரைக்கு குணம்.

பாரப்பா சிவயோகம் பண்ணும்பேர்க்கு பரிவாக நித்திரைதான் வேண்டாமப்பா, நேரப்பா ராக்கால நித்திரைதான்பண்ண நிலையாகச் சூட்சமென்று நிகழ்த்துறேன்கேள், வாரப்பாவரிசையாய்க் கால்தானீட்டி வயைாக நித்திரைதான் பண்ணவேண்டாம், தீரப்பா ஒருபக்கமாகச்சாய்ந்து உத்தமனே மேற்றைவை மேற்கொள்வாயே 1436

கொள்ளப்பா வொன்றின்மேல் சாய்ந்துகொண்டு குறிப்பாகநித்தி ரைதான் செய்துநீகை, அள்ளப்பா அஷ்டாங்கயோகம்பாரு அப்பனே சிவயோகம் வாசியோகம், கள்ளப்பா பிராணயமவுனயோகம் நலமான கெவுனத்தின் யோகம்பாரு, வள்ளப்பாவாசிபது கீழ்நோக்காது வகை யாகமேனோக்கியேறும்பாரே 1437

ஏறுமடா சுவாசமது எரிப்பாயும் இகபாமாயமூர்தமது சொரிக் கும்பாரு, வாறுமடா வண்டில்போல் சுழன்றுகாணும் வகையாக நித்தி ரைதான் வேண்டாமப்பா, தாறுமடாதமர்வாசல் திறந்துதானல் தாக் கானதேவியவள் தெரிசிப்பாளே, ஆறுமடா ஆறுதல மறியக்காணும் அப்பனே தேவதைதான் ஆறுங்காணும் 1438

காணுமடா அஷ்டாங்க யோகங்காணும் கடிதானசிவயோகங் கா ணும்பாரு, பூணுமடா பிராணயம் வாசியோகம் பெரிதானகவுனத்தின் யோகங்காணும், தோணுமடா மவுனத்தின் யோகங்காணும் துாக்கான சிதம்பரத்தினடனங்காணும், ஆணுமடாஆதிசத்திநடனங்காணும் அப் பனே நித்திரையையறிந்துபண்ணே 1439

பண்ணப்பாகவநாட்டு சித்தர்கேளு பாங்கானவுபரமடா மனோதா ணுகும், தெண்ணப்பா நூற்றிலொன்று தென்னைபோலே துாக்காக நிற் பார்கள் திறத்தைக்கேளு, அண்ணப்பா அருணைநிறம் போலேபாரு அப்பனே சங்கநிறம்போலேபாரு, பொன்னப்பா பொற்சிலையோல் கோடாகோடி பெரிதானவச்சிரமடா திரேகம்பாரே 1440

பாரப்பா அவர்களுட பெருமைகேளு பாங்காகச்சித்ததுதா னதி கமப்பா, கேரப்பா அவர்கள்கண்ட யுகந்தான்கேளு நிகழ்த்துகிறேன் கோடியுகங்கண்டபேர்கள், ஆரப்பா அவர்களுட பெருமைகண்டோர் அப்பனே கொங்கணர்தானறிவார்பாரு, ஏரப்பாயெழுநூறு கோடிசித் தர் இபலாகமலைதோறு மிருப்பார்பாரே 1441

இருப்பார்கள் ரவிகுளிகை வாயில்தாக்கி யியலாகநாள்தோறும் வளர்வாரப்பா, நெருப்பாகச்சோதியது காணும்பாரு நிலையாகக்கண்ட வர்க்கு பயந்தான்றேன்றும், மருப்பாக மலைதோறும் நிற்பார்பாரு வகையானவமூர்தமது யென்னோரந்தான், அரிப்பாக சொரிக்குமடா அவர்களுக்கு அப்பனே யமூர்தமதுபாயும்பாரே 1442

பாரப்பாதிருமூலர் மடந்தானஞ்சு பாங்கானதேவதையில் உப தேசித்து, ஏரப்பாவெழுநூறு ஆயிரந்தான் இயலாகவருடமது உண் டாச்சப்பா, ஆரப்பாஅவர்களுக்கு குளிகையீந்தோர் அப்பனேதிருமூ லபயந்தார்பாரு, பேரப்பாஅவர்களுட கணக்கைக்கேளு பெரிதான ஆயி ரந்தான் கோடியாச்சே 1443

ஆச்சப்பாதிருமூல வர்க்கமெத்த அங்கங்கேமூலகுரு வர்க்கங் கோடி, நாச்சப்பா நடுமூலங்கண்டபேர்கள் நலமாகச்சித்திக்கும் பாரு பாரு, வாச்சப்பா அவர்களுக்கு கணக்கோயில்லே வகையாக அவர்களு ட அடையாளந்தான், கோச்சப்பா கொஞ்சிபென்ற சடைதானெற்றை குறியெல்லாமைந்தரைப்போ லிருப்பார்பாரே 1444

இருப்பார்கள் பாதுகையும்படிகமாலே யிடதுகையில் பிரம்பொ ன்று யிருக்கும்பாரு, வருப்பாகவலதுகையில் தெண்டுகோலும் வகை யான மாத்திரைக்கோல் புத்தகந்தான், நெருப்பாகயோகத்தி லிருப் பார்பாரு நிலையாக அஷ்டாங்கமாவோர்கள், அருப்பாக அப்படியே கோடாகோடி அப்பனேதிருமூலர்வர்க்கம்பாரே 1445

பாரப்பா மாந்தரிலேசித்தாகப் பரிவாகச்சிவயோகி யாகவென்று ல், கோப்பாரிஷிகளாவராகவென்றால் நிலையாக ஞானிகள்தா னுகவென் றால், ஆரப்பாகணபதியும் ஆலயந்தான்கட்டு அப்பனேயவர்களுக்குப் பூசைசெய்ய, சீரப்பாசிவனுடைய ஆலயத்தைக்கட்டு சிறப்பாகத் தரு மத்தைச் செய்துவாரீ 1446

வருகையிலே நாள்தோறும் வளரும்பாரு வகையான தர்மமது கோடியாகும், பெருகையிலே கணபதியினருளினாலே பெரியோர்கள் வந்துநன்றுயுபதேசிப்பார், அருகையிலே சிதம்பரமுஞ் சித்தியாகும் அப்பனே வாலைபது சித்தியாகும், உருகையிலே சிவயோகம் பிராண யோகம், உத்தமனே குளிகையது காணும்பாரே 1447

பாரப்பா வொருகாலம் கல்லாமண்டம் பரிவாகவொருகால மண் ணுமண்டம், கோப்பா வொருகாலம் விருட்சமாகும் நிலையாகப்பா வெளியாய் நிற்கும்பாரு, ஊரப்பா வொருகாலம் சலமாமண்டம் உத்த மனே யொருகாலந்தீயுமாகும், வேரப்பா வொருகால மனிதராவார் வி த்தகரேவித்ததுதா னுவார்பாரே 1448

யுகத்திருப்பம்.

பாரப்பாவொருகாலம் அண்டங்கேளு பார்க்கையிலே தேவதை தானுவார்பாரு, நேரப்பாவொருகாலம் அண்டங்கேளு நிலைபாக ராட்சதர்கள் நிகழ்த்துவார்கள், ஊரப்பா வொருகாலம் அண்டங்கேளு உத்தமனே புஷ்பமது ஆகும்பாரு, காரப்பாவொருகால மண்டங்கேளு காடதுதானுகுமென்று காட்டினாரே 1449

காட்டினாராவணனும் ராமர்கூட காணவே பதினெட்டு தரந்தான் வந்தார், பூட்டினர் பாண்டவருந்திரிதராட்டன் பெரிதாக பதினெட்டு திரமேவந்தார், சூட்டினிரணியனு மிரணியாட்சன் சிராகப்பனிரண்டு தரமேவந்தார், மூட்டினர் சுப்பிரமண்யர் சூரபத்மன் முன்பாக மிருபத்திருவர்வந்தார் 1450

வந்தார்தானிப்படியே யிருக்கிறேனே வகைபாக வெழுநூறுயுகந்தான்கோடி, பந்தாக அண்டமெல்லாம் ஆட்டுறூர்கள் பாங்கானமோரதுதான்சையுதென்று, கந்தாகக்காகத்தின் வடிவைப்போலே காண்கவே பார்த்துநன்று யிருந்தேனப்பா, எந்தாக எந்தனுக்கு கடிகைகேளு யிகபரமாய் கடிகையொன்றே முக்காலாச்சே 1451

ஆச்சப்பாயிப்படியே தாண்டர்சொன்னர் அப்படியே காதாக்களனந்தங்கோடி, வாசப்பா தேவிக்குயிந்தநாள்கள் வகையாகச் சிலம்பொலியின் ஆட்டமொன்று, ஏச்சப்பா யெந்தனுக்கு யிந்தநாள்கள் இகபரமாய் வருஷமது பத்துமாச்சு, மூச்சப்பா கொங்கணர்க்கு வருஷம் நூறு மூலருக்கு வருஷமடா ஐம்பதாமே 1452

ஆகுமடா சட்டைமுனி வருஷங்கேளு அப்பனே வருஷமதுஐம்பதாச்சு, போகுமடா போகருக்கு அறுபதாச்சு பெரிதான அகப்பேய் சித்தர் ஐஞ்னூறப்பா, பாருமடா பாம்பாட்டிச்சித்தர்க்கப்பா பாங்கானவருடமது யெழுநூறாச்சு, வேகமடா கருவூரானெண்டிக்கப்பா வித்தகனே வருஷமது எண்ணூறுச்சே 1453

ஆச்சப்பா அழுகண்ணி சித்தர்கேளு அப்பனே வருஷமது ஆயிரந்தான், பூச்சப்பாபுலத்தியர்க்கு ஆயிரந்தான் பெரிதான புண்ணுக்குயீசர்க்கப்பா, வாச்சப்பாவருஷமது ஆயிரத்தெட்டு வகையான சுருபனந்தர் வருஷங்கேளு, ஏச்சப்பா ஆயிரத்தினெழுபதப்பா யியலான மவுனருக்கு கடிகையேழே 1454

ஏழப்பாயிப்படியே எடுத்துச்சொன்னார் இபலான புசண்டருக்கு ஒன்றேழுக்கால், வாழப்பா அவரவர்க்கு வுயர்ந்ததென்ன வகையாக மற்றவர்க்குத் தாழ்ந்ததென்ன, காழப்பாகெவுனருக்கு உயர்ந்த தப்பா கடிதானமவுனருக்குத் தாழ்ந்ததப்பா, பாழப்பாசமுசார வாழ்க்கை யாலே பாங்காகமனிதரெல்லா மாளுறாரே 1455

மாளுறாரிப்படியே கோடாகோடி மனிதருக்குச் சமுசார வாழ்க் கைமெத்த ஆளுறார் பெண்மயக்கநாட்டத்தாலே, அப்பனே வயதுமெ த்த கொஞ்சமப்பா, நாளுறார்நாள்தோறும் அலைந்து நன்றாய் நாகத்து க்கேதுவாய் நாடிப்போற்றார், தாளுறார் தவமெல்லா மட்டையாகத் தாக் கானசிவயோகங் காணார்பாரே 1456

பாரப்பா பிள்ளையது சித்தராகப் பரிவாகவாசியுட யோகங்காண நேரப்பாசிவயோகம் அஷ்டாங்கயோகம் நிலையானபிராணய மவுனயோ கம், வாரப்பா வாலையுட நிட்டைசெய்ய வகையாகச் சிதம்பரத்தின் பூசைசெய்ய, சாரப்பாசன்னசம் துறவியாகச், சதுராகப் பெற்றவர்க்கு கேளுகேளே 1457

கேளப்பா தகப்பனுக்குந் தாய்தனக்கும் கெடியாகத் தாரமொன் றுவந்தவர்க்கும், வாளப்பா பெண்ணென்ற பிறவியில்லை வகையாகவிரு வருக்கும் புருஷரூபம், ஆளப்பா தகப்பனவன் பிராமணனுமாவான் அப்பனே யவனுக்கு மோட்சமுண்டு, நாளப்பா யிவர்களுக்கு கேளு கேளு நலமாகமோட்சமென்று நவின்றிட்டாரே 1458

நவின்றிட்டாரிப்படியே வந்தபேர்கள் நலமாக அடைந்தவர்கள் கோடாகோடி, விவின்றிட்டா ரிப்படியே ஆனசித்தர் விதம்விதமாய் வந்தவர்கள் விரித்துச்சொன்னேன், கவின்றிட்டார்கவுனத்தின் சித்த ராக கண்டுவிட்டார் குளிகையெல்லாங் கண்டாரப்பா, அவின்றிட்டா ரிப்படியே ரிஷிகளானோர் அப்பனேயனந்தமுண்டு அறிந்துபாரே 1459

பாரப்பா ராவணன்தானொருநாள் கேளு பரிவாகவேதமது நாலுந் தூக்கி, நேரப்பாவேதமென்ற நாலையுந்தா னிலையாகச்சீர்தூக்கிப்பார்க்கு ம்போது, ஆரப்பா ஆயிரத்தெட்டுவேதம் அப்பனே சிக்கறுத்துக் கோர் த்துவிட்டான், ஊரப்பா தீர்தோறும் பரவவில்லை உத்தமனே யப்பவல் லோ தெலுங்குண்டாச்சே 1460

ஆச்சப்பா தமிழினுடபெருமைகேளு அப்பனே யகத்தியன்தான் பன்றாரப்பா, வாச்சப்பாவடுகருக்கும் ஆகும்பாரு வகையான பிராமணர்க்கு மாகும்பாரு, காச்சப்பா கன்னடியர்க்காகும்பாரு கலையானகுச்சிலியர்க்காகும்பாரு, மாச்சப்பாமராஷ்டகர்க்காகும்பாரு மறையான மிலேச்சருக்காகுப்பாரே 1461

பாரப்பா யனைவருக்கும் வேணும்வேணும் பாங்கான க்ஷத்திரியர்க்கு வேணும் வேணும், நேரப்பா வைசியர்க்கு வேணும் வேணும் நிலையான சூத்திரர்க்கு வேணும்வேணும், தேரப்பா துலுக்கருக்கு வேணும் வேணும் தெளிவான கவிங்கருக்கு வேணும் வேணும், ஏரப்பா எடுத்திருக்கும் அண்டத்தோர்க்கும் இயலான தமிழதுதான் வேணும்பாரே 1462

பாரப்பா அதலமென்றும் விதலமென்றும் பரிவான நிகலமென்று ஏழுலோகம், மேரப்பாமேலேழு லோகமுண்டு மெய்யான லோகமடா சத்தியலோகம், ஏரப்பாயிப்படியே கூறினின்றால் இயலான அண்டமடா வொன்றுமாகும், ஆரப்பா ஆயிரத்தெட்டு அண்டம் அப்பனே யவர்களுக்குந் தமிழேவேணும் 1463

வேணுமடா சிதம்பரத்தைப் பார்க்கவென்றால் விரிவானதமிழது தான் வேணும்வேணும், பூணுமடாவாலையைத்தான் பூணவென்றால் புகழாகத்தமிழதுதான் வேணும்வேணும், தோணுமடா சிவயோகம் வாசியோகம் தூக்கவென்றால்தமிழதுதான் வேணும்வேணும், ஆணுமடாயனைவருக்கும் வேணும்வேணும் அப்பனேயனைவருக்தா னறிந்துபாரே 1464

பாரப்பாகிருதயுகத்தில் சித்தரப்பா பரிவான பெருக்கினுட கணக்கைக்கேளு, நேரப்பாகோடியடா ரண்டுலெட்சம் நிலையானதிருதயுகத்தில் லட்சங்கோடி, தூரப்பாதுவாரயுகம் கோடிகேளு தூக்கானஐம்பதென்றஆயிரந்தான், காரப்பாகலியுகத்தில் கோடிகேளு கணக்கானயிருபத்தையாயிரந்தான்பாரே 1465

பாரப்பாயுகந்தோறும் வாசிகேளு பரிவாகயிப்படியே பெருகும்பாரு, வேரப்பாசித்தரென்ற வேரேயெங்கும் விதம்விதமாய்ச் சித்தருடபெருக்கமெத்த, நேரப்பாயிப்படியே ஆயிரந்தான்கோடி நிலையானலட்சமடா கலியுமானல், காரப்பாகணக்கெல்லாஞ் சரியேயாச்சு காணுதபரவெளியி லடங்கும்பாரே 1466

அடங்குவார்சித்தரெல்லா மடங்கிப்போவார் அப்பனேசோதியிலே கலப்பார்பாரு, கடக்குவார்கண்டுநின்றுய் களிகூர்வார்கள் காணுதகாட்சியெல்லாங் காணுவார்கள், கடக்குவார்சிலம்பொலியின் சத்தங்காண்பார் சாஸ்திரத்தை யறிந்துநின்றுய்ச் சத்தங்கேளு, ஒடுங்குவார் நடனசத்தி பாதந்தன்னில் உத்தமனே யொடுங்கிநின்று யுருகுவாரே 1467

உருகுவாரிப்படியே சித்தரப்பா உத்தமனே சித்தருட பெருமை கேளு, வருகுவாருகந்தோறும் வளர்ந்துநிற்பார் வானென்றஅண்டத்திலாடுவார்கள், சருகுவார்சமாதியிலே யடங்கிநிற்பார் சரமானவாசியைத் தா னுட்கொள்வார்கள், பெருகுவாரிப்படியே பெருகிநிற்பார் பேசாத மவுனத்தின் பெருமைபாரே 1468

பாரப்பா கணபதியினுட்டத்தாலும் பாங்கான சிதம்பரத்தின் ஆட்டத்தாலும், கோப்பாவாலையுட ஆட்டத்தாலும் நிலையான சிவயோக நிஷ்டையாலும், வாரப்பா பிராணயம்வாசியோகம் வகையாக மவுனத்தின் யோகத்தாலும், ஏரப்பா யெடுத்ததெல்லாஞ் சித்தியாச்சு யிகபரமாய்ச்சித்தரெல்லா மிப்படியேயானார் 1469

ஆனார்தானிப்படியேயாகுந்தோறும் அப்பனே யவர்களுடபெருக்கைக்கேளு, தானன ஆயிரந்தானூறுகொண்டால் தாக்கானலட்சமடா வொன்றேயாச்சு, கோனைலட்சமது நூறுகொண்டால் கோடியடா வொன்றென்று குறித்துச்சொன்னேன், ஏனார்தானிப்படியே நூறுகொண்டால் பெரிதானஅற்புதத்தின் பருவமாமே 1470

ஆச்சப்பா அப்படியே நூறுகொண்டால் அப்பனே நிற்புதந்தானென்றேயாச்சு, காச்சப்பா அப்படியேநூறுகொண்டால் கருவமது வொன்றுச்சு கணக்கைக்கேளு, வாச்சப்பாநூறதுதான் கொண்டுதாகில் வகையானமகாகர்வமொன்றேயாச்சு, பாச்சப்பாநூறதுதான் பதிந்துதாகில் பாங்கானசங்கமது ஒன்றேயாச்சி 1471

ஆச்சென்றுலப்படிதா னூறுகொண்டால் அப்பனே மகாசங்கமொன்றேயாச்சு, வாச்சென்றுலப்படிதா னூறுகொண்டால் வகையான பதுமசங்கமொன்றேயாச்சு, நாச்சென்றுலப்படியே நூறுகொண்டால், நலமானபர்வமது ஒன்றேயாச்சு, பேச்சென்றுலப்படிதா னூறுகொண்டால் பெரிதான அற்புதத்தின்பருவமாமே 1472

ஆகுமடா அப்படிதா னூறுகொண்டால் அப்பனேநிற்புதத்தின் பருவமொன்று, மாகுமடா அப்படிதா னூறுகொண்டால் வகையான கருவத்தின் பருவமென்று ஏகுமடா அப்படிதாறுகொண்டால் இயலான மகாகர்வம்பருவமொன்று, தாகுமடா அப்படிதா னூறுகொண்டால் தாக்கானசங்கபர்வ மொன்றேயாச்சே 1473

ஆச்சப்பா அப்படிதா னூறுகொண்டால் அப்பனேமகாசங்க பருவமொன்று, காச்சப்பா அப்படிதா னூறுகொண்டால் கடிதானபதுசங்க மொன்றேயாச்சு, வாச்சப்பா அப்படிதா னூறுகொண்டால் வகையான திரிசங்க பருவமொன்று, பேச்சென்ற அப்படிதா னூறுகொண்டால் பெரிதானஅனந்தசங்க மொன்றுமாமே 1474

ஆகுமடா அப்படிதா னூறுகொண்டால் அப்பனேசாகரந்தா னொன்றேயாச்சு, வேதுமடாயிப்படியே னூறுகொண்டால் விரிவானசாகரத்தின் கருவமொன்று, போகுமடா அப்படிதா னூறுகொண்டால் பெரிதானமகாகர்வ சாகரந்தானென்று, தாகுமடா அப்படிதா னூறுகொண்டால் தாக்கானகருவசங்க சாகரந்தானென்றே 1475

ஒன்றப்பா அப்படிதா னூறுகொண்டால் உத்தமனேபதுமசங்க சாகரந்தானென்று, நன்றப்பா அப்படிதா னூறுகொண்டால் நலமான அனந்தசங்க சாகரந்தானென்று, அன்றப்பா அப்படிதா னூறுகொண்டால் அப்பனேதிரிசங்க சாகரந்தானென்று, என்றப்பாயிப்படிதா னூறுகொண்டால் இயலானமகாசங்க மொன்றேபாரே 1476

பாரப்பா அப்படிதா னூறுகொண்டால் பாங்கான அக்ஷக்ஷோணி யொன்றேயாச்சு, நேரப்பா அப்படிதா னூறுகொண்டால் நிலையான க்ஷோணியது ஒன்றேயாச்சு, வாரப்பா அப்படிதா னூறுகொண்டால் வகையானமகாக்ஷோணி வொன்றுமாச்சு, ஏரப்பாயிப்படியே னூறுகொண்டால் இயலானகருவத்தின் க்ஷோணியாமே 1477

ஆகுமடா அப்படிதா னூறுகொண்டால் அப்பனேயனந்தகர்வ க்ஷோணியொன்று, வேகமடா அப்படிதா னூறுகொண்டால் விரிவான சங்ககர்வக்ஷோணியொன்று, தாகுமடா அப்படிதா னூறுகொண்டால் தாக்கானமகாசங்க க்ஷோணியொன்று, போகுமடா அப்படிதா னூறுகொண்டால் பெரிதானதிரிசங்க க்ஷோணியாரே 1478

பாரப்பா அப்படிதா னூறுகொண்டால் பாங்கான அனந்தமகா க்ஷோணியொன்று, நேரப்பா அப்படிதா னூறுகொண்டால் நிலையான மகாபத்ம க்ஷோணியொன்று, ஏரப்பாயிப்படியே னூறுகொண்டால் இயலானதிரிசங்க க்ஷோணியொன்று, போப்பாஅப்படிதா னூறுகொ ண்டால் பெரிதானசங்கத்தின் க்ஷோணியாமே 1479

ஆகுமடா அப்படிதா னூறுகொண்டால் அப்பனே வெள்ளமது ஒன்றேயாச்சு, வேகமடா வெள்ளமென்றால் கணக்கைக்கேளு விரிவான வெள்ளத்தை விளம்புறேனே, ஏகுமடாயிப்படியே னூறுகொண்டால் இயலான அற்புதத்தின் வெள்ளமொன்று, தாகுமடாஅப்படிதா னூறு கொண்டால் தாக்கானசிற்புதத்தின் வெள்ளமொன்றே 1480

ஒன்றப்பாஅப்படிதா னூறுகொண்டால் உத்தமனே கருவத்தின் வெள்ளமொன்று, நன்றப்பா அப்படிதா னூறுகொண்டால் நலமானமகா கர்வ வெள்ளமொன்று, அன்றப்பா அப்படிதா னூறுகொண்டால் அப் பனே சங்கவெள்ள மொன்றேயாச்சு, என்றப்பாயிப்படியே னூறுகொ ண்டால் இயலானமகாசங்கம் வெள்ளம்பாரே 1481

பார்க்கவென்றாலரிதரிது கேளுகேளு பாங்கான கணக்கெல்லாம் பகருறேனே ஏர்க்கவென்றாலப்படியே னூறுகொண்டால் இயலானபது மசங்க வெள்ளமொன்று, தோக்கவென்றாலப்படியே னூறுகொண்டால் தெளிவானதிரிசங்க வெள்ளமொன்று, ஆர்க்கவென்றாலப்படியே னூறு கொண்டால் அப்பனேயனந்தசங்க வெள்ளம்பாரே 1482

பார்க்கவென்றாலின்னமுண்டு கேளுகேளு பாங்கான அற்புதத்தின் பருவவெள்ளம், ஏர்க்கவென்றாலிப்படியே நூறுகொண்டால் இயலான சங்கபர்வ வெள்ளமொன்று, தோர்க்கவென்றாலிப்படியே நூறுகொண் டால் தெளிவானபதுமசங்க பருவவெள்ளம், ஊர்க்கவென்றாலிப்படியே நூறுகொண்டால் உத்தமனே கணக்கினுட உறுதிபாரே 1483

பாரப்பாயிப்படியே நூறுகொண்டால் பரிவானமகாசங்க பருவ வெள்ளம், நேரப்பாயிப்படியே நூறுகொண்டால் நிலையானதிரிசங்க பரு வவெள்ளம், ஏரப்பாயிப்படியே நூறுகொண்டால் இயலான அனந்தசங் க பருவவெள்ளம், போப்பாஅப்படியே நூறுகொண்டால் பெரிதான வாகினிதா னென்றுமாச்சே 1484

ஆச்சென்றால்சும்மாதானாருமோதான் அப்பனேகணக்கெல்லா மறிந்துபாரு, பேச்சென்றா லிப்படியே நூறுகொண்டால் பெரிதான பதுமத்தின் வாகினிதானென்று, வாச்சென்றாலிப்படியே நூறுகொண்டால் வகையான அனந்தத்தின் வாகினிதானென்று, மாச்சென்றாலிப்படியே நூறுகொண்டால் மகாவென்றவாகினிதா னென்றேயாச்சே 1485

ஆகுமடா அப்படியே நூறுகொண்டால் அப்பனேயறிந்துநன்றாய் சொல்வேன்கேளு, ஏகுமடாயென் னூலைப் போலேயில்லை இயலான சித்தரெல்லா மறைத்துப்போட்டார், நாமடா நவகோடி சித்தரெல்லாம் நலமான நூல்தோறும் காட்டவில்லை, வேகமடாயென் னூலி லுள்ளதெல்லாம் விரிவாகவுந்தனுக்கு விரித்துச்சொன்னேன் 1486

சொல்லிவிட்டேனிந்தநூல் பார்த்தபேர்க்கு சீக்கிரமாய் சிவயோகஞ்சித்தியாகும், வல்லிவிட்டவாசியுட யோகங்காணும் வகையான பிராணாயங் காணும்பாரு, அல்லிவிட்ட அஷ்டாங்க யோகங்காணும் அப்பனே சிதம்பரத்தி னட்டங்காணும், மல்லிவிட்டமாய்கையது நீங்கிப்போவாள் வகையான வாலையுட ஆட்டம்பாரே 1487

பாரப்பாதிரிபுரையின் பாவைகாணும் பாங்கானபுவனையுட சோதிகாணும், நேரப்பாகணபதியின் சோதிகாணும் நிலையான சரவணத்தின் சோதிகாணும், வாரப்பாவடுகனுட பார்வைகாணும் வகையானவீரபத்திரன் வரிசைசொல்வார், ஏரப்பாயிந்தநூல் காட்டவேண்டாம் இயலாகயிந்நூலை யுணர்ந்துபாரே 1488

பாரென்றால் வாதமது வேண்டாமப்பா பரிவாகவழலையுப்பு வேண்டாமப்பா, நேரென்றால் செயநீரும் வேண்டாமப்பா நிலையானஅஞ்சுப்பு வேண்டாமப்பா, ஏரென்ற பாஷாண வைப்புவேண்டாம் இயலானபூநீறும் வேண்டாம்பாரு, சாரென்றால் சவர்க்கார சுன்னம்வேண்டாம் சதுரான சாரமது வேண்டாம்பாரே 1489

பாக்கவென்றால் காரமதுவேண்டாம்பாரு பரிவானசாரமது வேண்டாமப்பா, ஏர்க்கவென்றாலிதுகளெல்லாந் தள்ளிப்போடு இயலான கணபதியைப் பூசைசெய்நீ, பேர்க்கவென்றால் சிதம்பரத்தைப் பூசைசெய்நீ பெரிதானவாலையைத்தான் பூசைசெய்நீ, வேர்க்கவென்றால் வெளியில்லாவாசியோகம் விபரமாய்வாசியுட விபரம்பாரே 1490

பார்க்கையிலே சிவயோகம் பண்ணிவாரே பாங்காகத்தமர்திறக்கும் பாருபாரு, ஏர்க்கையிலே யிப்படிலே யிருக்குந்தோறும் இயலான சித்தர்வந்து உபதேசிப்பார், தேர்க்கையிலே சித்தருடவுபதேசந்தான் தெளிவாக அறிந்தவர்க்கு கேளுசேளு, மார்க்கையிலே மவுனத்தின் போகங்காணும் மகத்தான தாயுடையபாதம்பாரே 1491

பாரப்பா தேவியவள் வாதஞ்சொல்வாள் பரிவான சிதம்பரமும் வாதஞ்சொல்வார், நேரப்பா சரவணரும் வாதஞ்சொல்வார் நிலையான வீரபத்திரர் வாதஞ்சொல்வார், காரப்பா கணபதியும் வாதஞ்சொல்வார் காணவேசுந்தியவர் வாதஞ்சொல்வார், வாரப்பாவயிரவரும் வாதஞ் சொல்வார் வகையானயெல்லோருஞ் சொல்வார்பாரே 1492

சொல்லுவாரென்னுடைய நெறிகளெல்லாம் செயலாக விதிப்படிக்கு நின்றுதாகில், அல்லுவாருந்தனுக்கு கணபதியோடாறு அப்பனே யவைகளிலே யொன்றாலும் ஒல்லுவாருபதேசம் செய்தபேர்க்கு உத்தமனே தீங்கதுதானினைத்தாயாகில், செல்லுவார் நரகத்துக்கேது வாதி விளங்கினதோர் நூல்களெல்லாம் விறுத்தமாமே 1493

ஆகுமடா வுபதேசமீய்ந்தபேரை அப்பனே சிவனைப்போல் நினைத்துக்கொண்டு, வேகமடா அவர்மனது வேகமெத்த விதிமுறையாய்ச் சிதம்பரத்தைப் பார்த்தபேர்க்கு, போகமடா சிதம்பரத்தின் போகமெத்த பெரிதானவாலையுடபோகமெத்த, ஏகமடா சிதம்பரமும் வாலையப்பா யியலாக அவர்மனதை திர்ப்திபண்ணே 1494

பண்ணப்பா பறையனென்றபோதாலும் பாங்கான பிராமணன் தானானபோதும், வண்ணப்பாவைசியரிலானபோதும் வகையான க்ஷத்திரியரானபோதும், பண்ணப்பா சிதம்பரமுவாலைபார்த்தேன் பாங்கான யீனவரானபோதும், ஒண்ணப்பா தாய்தகப்பன் சிதம்பரந்தான் உத்தமனே யவர்களுக்கு ஒன்றுபாரே 1495

பாரப்பா சிதம்பரத்தை நினைத்தபேர்கள் பாங்கான வாலையைத் தானினைத்தபேர்கள், வாரப்பாவசியமது யில்லாவிட்டால் வகையாக மனம்வைத்து நினைத்தபோது, ஏரப்பா எடுத்தெடுத்து பார்த்தபோது யியலாக மனம்வைத்து நினைத்தபோதும், ஓப்பாவொன்றுக்ச் சாபமிட்டால் உத்தமனே சாபமது பலிக்கும்பாரே 1496

பாரப்பா முன்சொன்ன கணக்கைகேளு பாங்காக யின்னமொன்று பகருறேன்கேள், நேரப்ப மகாவென்றவாகினிதானாறு நிலையாகக் கொண்டுவிட்டால் நிகழ்த்துறேன்கேள், ஆரப்பா அற்புதத்தின் வாதி

னிதானென்று அப்பனேயிப்படியே நூறுகொண்டால், நேரப்பா நிற்புத
த்தின்வாகினிதானென்று நிலையாகவாகினிதா னூற்பாரே 1497

பார்க்கவேயப்படியே நூறுகொண்டால் பரிவானகருவத்தின் வா
கினிதானென்று, ஏர்க்கவேயிப்படியே நூறுகொண்டால் இயலானமகா
கர்வவாகினிதானென்று, யேர்க்கவே யிப்படிதா னூறு கொண்டால்
பெரிதானசங்கத்தின் வாகினிதானென்று, ஊர்க்கவேயிப்படிதா னூறு
கொண்டால் உத்தமனே மகாசங்கவாகினிதானென்றே 1498

ஒன்றாகயிப்படியே நூறுகொண்டால் உத்தமனே பதுமசங்க வா
கினிதானென்று, நன்றாகயிப்படியே நூறுகொண்டால் நலமான அன
ந்தசங்கவாகினிதானென்று, தின்றாகயிப்படியே நூறுகொண்டால் திற
மாத்திரிசங்கவாகினிதானென்று, என்றாகயிப்படியே நூறுகொண்டால்
இயலானபர்வதத்தின் வாகினிதானென்றே 1499

ஆகுமடா அப்படியே நூறுகொண்டால் அப்பனே யனந்தயர்வ
வாகினிதானென்று, வாகுமடா அப்படியே நூறுகொண்டால் வகை
யானமகாபர்வவாகினிதானென்று, வேகமடா அப்படியே நூறுகொண்
டால் விதிமுறையாயற்புதத்தின் பருவமொன்று ஏகுமடா யிப்படியே
நூறுகொண்டால் இயலான அற்புதத்தின்வாகினிதான்பாரே 1500

பாரப்பாயிப்படியே அண்டமுண்டாம் பரிவானதேவதைக ளுண்
டாவார்கள், நேரப்பா மனிதரென்றகணங்களுண்டாம் நிலையானவானம
து நாலுமுண்டாம், வாரப்பாவானமது தொண்ணூற்றாறு வகையான
சாதியது உண்டாம்பாரு, மேரப்பாமேருவது உண்டாம்பாரு மிதமாக
அஷ்டகிரிவுண்டாம்பாரே 1501

பாரேநீயின்னூல்போ லாருஞ்சொல்லார் பரிவானசித்திமுத லிதி
லடக்கம், கூரேதானின்னூலாயிரத்தைந்நூறாம் குறிப்பானவாயுற
வேதமார்க்கம், சேரேதான் வைப்புமுதல் வயித்தியமந்திரம் செப்பி
னேன் தேரையன்வாக்கு பொய்யா, நேரேதான்மனோன்மணியா ளென
க்குரைத்த நிலையானவயித்திய காவியந்தான்முற்றே. 1502

# தேரையர் வயித்தியகாவியம் 1500

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ சுபபிரமணிய விலாசம் பிரஸ், சென்னை.